மூ—கண்ணபிரானுக்கென்* தையலிழந்ததுதன்னுடைச்சாயே* ‖எ‖
சாயக்குருந்தமொசித்ததமியற்கு* மாயச்சகடமுதைத்தமணாளற்குப்* பேயைப்பிணம்படப்பாலுண்பிரானுக்கென்* வாசக்குழலியிழந்ததுமாண்பே* ‖அ‖
மாண்பமைகோலத்தெம்மாயக்குறளற்குச்* சேண்சுடர்க்குன்றன்னசெஞ்சுடர்மூர்த்திக்குக்* காண்பெருந்

ஆ— திருக்கைகள்திருவடிகள்திருக்கண்களிலழுக்கு மிவள்தோற்றுத்தன்னொளியிழந்தாளென்கிறாள். ‖எ‖
(சாயக்குருந்தம்) திருப்பாற்கடலில்நின்றும் ஸ்ரீவஸுதேவர்திருமாளிகையிலேவந்து திருவவதாரம்பண்ணியருளி க்ருஷ்ணசகடவத்ஸாதிநாநாவிதாஸுர நிரஸநாயாஸஜநிதகண்டிகாமதூகா... திருமுகத்திலழுக்கும் தோற்றுத்தன்னழகிழந்தாளென்கிறாள். ‖அ‖
(மாண்பமை) கொள்வனென்மாவலிமூவடிதாவென்றிரக்கிற ஸமயத்திலே நிரவதிகஸௌந்தர்யநிவாஸஸ்தலமாய் ஸகலஜநநயநஹாரியாயஸ்வரூபமான திருவடியினழகுக்கும் அளந்தருளுகைக்காக

இ—மென்கிறகருத்தாலே திருக்கண்களைச்சொன்னது. இங்குஒளியென்றது- ஸுகுமாரஜநிதஸௌரமை. ‖எ‖

✳எட்டாம்பாட்டு.✳

இப்பாட்டிலே யதாவிஸமானவதாத்தைபருளிச்செய்கிறார் (திருப்பாற்கடலில்நின்றுமித்யாதியால்) வாஸுதேவ காரயத்தைஸங்க்ரஹிக்கிறார் (க்ருஷ்ணேத்யாதியால்) ‖அ‖

✳ஒன்பதாம்பாட்டு.✳

மாண்பமைகோலத்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கொள்வனென்னித்யாதியால்) எம்மாயக்குறளற்கு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வஸ்வரூபமானவித்யாதியால்) ஸ்தீபவாசுத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அளந்தருளுகையித்யாதியால்) பெருந்தோற்றத்துஎன்கிறதற்குத் தாத்பர்ய

ப—கூடத்திருவடிகளும் செய்ய – சிவந்திருக்கிறவனான, கண்ணப்பிரானுக்கு – க்ருஷ்ணரூபவதாரகனான வனுக்கு, இதுக்கு இழந்ததுஎன்கிறதோடேஸம்பந்தம். என்தையல்- என்னுடையபெண்ணானவள், தையலென்று பெண்ணுக்குப்பேர். இழந்தது – வஸ்தும். தன்னுடைச்சாயே - தன்னுடையஊகையை, ஸுகுமாரஜநிதஸௌரமை யென்றபடி. சாயை – ஸௌரமை. * * ‖எ‖

குருந்தம் – ஸஸாராவிஷ்டமான காஞ்சவ்ருக்ஷத்தை, சாய - வேரோடேசாயும்படி, ஒசித்த - முறித்தவனான, தமியற்கு - ஸஸஹாயவீரனான, தமியன் – ஏககாகீ, மாயச்சகடம் - ஆயாஸகடத்தை, உதைத்த - திருவடியாலே நாசம்பண்ணினவனான, மணாளற்கு - மணவாளனான, ஸகடஸம்ஜநநதிவவிஷ்தூவரித்தைக்காட்டி இவளுக்குநாயகனானவென்றபடி. ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு தநுர்பங்கம்போலே இந்த சகடபஞ்ஜநமிவளுக்கு வசீகரமாய்த்தென்றுகருத்து. பேயை - பிசாசியை, ஸ்திதமென்[illegible]யென்றபடி. பிணம்பட – பிணமாய்விழும்படி, பாலுண் - ஸ்தந்யத்தையுண்டவனான, பேயைஸ்தந்யத்தையுண்டவனென்று விசேஷணங்களுக்கு விபர்யாஸஹாவ்யாக. பிரானுக்கு - ஸத்வைணவைவயைப்போலே ஓரநயத்தைவிளக்கும்படி உயிரோடேவிடாதே உபகாரம்பண்ணின உபகாரகனுக்கு, என் – என்னுடையவளான, வாசக்குழலி - நிஸர்கவாஸிதகேஸர் காந்தையானபெண்ணானவள், வாசம் - வாஸநம், இழந்தது - வஸ்தும், மாண்பு – ஸௌந்தர்யம், அவனுக்காகவந்தவிரஹவ்யஸநத்தாலேதன் ஸௌந்தர்யத்தையிழந்தாளென்றபடி. ‖அ‖

மாண்பு - ஸௌந்தர்யம், அமை - பொருந்தியிருக்கிற, கோலத்து – அவதார விக்ரஹத்தையுடையனான, கோலம் - வேஷம். இங்கு வாமநாவதாரமான அவதார விக்ரஹத்தைச் சொல்லுகிறது. கோலமுடையவன்-கோலத்தன். கோலத்தெம்மாயக் குறளற்கு என்று ஸமஸ்தமாகையாலே கோலத்தனென்கிறவிடத்தல் அன்ஸவஸ்யமெவம். எம் - அஸ்மதீயனான, அவ்வழகாலே நமக்கு ஸ்வாமியான வென்றபடி. மாய - ஆஸ்சர்ய சேஷ்டிதனான, குறளற்கு - ஸ்ரீவாமநனான, சேண் – உந்நதமான, சேண்ஸப்தம் உந்நதவாசி. சுடர்க்குன்று – தேஜோமயமான பர்வதத்துக்கு, அன்ன - ஸத்ருஸமான, செஞ்சுடர் – காவவர்ண ரோசநகளஸ்தஹாதிகளாலே காரணகாந்தியை யுடைத்தான, மூர்த்திக்கு- த்ரிவிக்ரமமூர்த்தியை யுடையவனான, காண் – "த்ருஷ்டிசித்தாபஹாரிண" மென்கிறபடிபேதஸநீயதரான, பெருந்தோற்றத்து "ஜநார்தநஸ்யஸந்தேஹக" என்கிறபடியே

மூ—உண்ணுஞ்சோறுபருகுநீர்தின்னும்வெற்றிலையுமெல்லாங்* கண்ணனெம்பெருமானென்றென்றேகண்கணீர் மல்கி* மண்ணினுளவன்சீர்வளமிக்கவனூர்வினவித்* திண்ணமென்னிளமான்புகுமூர்திருக்கோளூரே* ||க||

ஆ— போதுங்கூட ப்ராவண்யாதிசயமாயிவளைக்காணாமையாலே இவளையிழந்தேனென்கிறாள். லோகவிலக்ஷணமான தாரகபோஷகபோக்யங்களை யிவள் ஸ்ருஜிக்கவேணுமென்றுகொண்டு சென்றால் அத்தைப்பாராதே எனக்கு தாரகமும் போஷகமும் போக்யமும் கண்ணனெம்பெருமான் என்றென்றேசொல்லி யவனைப்பெறாமையாலே கண்கள் நீர்மல்கியிருந்த வென்னுடையபெண்பிள்ளை ஸ்ருஷ்டியிலெங்குத்தையிலும் ஸமஸ்தகல்யாணகுணங்கள் ஸமூஹமாக விவனைவளைத்துக்கிடக்கிற திருக்கோளூரிலே யதிராத்யஸந்நிதானமாகையாலே யவ்வூரை

இ—(லோகேத்யாதியால்) கொண்டுசென்றாலென்றது- நாங்கள்கொண்டுபோய் ஸமர்ப்பித்தாலென்றபடி. உண்ணுஞ்சோறென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தாரகமுமென்று) பருகுநீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (போஷகமுமென்று) தின்னும்வெற்றிலையுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (போக்யமுமென்று) இத்தால் ஸ்ரீதாரகபோஷணாதிநிர்வாஹகத்வமென்கிற ஸமஸ்தகுணமித்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமென்று ஸூசிதம். என்னிளமானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையபெண்பிள்ளையென்று) மண்ணினுளவன்சீர்வளமிக்கவனூரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ருஷ்டியிலித்யாதியால்) இவனைவளைத்துக்கிடக்கிறதென்றது - இந்த எம்பெருமானை வ்யாபித்துக்கொண்டிருக்கிறதென்றபடி. வினவியென்கிறவிடத்தில் சப்தஸித்தமானவர்த்தத்தை யருளிச்செய்கிறார் (அதிராதேத்யாதியால்) வினவியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வூரையித்யாதியால்) திண்ணமென்கிறதற்குத்

ப—உண்ணுஞ்சோறு - பசித்தஸமயத்திலே சரீரதாரணார்த்தமாக உண்ணப்படுமதான ஓதநம், பருகுநீர்- த்ருஷ்ணாயுக்தஸமயத்திலே த்ருஷ்ணாசமநதேஹபோஷகமாகப்பருகப்படுமதான பாநீயம், பருகுகை- பாநம் பண்ணுகை. தின்னும்வெற்றிலையும் - போகார்த்தமாகத்தின்னப்படுமதான வெற்றிலையும், எல்லாம்- இப்படி தாரகபோஷக பருகப்படும். போக்யங்களானவிவையெல்லாம், எம்பெருமான்கண்ணன்- ஸர்வஸ்வாமியான க்ருஷ்ணன், அசநபாநாதிகளெனக்கு தாரகபோஷகாதிகளன்று- "வாஸுதேவஸ்ஸர்வம்" மென்கிறபடியே க்ருஷ்ணனெனக்கு தாரகபோஷகாதிகளெல்லாமாயிருக்கிறானென்றபடி. சோறுநீர்வெற்றிலை யென்றிவ்வளவே சொல்லவமையாதோ? இவற்றில் ப்ரத்யேகஞ்சொல்லுகிற விசேஷணங்களெதுக்கென்னில்? அசநபாநாதிகள் உபயோகவேளையிலே அபேக்ஷிதங்களாயிருக்கையாலே தத்ப்ராப்த்யர்த்தமிவ்விசேஷணங்கள் - அசநபாநாதிகள் அபேக்ஷிதஸமயத்திலேயாதொருபடி இருக்கும்? அப்படியேயிருக்குமெப்போது மெம்பெருமானிவளுக்கு என்றதாய்த்து. என்றென்றே- இப்படியே பின்னையும் பின்னையுஞ்சொல்லி, கண்கள் நீர்கள் மல்கி - அவனைக்காணாமையாலேகண்களிலேஜலங்கள் ப்ரவஹித்து, இது ப்ரவேசமாறுமிங்குகண்களிலே ஜலம்ப்ரவஹித்திராநின்றவளான என்றபடி. "சநிக்ருதஸர்வம் லோகமிதம் ப்ராவ்ருஷஜலஸ்ரீ"மென்கிற விடத்திலே ப்ராவ்ருஷென்றது ப்ராவ்ருட்காலம் என்று ப்ராவ்ருட்காலமானதுபோலே யிங்கும் நீர்கள்மல்கி என்றது நீர்கள் மல்கியிராநின்றவளான என்றர்த்தமாகக்குறையில்லையிறே; என் - என்னுடையவளான, இது ஸாபிப்ராய விசேஷணம். என்னுடைய பெண்ணாகையாலே அவனெழுந்தருளியிருக்கிற திருக்கோளூர்க்கே போவளென்றபிப்ராயம். ஸ்ரீவைஷ்ணவஸந்தாநத்தில் பிறந்தவர்கள் அவர்களைப் போலே யிருப்பார்களிறே. இளமான் — பாலஹரிணியானவள், தத்ஸத்ருசமான பெண்ணானவள்என்றபடி. இதுக்குப்புகுமூர் என்கிறத்தோடேஅந்வயம். மண்ணினுள் — ஸ்ருஷ்டிக்குள்ளே, அவன்சீர்- அவனுடையகல்யாணகுணங்களுடைய, வளம் - ஸம்ருத்தியானது, மிக்க- மிகுந்திருந்த, கல்யாணகுணங்கள் மிகவும் ப்ரகாசிதங்களாயிருந்தவென்றபடி. அவனூர் - அவனுடையவூரை, அவனுக்கு அஸாதாரணமான திருக்கோளூரை, வினவி - ப்ரச்நம்பண்ணி, அவ்வூரிலாஸக்த்யதிசயத்தாலே அவ்வூரெத்திசையிலுண்டென்று எதிரேவருகிற ஜனங்களை யெல்லாம் கேட்டு என்றபடி. புகுமூர்- போய்ப்ரவேசிக்கத்தக்கவூர், திருக்கோளூரே - ஸ்பஷ்டம். அவதாரணத்தால்வேறொரு ஊரன்றென்று தோற்றுகிறது. திண்ணம் - இது நிச்சிதம், என்னுடையபெண்ணாகையாலே அவனூரல்லதுபுகாமையாலும் பாலஹரிணிபோலே ஸ்வச்சந்தமாகையாலே வேறோரிடத்திலே ஒதுங்கப்போகமாட்டாமையாலும் திருக்கோளூரிலேயே போவள், இதில் ஸந்தேஹமில்லையென்று பதார்த்தம்.

மூ — பூவைபைங்கிளிகள்பந்துதூதைபூம்புட்டில்கள்* யாவையுந்திருமால்திருநாமங்களேகூவியெழுமென்* பாவை
போயினித்தண்பழனத்திருக்கோளூர்க்கே* கோவைவாய் துடிப்பமழைக்கண்ணொடென்செய்யுங்கொலோ ॥

ஆ — அந்தவ்யஸநம்பொறுக்கமாட்டாமையாலே உபாதேயமான தன்னுடைய ஸ்வத்தைத் த்ருணவந்நிரஸ்தமெயாய்க்கொண்டு போகட்டு நல்வளஞ்சேர்பழனத் திருக்கோளூருக்கே போய்ப்புக்கும் ஸாஹஸிகையான வென்னுடைய பெண்பிள்ளை யுங்களினைத்தாகிலு மொருகாலவருமேயென்று என்றவளுடைய பூவைகளைக்கேட்கிறாள். ௨ ॥

(பூவை) லீலார்த்தமாகக்கொண்டுவந்த ஸாரிகாதி லீலோபகரணங்களைக்கண்டால் வரும்ஸ்மரணமும் தனக்குப்பிராட்டியோடே ரமணனான வெம்பெருமானைக்காணுமதுவேயாகையால் அவனைநினைத்துக்காணப்பெறாமையாலே அவன் திருநாமங்களைச்சொல்லிக்கூப்பிட்டு அச்சொல்லினுடைய மாதுர்யத்தாலும் குளிர்த்தியாலும் உஜ்ஜீவித்திருக்கிற வென்பெண்பிள்ளை திருக்கோளூரிலேபோய்ப்புக்கு இனிதன்னுடைய

இ — (அந்தவ்யஸநமித்யாதியால்) மாட்டாமையாலேயென்கிறதற்கு த்ருணவந்நிரஸ்தமெயாய்க்கொண்டென்கிறத்தோடே ஸமபம். வானென்கிறபதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உபாதேயமானவென்று) கடுபுஎன்கிறதையுரைக்கிறார் (ஸ்வத்தையென்று) இட்டிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (த்ருணவதித்யாதியால்) சேருமென்கிறத்தையுரைக்கிறார் (போய்ப்புகுமென்று) புகுமென்றது க்ரியாபதமன்று, புகுமவளானவென்றபடி. இது பெண்பிள்ளைக்கு விசேஷணம். கொடியேன்கொடியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாஹஸித்யாதியால்) போருங்கொல்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களையித்யாதியால்) வருமேயென்றது - வருமோஎன்றபடி. அவளுடையபூவைகளை இத்யாதியாலே இப்பாட்டுக்கு ஸங்கதிஸூசிதை. திருக்கோளூருக்குப்போனாளென்று கீழ்ப்பாட்டிலேநிஶ்சயித்தாள்; திரும்பிவருவளோ! வென்றிப்பாட்டிலே பூவைகளைக்கேட்கிறாளென்று ஸங்கதி. ௨ ॥

✳ மூன்றாம்பாட்டு. ✳

யாவையுந்திருமாலித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (லீலார்த்தலாகவித்யாதியால்) திருநாமங்களேகூவியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனைநினைத்தித்யாதியால்) எழுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மாதுர்யத்தாலுமித்யாதியால்) என்பாவையென்கிறதையுரைக்கிறார் (என்பெண்பிள்ளையென்று) என்செய்யுங்கொலோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனிதன்னுடையவித்யாதியால்) (அன்றியேஇத்யாதி) அவனிவளுக்கெதிரேவந்து ஸாமதாநங்களைப்பண்ணி கூடுமோ [illegible]

ஸா — பூவை - லீலார்த்தமான ஸாரிகைகள், பைம் - பச்சைவர்ணங்களான, கிளிகள் - ஶுகங்கள், பந்து - கந்துகம், தூதை - ஊண்சோபகரணங்கள், பூம்புட்டில்கள் - வர்ணபேடிகைகள், யாவையும் - இந்த லீலோபகரணங்களெல்லாம், திருமால் - ஸ்ரீய:பதியே, இவளுக்கிதிஶேஷ:. இந்த லீலோபகரணங்களைக் கண்டால் இவளுக்கஸஹ்யமாயிவையெல்லாத்தாலும்வரும்ரஸமெல்லாம் ஸ்ரீய:பதியைக்கண்டநுபவிக்கையென்று ஸ்மாரகமாயிருக்குமிவளுக்கென்றபடி. திருநாமங்களேகூவி - அவனுடையதிருநாமங்களையே கூப்பிட்டு, தனக்குஸர்வவிதஸ்நேஹனுமாயிருந்தவனைக்காணக்கிடையாவிட்டவாறேயவனுடைய திருநாமங்களையேயலற்றியென்றபடி எழும் - அதனாலே ப்ராணதாரணம்பண்ணி யுஜ்ஜீவித்திராநிற்கும், வேறொரு லீலோபகரணங்களைக் கொண்டு போதுபோக்கவேண்டும்படியான பால்யவயஸ்ஸிலும் அவன்திருநாமங்களையே கொண்டுஜ்ஜீவியாநிற்கும், இதென்ன வாஶ்சர்யமோ வென்றபடி. என்பாவை - என்னுடைய பெண்ணானவள், பாவை - பெண். தண்பழன - ஜலஸம்ருத்தியாலே ஶீதளங்களான கழனிகளையுடைத்தான, பழனம் - கழனி, திருக்கோளூருக்கே - [illegible], போய் - இத்திருநாமோச்சாரணரஸமிருக்கவித்தை விட்டுப்போய், இங்கிருந்தநாள் மற்றொன்றுபாரகமாய் அங்கேபோயவனுலேயபிக்கப்போனாளோவென்று கருத்து. இனி - அவ்வூரிலே புக்கபின்பு, கோவைவாய் - பிம்பபலம்போலேசிவந்திருக்கிற தன்னுடையவதரமானது, துடிப்ப - உத்வேகத்தால் துடியாநிற்க, மழைக்கண்ணொடு - வர்ஷம்போலே தாராவமானகண்களோடே, என்செய்யுங்கொலோ - என்னசெய்வளோ, அவனைக்கண்டு ஸந்தோஷிப்பளோ? அன்றிக்கேயவனுதவியாமையாலே பின்னையும் உத்வேலியாநிற்பாளோ வென்றபடி.

மூ—கொல்லையென்பர்கொலோ குணமிக்கனளென்பர்கொலோ* சில்லைவாய்ப்பெண்டுகளயற்சேரியுள்ளாருமெல்லே* செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே* மெல்லிடைநுடங்கவிளமான்செல்லமேவினளே*௪॥ மேவிநைந்துநைந்துவிளையாடலுறாளென்சிறுத்* தேவிபோயினித்தன் திருமால் திருக்கோளூரில்* பூவியல்

ஆ—ஐச்வர்யமெல்லாம் வரிவடிவாம்படியிருக்குமோ? அன்றியே தன்னுடைய கண்ணில் ரூபமுழையு மேயாப்பிற்குமோவென்கிறாள். ॥௩॥

(கொல்லை) சௌசீல்யத்தால் ஸாத்ம்யமாய்க்கொண்டவன் கண்வளர்ந்தருளுகிற திருக்கோளூர்க்கே ஈடுபாடுடையவிவள் மெல்லிடைநுடங்கப்போனாள், மர்யாதையைக்கடந்தாளென்று லோகத்தாரிவளுக்குக் குற்றமாகச்சொல்லுவரோ? அன்றியே திருக்கோளூரிலே பொருந்தநின்றாள் வரிசியுமிருக்கும்படியென்? என்று ஸ்லாகையாகச்சொல்வரோ? அங்ஙனே குணமாகச்சொல்லுகை ஸம்பவிக்குமோ? வாஸ்தவமான குணத்தையும் தோஷமாகவேகாண்கிற லோகஸ்வபாவமிருந்தபடி என்னென்று இன்னாகிறாள். ॥௪॥

(மேவிநைந்து) பிள்ளையாய்விளையாடும்பருவமானால் பிள்ளைகளோடே விளையாடுகையில் ஆதரமின்றியே

இ—நாயகியானாளே ஸ்வாதந்த்ர்யமையாலே பின்னையும் அழுதுகொண்டே நிற்குமோவென்றபடி. ॥௫॥

* நாலாம்பாட்டு. *

த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சௌசீல்யத்தாலித்யாதியால்) இளமானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஈடுபாடுடையவிவளென்று) கொல்லையென்பர்கொலோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மர்யாதையை இத்யாதியால்) குணம்மிக்கனளென்பர்கொலோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றியேயித்யாதியால்) சில்லைவாயென்கிறவிசேஷணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அங்ஙனே குணமாகவித்யாதியால்) ॥௪॥

* ஐந்தாம்பாட்டு. *

விளையாடலுறாளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிள்ளையாயித்யாதியால்) பிள்ளை - சிறுபெண்,

ப—இளமான் - பாலஹரிணியானவள், தக்நாயிகையானவளென்றபடி. இதுக்குமேலிளமையென்கிறத்தோடே ஸம்பந்தம். செல்வம்மல்கி - சௌசீல்யம் ஸாத்ம்யமாய்க்கொண்டு, அவன்கிடந்த - அவன் கண்வளர்ந்தருளுகிற, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரிலே, இதுக்குச்செல்லவென்கிறத்தோடே ஸம்பந்தம். மெல் - ஸூக்ஷ்மமான, இடை - தன்னுடைய மத்யமானது, நுடங்க - ஸுகுமாரத்தாலே துவளத்துவள, செல்ல - போகைக்கு, மேவினள் - ஆதரித்தாள், தன்னுடைய வயஸ்ஸுக்கு ஒவ்வாததையும் பாராதே த்வரித்தோடே போனாளென்றபடி, சில்லைவாய் - சிறுதே ஸ்வபாவமானவாயையுடையவர்களான, சில்லை - க்ஷுத்ரம். பெண்டுகள் - க்ஷுத்ரஸ்வபாவைகளான ஸ்த்ரீகள், அயல்சேரியுள்ளாரும் - அயல்தெருவிலே யிருக்கிற ஸ்த்ரீகளும், கொல்லையென்பர்கொலோ - கொல்லையென்று சொல்லுவார்களோ, கொல்லை - மர்யாதாதிலங்கிநீ, மர்யாதையைபழித்தவளென்று சொல்லுவார்களோ வென்றபடி. குணம்மிக்கனளென்பர்கொலோ - குணாதிகையென்று சொல்லுவார்களோ, திருக்கோளூரிலெம்பெருமான்பக்கல் குணாதிசயத்தை யறிந்து மேல்விழும்படியான விலக்ஷணை குணாதிசயத்தை யுடையவளென்று சொல்லுவார்களோ வென்றபடி. எல்லே யென்று விஷாதத்யோதகமவ்யயம், அகன்றாயிழந்து படுகிற நான் இத்தனை குணாதிகையான இவளைச் சிலர் பழிசொல்லவும் கேட்கில் என்செய்வேனே யென்றுகருத்து. * * * * * ॥௪॥

மேவி - கிட்டி, அவனைநெஞ்சாலே கிட்டி, அவனையாசைப்பட்டென்றபடி. நைந்து நைந்து - க்ஷணக்ஷணம் சிதிலையாய், விளையாடல் - பால்யலீலைகளிலே, உறாள் - ஸம்பந்தியாதவளான. "மால்பால் மனம்சுழிப்பமங்கையர்தோள்கைவிட்டு" "யஸ்ய ந க்ஷோபம் லீலாஸ்வபி" என்கிறபடியே பால்யலீலைகளிலே அநிவ்ருத்தியாகவளானவென்றபடி. என் - என்னுடையவளான, சிறு - பாலையான, தேவி - தேவியானவள், சிறுபெண்ணாயிருக்கச்செய்தே ஸர்வேச்வரனை மேவக்ஷணமறியும்படியான திவ்யஸ்வபாவத்தை யுடையவளான இவளென்றபடி. போய் - இங்குநின்றும்போய், இனி - உத்தரம், தன் திருமால் - தனக்கு ஸ்வாமியானனை ஸ்ரீயப்பதியினுடைய, திருக்கோளூரில் - வஸ்ஸ்தானம். பூவியல் - வாஸிங்களையே ஸ்வபாவமாக உடையவையான, இயல் - ஸ்வபாவம். ஸஸ்த்ரவாஸிப்ரவாஹங்களானவென்றபடி. பொழிலும் - உத்யானங்களையும்

மூ—பொழிலுந்தடமுமவன்கோயிலுங்கண்* டாவியுள்குளிரவெங்ஙனேயுகக்குங்கொலின்றே* ॥ரு॥
இன்றெனக்குதவாதகன்றவிளமானினிப்போய்த்* தென்றிசைத்திலதமனையதிருக்கோளூர்க்கே* சென்று
தன்திருமால்திருக்கண்ணுஞ்செவ்வாயுங்கண்டு* நின்றுநின்றுநையுநெடுங்கண்கள்பனிமல்கவே* ॥கூ॥

---

ஆ—எம்பெருமானைக்காண வேணுமென்றாசைப்பட்டுப் பெருமையாலே நைந்துநைந்து இருந்தவென்சிறுத்தேவிபோயினித்தன்திருமால் திருக்கோளூரில் பூவியல்பொழிலையும் அதுக்குள்ளே தாமரைத்தடாகங்களையு மதுக்குள்ளே யவன்கோயிலையுங்கண்டு தன்னுடைய நிரவதிகஸங்கல்பமெல்லாம்போய் ஆவியுள்குளிரவின்று எங்ஙனேயுகக்கிறாளோ? நானந்தஸம்ருத்தியைக் காணப்பெற்றிலேனென்கிறாள். ॥ரு॥

(இன்றெனக்கு) இன்றுதன்னைப்பிரிந்துவ்யஸனப்படுகிற வெனக்குத்துணையாகாதே யென்னைப்போகட்டுப்போன வென்னிளமானினிப்போய்த் தென்றிசைத்திலதமனைய திருக்கோளூர்க்கேசென்று அவன்கோயிலுள்ளேபோய்த் தனக்குப்பிராட்டியோடுள்ள ஸம்ஶ்லேஷத்தாலே புதுக்கணித்ததிருக்கண்களையும் திருப்பவளத்தையுங்கண்டு நிரவதிகப்ரீதியாலே விகஸிதமான வவளுடையகண்களையுமாநந்தஜமானகண்ணில்நீரையுமாநந்தமதமான ஸௌபாக்யவைபவத்தையுங் காணப்பெற்றிலேனென்கிறாள். ॥கூ॥

---

இ—மேவியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானையித்யாதியால்) தடமுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தாமரையித்யாதியால்) பாட்டுக்குப் பரமதாத்பர்யமருளிச்செய்கிறார் (நானித்யாதியால்) ॥ரு॥

✳ ஆறும்பாட்டு. ✳

இன்றெனக்குதவாதகன்றவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்றுதன்னையித்யாதியால்) திருமாலென்கிறபதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தனக்குப்பிராட்டிஇத்யாதியால்) தனக்கென்கிறபதமெம்பெருமானைச்சொல்லுகிறது. நெடுங்கண்களென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) பனிமல்கவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆநந்தஜ இத்யாதியால்) நின்றுநின்றுநையுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆநந்தப்ரவாஹமதமித்யாதியால்) [ஆநந்தமதமானவென்று பாடாந்தரம்.] ॥கூ॥

---

ப—தடமும்-அந்த உத்யாநங்களுக்குள்ளே யிருக்கிற தாமரஸதடாகங்களையும், தடம்- தடாகம். அவன் கோயிலும்- அவனுடைய திவ்யாயதநத்தையும், இன்று - தனக்குநல்லவிடிவானவின்றைக்கு, கண்டு - இங்கிருந்து நினைத்து ப்ரீதியையாகா நின்றவிவள்தன் கண்ணாரக்கண்டு, ஆவி-ப்ராணனானது, லக்ஷணயா ப்ராணாஶ்ரயமான ஹ்ருதயமானதென்றபடி. உள்குளிர-விரஹஜநித தாபமெல்லாம்போய்உள்ளெங்கூடக்குளிரும்படி, எங்ஙனே யுகக்குங்கொலோ - எப்படி ஸந்தோஷிப்பாளோ, அந்தப்ரீதிஸந்தோஷாதிஶயத்தை நான்காணப் பெற்றிலேனென்று கருத்து. * * * * * ॥ரு॥

எனக்கு- தன்னைப்பிரிந்து நோவுபடாநிற்கிற வெனக்கு, இன்று- இப்படி வ்யஸநதஶாபன்னமாயிருக்கிற காலத்திலே, உதவாது-உதவாதே, ஊர்வராக்ஷிப்ரம்படியாக ஸஹிஷ்ணுவையாயிராதே யென்றபடி. அகன்ற-விஶ்லேஷித்துப்போனவளான, இளமான்- பாலஹரிணிபோலே முக்தையானபெண்ணானவள், போய்- ப்ரயாஸேந நடந்துபோய், இதுக்குச்சென்றென்கிறதோடே அந்வயம். தென்திசை - தக்ஷிணதிக்குக்கு, திலதமனைய - திலகம்போலேயிருக்கிற, திலதமென்று திலகத்துக்குப்பேர். அனையஶப்தம்-ஸாத்ருஶ்யவாசி. திருக்கோளூர்க்கே- திருக்கோளூரிலே, சென்று - ப்ரவேஶித்து, இனி- அங்கேபோய்ப்புக்கபின்பு, தன்திருமால் - தனக்கஸாதாரணனான ஶ்ரிய:பதியினுடைய, திருக்கண்ணும் - ஶ்ரீமத்துக்களான நேத்ரங்களையும், செவ்வாயும், அருணமான வதரத்தையும், கண்டு - தன்கண்களாரக்கண்டு, நெடுங்கண்கள்- அந்ததிவ்யாவயவங்களைக்கண்டவாநந்தத்தாலே விகஸிதங்களானதன்னுடைய நேத்ரங்கள், பனிமல்க- ஆநந்தபாஷ்பப்ரவாஹியாநிற்க, பனியென்றுஜலம். நின்றுநின்றுநையும்- ஆநந்தாதிஶயத்தாலேபின்னையும் ப்ரீதியையாகாநிற்பள். அந்த ஶோபையை நான்காணப் பெற்றிலேன் "ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:புலகீக்ருதகாத்ரவாந்|ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி:" என்னும்படியான விவளுடைய தர்ஶநீயமாகிற பாக்யாதிஶயத்தை யிழந்தேனென்றுகருத்து. *

மூ—மல்குநீர்க்கண்ணொடுமையலுற்றமனத்தனளாய்* அல்லுநன்பகலுநெடுமாலென்றழைத்திளைப்போய்* செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே* ஒல்கியொல்கிநடந்தெங்ஙனேபுகுங்கொலொசிந்தே* ||எ||
ஒசிந்தநுண்ணிடைமேற்கையைவைத்துநொந்துநொந்து* கசிந்தநெஞ்சினளாய்க்கண்ணநீர்துளும்பச்செல்

---

ஆ—(மல்குநீர்) எம்பெருமானைக்கண்டுஸம்ஶ்லேஷிக்கைக்காக ஸாபேக்ஷமான அருமந்தகாலமெல்லாம் அவனோடு ஸம்ஶ்லேஷிக்கப்பெறாமையாலே கண்ணநீர்மல்கி நெடுமால் நெடுமால் என்றுஅழைத்து, இனிஇவள் தன்னுடைய விரஹவ்யஸநத்தாலும் ஸாகாங்க்ஷத்தாலும் ஸகிலாத்ரவ்யஸமேதாய் வஶீகாரமெநபாய்க்கொண்டு செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே நடந்துபோய்ப்புகும்படியைக்காணப்பெற்றிலேனென்கிறாள். ||எ||
(ஒசிந்த)வண்டாலேதுகையுண்ட பூமாலைபோலே எம்பெருமானோடுள்ள கலவியாலேயொசிந்த திருமேனி

---

✳ ஏழாம்பாட்டு. ✳

இ—நன்பகலுமென்கிறவிடத்தில் நன்ஶப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானையிசைவிக்கையால்) அல்லும்பகலுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (காலமெல்லாமென்று) காலமெல்லாமென்கிறதற்கு மல்கிஎன்கிறத்தோடும் அழைத்துஎன்கிறத்தோடும் அந்வயம். வ்யவதாநத்தில் ஸமாதிஸமாநாதிகரணத்தையருளிச்செய்கிறார் (அவனோடிசைவியால்) ஒல்கியொல்கியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையவிஶ்லேஷியால்) ஒசிந்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வஶீகாரமெநபாயென்று) நடந்தெங்ஙனேபுகுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நடந்துபோயிசைவியால்) ||எ||

✳ எட்டாம்பாட்டு. ✳

ஒசிந்தவொண்மலராள்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வண்டாலேஉத்தேஶியால்) துகையுண்டவென்றது- உபமர்திக்கப்பட்டவென்றபடி. ஒசிந்ததிருமேனியையுடையவென்றது- “உபபுக்தஸ்ரக்ஸம்ஸ்தவவ்யஸ்தவிஹ்வலதேஹகாந்தோத்ஸவஹாஸமநஸ்கதாம்ஸ்யஷ்டிஃ। பாஷாணஶ்லேஷவிஸம்ஸ்திதபோதமாலாகாலீநவிநித்ரஸ்மிதரூபஸம்ஸ்காரம்” என்கிறபடியே விமர்திதமான திருமேனியையுடையவென்றபடி.

---

ப—அல்லுநன்பகலு மென்கிறவிடத்தில் நன் ஶப்தம்காலத்ரயவாசியாக நிற்கும்- மேலும் அந்வயிக்கிறது. நன்- நல்லதான, ஸமயஸ ஸம்ஶ்லேஷார்ஹம் ஸாபேக்ஷமான வென்றபடி. அல்லும்- ராத்ரியிலும், அல்லு ஶப்தம் ராத்ரிவாசி அல்லுமித்யத்ர மகாரஸ்ய ஸம்ஹிதாயாம்லோபஃ. நனபகலும் – நல்ல திவாவிலும், மல்குநீர் – விரஹத்தாலே ப்ரவஹஜலங்களான, கண்ணொடு - கண்களோடேகூட, மையலுற்ற - மோஹத்தை யடைந்ததான, மையல் - மோஹம். உறுகை- அடைகை, மனத்தனளாய் - மநஸ்ஸையுடையவளாய், நெடுமாலென்றழைத்து- ஆஶ்ரிதர்பக்கல் தீவ்ரவ்யாமோஹஶாலியானவனையென்று ஸங்கேதம்பண்ணி; மால் - வ்யாமோஹம். இனி- இதுக்குமேலே. இங்கிருந்தநாள்நடந்தஇத்தனைவ்யஸநங்களின்மேலே யென்றபடி. ஒல்கிபொல்கிநடந்து- ஜாலத்தாலே அசைந்தசைந்து வழிநடந்து, ஒல்குதல் – அசைதல். ஒசிந்து - துவண்டு, ஒசிகை - துவளுகை. இன்னுமவனைக்காணுதற்கேவத்தாலே ஶிதிலமாத்ரயாய் என்றபடி. இதுக்கு எங்ஙனே புகுமென்கிறதோடே அந்வயம். செல்வம் மல்கி - வைபவம் ஸம்ருத்தமாய், அவன்கிடந்த – அந்த வைபவத்தாலே இவளுக்கெதிரேவராதே அவன் கணவளர்ந்து கொண்டிருக்கிற விடமான, வைபவமென்றுகில் இவளுக்கெதிரே வந்தணைத்தாஶ்வாஸநம்பண்ணுமேவென்று கருத்து. யதா? “ஶயானோபோயிதஃஶ்ரீமாநுவாசவசஃ” என்கிறபடியே ஸாநுபமஹிமயிதமாய் அவன் கண்வளர்ந்தருளுகிற விடமானவென்றபடி. திருக்கோளூர்க்கே திருக்கோளூரிலே, எங்ஙனேபோய்ப் புகுங்கொல் - எப்படிபோய்ப் புகுவளோ, அத்தைநான் காணப்பெற்றிலேனென்றுகருத்து.

* * * * ||எ||

ஒசிந்த- துவண்டவளான, ரஸிகஹ்ருதயோபமர்தமான வாஷாணம்போலே ஸம்ஶ்லேஷத்தாலே துவண்டவளானவென்றபடி. ஒண் - அழகியளான, அந்ததுவட்சியாலே பின்னையும் அழகியவளான வென்றபடி மலராள் - பத்மவாஸிநியினுடைய, கொழுநன்- வல்லபனுடைய, கொழுநன் – வல்லபன், திருக்கோளூர்க்கே- திருக்கோளூர்க்காகவே, திருக்கோளூரையடைகைக்காக வென்றபடி, கசிந்தநெஞ்சினளாய்-ஸ்நேஹார்த்ரமான மநஸ்ஸையுடையவளாய், எம்மை - தாய்மாரானவெங்களை, நீத்த- நீக்கினவளான, அவ்வூரிலாஸக்தியாலேஎங்களைவிட்டவளான என்றபடி, எங்காரிகை. என்னுடைய காரிகையானவள், காரிகை– ஸ்த்ரீரூபமெவையானபெண்

மூ— லுங்கொ* லொசிந்தவொண்மலராள்கொழுநன்றிருக்கோளூர்க்கே* கசிந்தநெஞ்சினளாயெம்மைநீத்தவெங்காரிகையே* ॥அ॥

காரியநல்லனகளவைகாணிலென்கண்ணனுக்கென்* றீரியாயிருப்பாளிதெல்லாங்கிடக்கவினிப்போய்* சேரிபல்பழிதூஉயிரைப்பத்திருக்கோளூர்க்கே* நேரிழைநடந்தாளெம்மையொன்றுநினைத்திலளே* ॥கூ॥

ஆ— உடையபிராட்டியோடே திருக்கோளூரிலே அவன்கண்வளர்ந்தருளுகிறபடியைக் காணவேணுமென்னுமாசையாலே என்னைப்போகட்டுப்போன என்காரிகை வ்யஸநத்தாலேமெலிந்த நுண்ணிடைமேலே ஶ்ரமாதிஶயத்தாலே கையைவைத்து நொந்துநொந்து கண்ணீர்துளும்ப அவ்வபிநிவேஶமேதுணையாக அவ்வூரிலேபுக்கு முடியவல்லளேயோவென்கிறாள். ॥அ॥

(காரியம்) ஆகிஞ்சநஸாதநமான ஸௌஹ்ருதவஸ்துக்களைக்காணில் இவையெல்லாமென்கண்ணனுக்கென்று சொல்லாநிற்கும்இப்பெண்பிள்ளை தனக்காக நாங்கள்கொண்டுவந்த ஸௌஹ்ருதபதார்த்தங்களையும் எங்களையுமொரு

இ— கொழுநன்திருக்கோளூர்க்கே என்கிற ஸங்க்ரஹத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கோளூரிலேஇத்யாதியால்) கசிந்தநெஞ்சினளாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (காணவேணுமித்யாதியால்) எம்மைநீத்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னையித்யாதியால்) ஒசிந்தநுண்ணிடையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வ்யஸநத்தாலேஇத்யாதியால்) த்விதீயபாதத்தில் கசிந்தநெஞ்சினளாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வபிநிவேஶமேஇத்யாதியால்) செல்லுங்கொலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வூரிலேஇத்யாதியால்). ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆகிஞ்சநஸாதநமித்யாதியால்) செல்லாநிற்குமென்கிறது க்ரியாபதமன்று; பெண்பிள்ளைக்குவிஶேஷணம். இதெல்லாங்கிடக்கவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தனக்காகவித்யாதியால்) எம்மையொன்றும்நினைத்திலளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

ஸ— ஒசிந்த - வ்யஸநாதிஶயத்தாலே துவண்டதான, நுண் - ஸௌக்ஷ்மதமமான, இடைமேல் - தன்னுடைய இடையின்மேலே, கையைவைத்து - ஶ்ரமாதிக்யத்தாலே தன்னுடைய கையைவைத்துக்கொண்டு, நொந்துநொந்து - அந்தகைவைத்ததும் பொறாமையாலே பின்னையும்பின்னையும் க்லேஶப்பட்டு, கண்ணீர் - நேத்ரஜலங்கள், துளும்ப - அலைய, கசிந்தநெஞ்சினளாய் - அவன்பக்கல்ஸ்நேஹத்தால் ஆர்த்ரமான நெஞ்சையுடையவளாய், செல்லுங்கொல் - செல்லுவளோ, அவ்வூரிலேபோய்ச்சேரமாட்டுவளோ மாட்டாளோவென்றபடி. ॥அ॥

காரியநல்லனகளவை - கார்யஸாதகங்களாய் நல்லவைகளான வஸ்துக்களை, தனக்காகவெங்களாலே செய்யப்பட்டு நல்லவையான போஷகநாதிவஸ்துக்களையென்றபடி. காரியநல்லன என்கிறவிடத்திலே நகாரமேவ ரேபமகாரவஸ்து சொவஃ. காணில் - கண்டால், என் கண்ணனுக்கென்று - எனக்கு ஸுலபனான க்ருஷ்ணனுக்கென்று ஸங்கல்பித்து. ஈரியாயிருப்பாள் - ஆர்த்ரஸ்வபாவையாயிருக்கிறவளான, ஸ்நேஹார்த்ரவித்தையாயிருக்கிறவளானவென்றபடி. நேரிழை - நேர்களான இழைகளையுடையவள், நேர் - ஸூக்ஷ்மம், இழை - ஆபரணம். நிஸர்க்கஸுகுமாரமாக திருமேனிக்கநுரூபமாக ஸுந்தரங்களான ஆபரணங்களையுடைய பெண்ணானவளென்றபடி. இதெல்லாங்கிடக்க - தனக்காக நாங்கள் கொண்டுவந்த ஸௌஹ்ருதவஸ்துக்களெல்லாமிங்கேகிடக்க, இவைக்கை த்ருணீகரித்துவென்றபடி. இனி - இதுக்குமேலே, கண்டஸௌஹ்ருதவஸ்துக்களெல்லாம்க்ருஷ்ணனுக்கென்கிற விப்ரதிபத்திக்குமேலே அவனுக்கு என்செய்ய வங்கே போனாளென்று கருத்து, போய் - இவ்வகத்தை விட்டுப்போய். சேரி - வீதியானது, வீதியிலுள்ளஜநங்களானவர்களென்றபடி. ஜநங்களுடைய ஸம்ஸ்ருஷ்டத்வாதநாம் லக்ஷணயாவாதமம். பல்பழி - பஹுவாக்களான அபவாதங்களை, அவன் வரவுபார்த்திராதே தான் புறப்பட்டுப் போனாள், தாயைவிட்டுப் போனாள், தனியே போனாள், ஊராருக்கஞ்சாதேபோனாள், என்றாப்போலே பஹுவிதங்களான அபவாதங்களையென்றபடி. தூஉய் - தூற்றி, தூறுதல் - குற்றமாக எல்லாரோடும் சொல்லுதல். இரைப்ப - கோஷியாநிற்க, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரிலே. நடந்தாள் - எழுந்தருளினாள், நடந்தாளென்றது ஆதிக்யத்திலே பஹுமாநோக்தி. தன்னுடைய பெண்ணானவளை பஹுமாநோக்தியாலே சொல்லுகிறாள் ஸவிஷயத்திலவமாநித்தவள் என்கிறத்தாலே. எம்மை - என்னை, ஆத்மநிபஹு...

மூ — வைத்தமாநிதியாம் மதுசூதனையே யலற்றிக்* கொத்தலர்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்சொன்ன* பத்துநூற்றுளிப்பத்தவன்சேர் திருக்கோளூர்க்கே* சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே* ॥௧௧॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ — எம்பெருமானையேயலற்றிச்சொன்ன இத்திருவாய்மொழியைத் திருக்கோளூர்க்கேப்ரவணமான மநஸ்ஸையுடையராய்க்கொண்டு சொல்லுவார் இட்டவழக்காகும் திருநாடென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ — வைப்பாகவைத்தவென்றபடியம். தமக்கு மஹாநிதியாக வ்யவஸித்திருந்தவென்றபடி. பொன் னுலகாள் வாரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இட்டவழக்காமித்யாதியால்) ॥௧௧॥

ஈ — வைத்த - வைக்கப்பட்டதான, ஆபத்திலே ரக்ஷகமாகவேணுமென்று வைக்கப்பட்டதானவென்றபடி. மா - மஹத்தான, சிலகாலத்துக்கப்பால் மாண்டுபோகக்கடவதான லோகத்தில் நிதிபோலன்றிக்கே எத்தனை காலம் போஜித்தாலும் குறையாததானவென்றபடி. நிதியாம் - நிதியாகாநிற்கிற, "தத்யதா ஹிரண்யநிதிம் நிஹித"மென்கிறபடியே நிதிபோலேயிராநிற்கிறவென்றபடி. அதாவது:— ஆபத்திலேரக்ஷகமாய்த் தன்னையுடையவனொருவனுக்கும் விஷயப்படவேண்டாதபடியாய் ஸகலதோஷங்களையும் தன்னைக்கொண்டே ஸாதிக்கலாய் ஸகலபுருஷார்த்தங்களும் தன்னையநுபவிக்கிற ஸாதநத்துக்குள்ளேகிடக்கும்படியாய் தன்னையுடையவனுக்கு பரிபூர்ண ஸம்ருத்தியையுண்டாக்கவற்றாய்த் தன்னையுடையவன்காலிலே யெல்லாரும்விழும்படி பண்ணவைத்தாய் மற்றும் ஸகலவிதகுணங்களையுடைத்தாயிருக்கிறவென்றபடி. இத்தால் ஊரார்பழிக்குமஞ்சாதே தாயையும்கைவிட்டுத் தனிவழிபோகைக்கு நிபந்தநஞ்சொல்லித்தாய்த்து. மதுசூதனையே - மத்வஸுர ஹநனையே, விரோதிநிராஸகனானவனையென்றபடி. உத்தேஶ்யமானதுதானே விரோதியையும்போக்கித் தன்னையநுபவிப்பிக்கவைத்தாயிருக்கிறதென்றுகருத்து. அலற்றி — தத்ஸம்பந்தமான ஸாந்நித்யாலே ப்ரலாபித்து, இதுக்குச்சொன்னவென்கிறத்தோடே அந்வயம். கொத்து - புஷ்பமஞ்ஜரிகள், அலர் - விகஸிதமாநிற்கிற, தாம் விரஹதஶையையநுஸந்திக்க க்ஷமரல்லாதபடி திருக்கோளூரி லெம்பெருமான்பக்கல் ஸக்தசித்தராகையாலே தமக்குப்பிறந்தவாஶ்வாஸத்தால்ஸமுத்புஷ்பவங்களானவென்றபடி. பொழில் - உத்யாநங்களையுடைத்தான, குருகூர்ச்சடகோபன்சொன்ன — ஸ்ருஷ்டம், இதுபத்துக்குவிஶேஷணம். பத்து - பத்துப்படிகளான, "ஸஹஸ்ரஶாகோபநிஷத்" என்கிறஶ்லோகத்தின்படியே ஸஹஸ்ரஶாகைகளான பத்தங்களையடைவே ப்ரகாஶிக்கிறவையானவென்றபடி. நூற்றுள் - ஶதங்களுக்குள்ளே, இப்பத்து - ப்ராப்யப்ராப்பகஸ்வரூபமான விஷயத்தை, இதுக்கு உரைப்பாரென்கிறதோடே அந்வயம். அவன்சேர் - அவனெழுந்தருளியிருக்கிற, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரிலே, சித்தம்வைத்து - சித்தத்தைவைத்து, அவ்வூரிலேப்ரவணமான மநஸ்ஸையுடையவராய்க்கொண்டென்றபடி. உரைப்பார் — சொல்லுகிறவர்கள், திகழ் - உஜ்ஜ்வலமாயிருக்கிற, ஸமஸ்தஸாதநங்களாலே யுஜ்ஜ்வலமானவென்றபடி, பொன்னுலகு - ஸ்வப்ரகாஶமாயுமுள்ளமான லோகத்தை, பரமபதத்தையென்றபடி. ஆள்வாரே - ஆளுவர்கள், ஸமஸ்தாநந்தமுள்ளவரோடேயாலே ஸ்வாதந்த்ர்யமாகப் போஜிப்பரென்றபடி. ॥௧௧॥

ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஶேவதி ஸ்ரீமதெதிராஜ ராமாநுஜ மஹாதேஶிகாய நம:.

ஸ்ரீ:.

த்ருதீயோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(உண்ணுஞ்சோறு.)

பாரப்ராப்த்யுஷஸ்ஸஹ ஸஹிதம் த்ருஷ்டிவே: ஸ்ரீஶௌரிதேவ்ய மஹேந்த்ர
வ்ருஷ்டிஷ்வநாதிர ஸ்வாரஸ்ய ப்ரஶ்நவாஸா ஸ்தாநமநோநதாம் வ்ருஷா: ।
யத்த்ரார்த்ராநுஷ்டி வநபர ப்ருந்தாநுபூதபாஷாஸம்ப்ராப்த தாநாம
வேதாநாமஸ்ருஷ்டாஸப்தாங்கபரஸ்பர ஸ்வாதாப்ய ஶேஷிநாம: ॥௭௬॥

(பாரப்ராப்த்யுஷஸ்ஸஹ) கண்ணனெம்பெருமானென்றென்றே பரக்கத்தோடே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து

ஈ — தா — படைத்தவளஸௌந்த்ர்யத்தாலும், (ஸம்ருத்திமத்தர்மேவ) பேருநதார்களுமேபிதற்றி - திருநாமஸங்கீர்த்-
னத்தாலும் திருமாலையினுடையஉக்தியாலும், (ஸ்ரீமத்தேஶ்யபத்மநேத்ர) இத்தாலே நாலுபாட்டில் ஸம்பந்-
தம்தோத்ராஷ்டகமாக்கப்படுகிறது. யாவையும்திருமால் - செல்வம்மல்கியவன்கிடந்த - இனித்தன்திருமால்திருக்
கோளூரில் - தன்திருமால் திருக்கண்ணுஞ்செவ்வாயுங்கண்டு - ஸ்ரியஃபதித்வத்தாலும் அத்தாலுண்டானவை
பவஸம்ருத்தியாலும் பிராட்டியோடே பொருந்தியிருக்கையாலே நித்யஸந்நிதாகச்செல்லுகிற தீர்த்தாதிகா
திஷ்டாதிஸௌகர்யத்தாலும், தத்ஸம்ஶ்லேஷத்தாலே புதுக்கணித்ததிருக்கண்கள்முதலான திவ்யாவயவஶோ
பையாலும், (ஸௌந்தர்யேண) நெடுமாலென்றழைத்தினிப்போய் - ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தாலும்
(ஆஶ்ரிதவ்யாமோஹ) ஒசிந்தவொண்மலராள் கொழுநன் - வேரிமாறாதபூமேலிருப்பாளுக்கநுரூபமான
ஸௌகுமார்யாதியாலும், (ஸ்ரீதவாரவஸ்த) என்கண்ணுக்கென்றீரியாயிருப்பாள். - ஆஶ்ரிதவாத்ஸல்யத்தை
யாலும், (ஸர்வலோகைகநாதேஸ்ய) அனைத்துலகுமுடையவரவிந்தலோசனனை- ஸர்வஸ்வாமித்வத்தாலும்,
ஆஶ்ரயத்தாலே அத்தைக்கோள்சொல்லுகிற ஈரவிந்தலோசனத்வம் ஸங்க்ருஹீதமாகிறது. இப்படிகளாலே
திருக்கோளூரெம்பெருமான் ஆஶ்ரிதர்க்கு விஶ்லேஷஸம்பத்தில் ஸவாதீனதியில்லாதபடி ஸௌலப்யாதிகளை
யுண்டாக்காநிற்கிறானென்று "உண்ணுஞ்சோறு" என்கிறதஶகத்திலே ஸம்ஶ்லேஷாநுஜீவநாஸ்வாத்மாகவேதங்களை
ஆஶ்ரிதஸாக்ஷாத்ருத்யமாக ஸங்க்ருஹித்த ஸ்ரீகோவர் உபகரித்தருளினார்என்கிறார். ॥௭ ௬॥

ஸ்ரீமதேநிஶமாஸஹாஸேஶிகாயநம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆறும்பத்தில் ஏழாந்திருவாய்மொழிமுற்றிற்று.



# எட்டாந்திருவாய்மொழி.

ஆ — (பொன்னுலகு) திருக்கோளூரிலேபோய்ப்புக் கெம்பெருமானோடே ஸம்ஶ்லேஷித்ததெல்லாம் மநோர
தமாத்ரமாய் பழையபடியே எம்பெருமானைக்காணப்பெறாமையாலே தத்விரஹாஸஹாராய் அந்யாபதேஶ
த்தாலே ஒருபிராட்டியாய் அவனைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறார்; இப்படி திருக்கோளூரிலே

---

எட்டாந்திருவாய்மொழி.

இ — மாலுக்குவையத்திலே விரஹவ்யஸநத்தால்வந்த மோஹாதியாலும் உண்ணுஞ்சோற்றிலே திருக்கோ
ளூரிலே எம்பெருமான்பக்கலிலே ஸங்கல்பம் மிகவும் த்ருடமாகையாலும் "விஸ்மார ஸர்வகார்யாணி ந
தத்ரஜாநாதி" என்னும்படியான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப்போலே தம்மைமறந்து தம்முடைய விரஹதசை
யையுமநுஸந்திக்க க்ஷமரல்லாதவராயிருந்த வாழ்வார் விரஹாநுஸந்தாநதஶையிற்போலே இத்திருவாய்
மொழியிலே யொருபிராட்டி யெம்பெருமானுக்கு தூதப்ரேஷணம்பண்ணுகிறதாகச்சொல்லுமை ப்ரஸங்க
மன்றோவென்னவவதரிப்பிக்கிறார் (திருக்கோளூரிலேஐத்யாதியால்) அப்படியிருந்தாரேயாகிலும் திருக்
கோளூரிலெம்பெருமான்பக்கலிலே ஸங்காஸக்தராய் அவன்குணங்களை நெடும்போதநுபவிக்கையாலே
பெருவிடாய்ப்பட்டவர்கள் நீரிலேமுழுகி ஸம்ஶ்லேஷிக்குமாப்போலே அந்தவிரஹவ்யஸநத்தால்வந்த மோ
ஹாதிநீங்கி ஸம்ஶ்லேஷித்து "ப்ரஹ்லாதோஸ்மி ஸஸ்மார" என்னுமாப்போலே தம்மையுணர்ந்து தம்முடைய
தஶைகளையுமநுஸந்திக்கக்ஷமரானவாறே பழையபடியே தம்முடையவிரஹதஶை உபலம்பமாகையால்
அத்தை ப்ரஸஹ்யாநராய்க்கொண்டு தூதப்ரேஷணம்பண்ணுகிறாரென்றுகருத்து. காணப்பெறாமையாலே
என்றது - பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷம்படி காணப்பெறாமையாலேஎன்றபடி. ஒருபிராட்டியாயென்றது - வி
ரஹிணியானவொருபிராட்டி தஶையையுடையவராயென்றபடி. அந்யாபதேஶத்தாலே தூதப்ரேஷ
ணம்பண்ணுகிறாரென்றபடி. இப்படி ஸ்வாபதேஶத்திலே திருவாய்மொழிஸங்கதமானாலும் மாலுக்குவையத்தி
லே மோஹதஶையாயிருந்த பிராட்டி இத்திருக்கோளூரிலேசென்றாளென்று உண்ணுஞ்சோற்றிலே சொல்
லுகையாலே இவளுக்கு தூதப்ரேஷணம்பண்ணவேண்டாமையால் அந்யாபதேஶத்திலே இத்திருவாய்
மொழி ப்ரஸங்கமன்றோவென்னவவதரிப்பிக்கிறார் (இப்படிதிருக்கோளூரிலேயெழுந்தருளினவித்யாதியால்),

மூ— பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ * நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேனிரந்தேன் * முன்

ஆ— யெழுந்தருளினபிராட்டியோடுள்ள விரஹாவஸாந ஸம்ஶ்லேஷஜநிதாநவதிகாதிஶய ஸந்தோஷார்ணவாந்தர்நிமக்நனான வெம்பெருமான் அந்த ஸந்தோஷவெள்ளந் தனக்கு ஸாத்ம்யமானவாறே அதஸாத்மிக்கைக்காக விஶ்லேஷித்து நெடுங் காலம் எழுந்தருளாதிருந்தவாறே தத்விஶ்லேஷத்தாலே ஸத்யஸ்ஸந்நிவேஶயான பிராட்டி தன்னுடைய ஆற்றா மையாலே அவனைக்குறித்து சிலபக்ஷிகளைத் தூதாகவிடுகிறாளென்றுமாம். திருக்கோளூரிலே போய்ப்புக்க வேணுமென்று புறப்பட்டவிப்பிராட்டி தன்னுடைய ஸ்வபாவத்தாலே பின்னைபோகக்ஷமையன்றியே அங்கே உத்யானத்திலேயிருந்து எம்பெருமானைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறாளென்றுமாம். ஶ்ரிய:ஸம் ஶ்லேஷகார்யாணக்ஷோபஸமாஹ்ருஷ்டனாய் திவ்யநவரத்நவரதமான விஷமவிவேசனையாய்க்கொண்டு என்னோடு ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷிக்கிறான், என்னுடைய ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டென்னைத் தோற்பித்துத் தனக்கடிமையாக்கிக்கொண்ட எம்பெருமான்தன்னைப்பிரிந்து நான்படுகிற வ்யஸநத்தைச்சென்று சொல்லவேணுமென்று புள்ளினங்களைக்குறித்துச்சொல்ல; பின்னையும்அவை போகாதிருந்தவாறே அவன் நம்முடைய அபேக்ஷிதஞ்செய்யாதொழியில் செய்வதென்னென்று போகாதிருந்தனவாகக்கொண்டு

இ— தூதாகவிடுகிறாளென்றுமாமென்கிறவிடத்தில் ஸந்தேஹமானது மேல்வாக்யத்தில் ஸந்தேஹபத்தோடே அந்வயிக்கிறது. ஸ்வாபதேஶத்திலே திருக்கோளூரிலெம்பெருமானோடு பாஹ்யஸம்ஶ்லேஷமின்றிக்கேயிருக்க அந்யாபதேஶத்திலே யவனோடு பாஹ்யஸம்ஶ்லேஷம் நடந்ததாகச்சொன்னால் விருத்தார்த்தமாமென்கிற அபிப்ராயத்தாலே ப்ரகாராந்தரேண அவதரிப்பிக்கிறார் (திருக்கோளூரிலேபோய்ப்புகவேணுமித்யாதியால்) *

❈ முதற்பாட்டு ❈

பிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஶ்ரிய:ஸம்ஶ்லேஷேத்யாதியால்): பொன்னுலகாளீரோ இத்யாதியாலே உபயவிபூதியையும் வடுகர்க்கிவள் கொடுக்கிறதாகச்சொல்லும்போ திவ்விபூதிகளெல்லா மிவளதீநமென்னுமிட மிப்பாட்டிலேசொல்லவேண்டுகையால் பிரானென்கிறபதத்துக்கிப்படி தாத்பர்யமாகை யுசிதமென்றுகருத்து. என்னலங்கொண்டவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஶ்லேஷிக்கிறானித்யாதியால்) விஶ்லேஷிக்கிறானென்றது - விஶ்லேஷியாநிற்கிறவனென்றபடி. ஸர்வஸ்வத்தையுமென்றது - ஸௌந்தர்யலாவண்யாதிரூபநலங்களாதிகளையென்றபடி. த்ருதீயபாதத்தில்சொல்லுகிற விஶேஷணங்களுக்கு ப்ரயோஜநமேதென்னவதுசொல்லுகைக்காக அவதரிப்பிக்கிறார் (பிரிந்துநான்படுகிறவித்யாதியால்) போகாதிருந்தனவாகக்கொண்டு என்றது - போகாதேயிருந்தனவாக உத்ப்ரேக்ஷித்துஎன்றபடி. இந்தஸம்ஶ்லேஷயைப்

ப— நன்னல - நல்லதான நலத்தைபுடையவையான, நலம் - ஸௌந்தர்யகுணம். ஸந்தித்தார்க்குக் காரியஞ்செய்கைக்கடியான தயாஸௌஹார்த்த ஸௌந்தர்யகுணங்களை யுடையவையானவென்றபடி. புள்ளினங்காள் - பக்ஷிக ணங்காள், புள் - பக்ஷி, இனம் - கணம், பிரிந்தாரைச்சேர்க்கை திர்யக்குக்களுக்குக்காரியமென்று இருக்கி றாள் ஸாத்வதாரத்தில் வாஸநையாலே. இனங்காளென்று “நிக்ஷேபஸர்வஸாமர்த்யே” என்கிறபடியே யெல்லாவிக்கினும்போகவிடலாம்படி திரள் இருக்கிறபடியைக்கொண்டாடினபடி. முன் - பண்டைக்காலத்திலே; இந்த ஜகத்துக்களெல்லாம் கரண களேவரங்களை யிழந்து தங்களுடைய ஸத்பாவங்களை யறிவிக்கவும் மாட்டாதே கிடக்கிற தஶையிலே யென்றபடி. உலகங்களெல்லாம் - லோகங்களை யெல்லாற்றையும், படைத்த - தன் காருண்யத்தாலே ஸ்ருஷ்டித்தவனை, முகில்வண்ணன் - மேகஸ்வபாவனை வண்ணம் - ஸ்வபாவம் வாமேக வாரனை என்றபடி. கண்ணன் - க்ருஷ்ணனை, ஆஶ்ரிதஸுலபனைவென்றபடி. அவதாரதஶையிலேயிறே வாத்ஸல்யாதிகள்நமக்குப்ப்ரகாஶிப்பது, என்னலம் - என்னுடையநன்மைகளை, என்னுடைய ஸௌந்தர்யாதிகுணங்களையும் பாதிவ்ரத்யாதிகளான ஆத்மகுணங்களையும்என்றுஸர்வாபிவத்தைபுமென்றபடி. கொண்ட - அபஹரித்தவனை, விஶ்லேஷத்தாலேஅஸஹ்யமாம்படி பண்ணினவனை என்றபடி. பிரான்தனக்கு - உபகாரகனானவனுக்கு, இந்த விஶ்லேஷாநுபவம் என்னோடு ஸம்ஶ்லேஷித்து ஶ்ரிய:ஸம்ஶ்லேஷக மோஹனாய் திவ்யநாதாதீயவிபூதிகளுமிருந்தவனுக் கென்றபடி. அவனுடைய ஸந்நிதானத்திலு மிவள் உபயவிபூதியையு மிஷ்டவிநியோகார்ஹமாகக் கொடுக்கும்படியிறே யவன் தன்னையும் தன் விபூதியையு மிவளுக்காக்கிவைத் தபடி. என்னிலைமை - என்னுடைய ஸ்திதியை, உரைத்து - விண்ணப்பஞ்செய்து; பொன்னுலகு - ஸ்வர்க்காதி

மூ—என்திருமகள்சேர்மார்வனேயென்னுமென்னுடையாவியேயென்னும்* நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்டநிலமகள்கேள்வனேயென்னும்* அன்றுருவேழுந்தழுவிநீகொண்டவாய்மகளன்பனேயென்னுந்* தென்

ஆ—ம்படி தீர்க்கநிஶ்வாஸத்தைப்பண்ணும். என்னுடையஸந்தாபமெல்லாம்போம்படி உன்னுடையஶீதளமான அஞ்ஜநமேனியைக் காட்டியருளாயென்னும். நீவரும்படி காணவேணுமென்றெழுந்திருந்து அநிமிஷாவலோகநையாய் ஆகாஶத்தைப்பார்த்துக்கொண்டிருக்கும். அங்குங்காணாதொழிந்தவாறே உன்னைக்காண்கைக்கு உபாயமேதோவென்னும். செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய் என்திருமகட்கினிநான்செய்வதென்னென்றுகூப்பிடுகிறாள். ॥அ॥

(என்திருமகள்) ஸர்வலோகேஶ்வரியாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மிகையாயிருந்த பெரியபிராட்டியார்க்கும்ஶேஷியாய் உன்னுடைய குணங்களாலே தாஸ்யைகரஸையான ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும் ஶேஷியாய் தன்னுடைய நிரவதிகஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாதி ஸம்பூர்ண கல்யாணகுணங்களாலே வஶீகார்யஸ்வபாவையான நப்பின்னைப்பிராட்டிக்கும் ப்ரணயியாயிருந்த நீ தத்ஸம்பந்தமாகையாலே என்னை ஸவிஷயமாக்கினப்போலே இன்னமும் தத்ஸம்பந்தமென்றென்னை யுன்திருக்கண்களாலே பார்த்தருளாயென்றுசொல்லும். இவளுக்காகக்கோயிலிலே கண்

இ—ருளிச்செய்கிறார் (நீவரும்படி இத்யாதியால்) எங்ஙனேநோக்குகேனென்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அங்குங்காணாதி இத்யாதியால்) ॥அ॥

✳ஒன்பதாம்பாட்டு.✳

திருமகள்சேர்மார்வனேஎன்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதியால்) நீகொண்டநிலமகள் கேள்வனேஎன்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடையகுணங்களாலே இத்யாதியால்) அன்றுருவேழுந்தழுவிநீகொண்ட என்கிறவிடத்தில் விஶிஷ்டதாத்பர்யத்தையருளிச்செய்கிறார் (தன்னுடையநிரவதிக இத்யாதியால்) ஆய்மகளன்பனேயென்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நப்பின்னை இத்யாதியால்) என்திருமகளென்கிறவிடத்திலே என்பதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தத்ஸம்பந்தமாகையாலேஎன்று) என்னுடையாவியேயென்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைஸ்வீகரித்யாதியால்) வாக்யத்திலபிப்ராயமருளிச்செய்கிறார் (இன்னமும் இத்யாதியால்) சரமவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளுக்காக இத்யாதியால்) ॥கூ॥

ப—வரப்பண்ணுவேனோ, இவ்விரண்டுமஶக்யமன்றோவென்றுகருத்து. ॥அ॥

என்திருமகள் - எனக்கு ஸ்வாமிநியான பெரியபிராட்டியார், சேர் - சேர்ந்திருக்கிற, நித்யமாக வஸியாநிற்கிறவென்றபடி. மார்வனேஎன்னும் - வக்ஷஸ்ஸ்தலம். பெரியபிராட்டியார்க்கு நான் ஸ்வபாவஸித்த வாத்ஸல்யைகரஸையான ஶேஷபூதையென்றன்றோ நீ என்னையென்றுமாதரிக்கிறது, இப்போதுமவளுடைய ஸம்பந்தவிஶேஷமாக என்னைகடாக்ஷித்தருளவேணுமென்கிறாளென்றுகருத்து, நின் - உன்னுடைய, திருவெயிற்றால் - ஸ்ரீதம்ஷ்ட்ரையால், எயிறு - தம்ஷ்ட்ரை. "தம்ஷ்ட்ராவராஹ தம்ஷ்ட்ராக்ர ஸம்லக்ந க்ஷ்மாம் கோஶேஷேவ ப்ருதிவீம்" என்னும்படி ஸுகுமாரமான திவ்யதம்ஷ்ட்ரையாலே என்றபடி. இடந்து - அண்டபித்தியத்தில்நின்றுங்கீண்டெடுத்து, உன்னை யநந்யார்ஹமாக்கித்துக்கொண்டாகிலும் ப்ரணயிநிகளுக்கு நீ காரியஞ்செய்யுமவனல்லையோ வென்கிறாளென்றுகருத்து. நீகொண்ட - இப்படி உன்னுடையப்ரணயித்வகுணத்தைக்காட்டி நீயுனக்கு ஶேஷமாக்கிக்கொண்ட, நிலமகள் - பூமிப்பிராட்டிக்கு, கேள்வனே என்னும் - வல்லபனேஎன்றுசொல்லாநிற்கும், அன்று - க்ருஷ்ணனோடே ஸம்ஶ்லேஷிக்கப் பெறுவேனோவென்று நப்பின்னைப்பிராட்டி வ்யஸநப்படாநின்றவந்த காலத்தில், உரு - இடிபோலே பயங்கரமான த்வநியை யுடையவையான வ்ருஷபங்களை, உருவென்று இடிபோலே பயங்கரத்வநியான்வஸ்துவுக்குப் பேர். ஏழு - ஏழுகளையும், தழுவி - ஆலிங்கநம் பண்ணி, மர்த்தநத்தாலேவஶீகரித்தென்றபடி. நீளாவகாஶம் ஸம்ஶ்லேஷஸாதநமாகையாலே தத்ஸம்ஶ்லேஷம்போலே க்ருஷ்ணனுக்கு போக்யமாயிருந்ததென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக மர்த்தநத்தை தழுவுதலாகச் சொல்லுகிறாள். நீகொண்ட - நீயுனக்காக்கிக்கொண்ட. ஆய்மகள் - கோபகுமாரிகைக்கு நப்பின்னைப்பிராட்டிக்கென்றபடி. அன்பனேயென்னும் - ப்ரியதமனேஎன்று சொல்லாநிற்கும். இப்படியவர்கள்பக்கலிலே ஸ்நேஹியாயிருந்த நீ அவர்களுக்கு ஶேஷமான வென்பக்கலிலே க்ருபை

மூ—திருவரங்கங்கோயில்கொண்டானே தெளிகிலேன் முடிவிவள்தனக்கே* ॥௰॥
முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும்* கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னும் நான்முகக்கடவுளேயென்னும்* வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்திருவரங்கனேயென்னும்*

ஆ—வளர்ந்தருளுகிற நீ இவளைப்பார்த்தருளுகிறதில்லை, இனியிவளுக்கென்னாய்விளையுமென்றொன்று மறிகிறிலேனென்கிறாள். ॥௰॥

(முடிவிவள்தனக்கு) இப்பெண்பிள்ளைதனக்கு முடிகைக்கொருபாய மறிகிலேனென்னும், ப்ரஹ்மருத்ராதி ஸகலதேவதைகளுக்கு அந்தராத்மதயாவஸ்திதனா யவர்களுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்த்யாதி ஹேதுபூதனானவனே? உன் திருவடிகளிலவர்களோபாதி யுறவுபோராதோவென்னும், அயர்வறுமமரர்களையுங்கூடத் தோற்பித்தடிமையாக்கிக்கொண்டிருக்கிற வுன்னைக்காட்டியருளாயென்னும், கோயிலிலேபுகுந்து கண்வளர்ந்தருளி ஸுஸ்திரப்ரதிஷ்டானம்பண்ணிக்கொண்டிருக்கிற பரமோதாரனேயென்னும்.

*பத்தாம்பாட்டு.*

இ—மூவுலகித்யாதிகடவுளேயென்னுமித்யந்தத்துக்கு வ்யாக்யாநரூபேண தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மருத்ராத்யாதியால்) இதுக்குப் பலதாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்திருவடிகளிலித்யாதியால்) வடிவுடைவானோர்தலைவனேயென்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அயர்வறுமித்யாதியால்) வண்திருவரங்கனேயென்னுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கோயிலிலேயித்யாதியால்) அடியுடையாதாள் போலிவளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பெருமாள்திருவடிகளையித்யாதியால்) சேர்ந்துமுடியவென்றது - சேர்ந்துதலைக்கட்டஎன்றபடி. போய்முடிந்தாளென்றது - மிகவும் ஜீர்ணையானாளென்றபடி.

ப—பண்ணுதொழிவதெங்ஙனே யென்றாளென்றுகருத்து. தென் - ஸுந்தரமான, திருவரங்கம் - ஸ்ரீரங்கத்தை, கோயில் கொண்டானே - கோயிலாகக்கொண்டவனே, அவதாரத்திலே யுதவாதாருன்னை யிழந்து போகாதபடி கோயிலை நித்யவாஸஸ்தாநமாக ஸ்வீகரித்தவனே என்றபடி. இவள்தனக்கு - இப்பெண்பிள்ளைக்கு, தன்னென்று ஸாவதாரணப்ரயோகம். முடிவு - தேஹாவஸாநத்தை, முடிவு - அவஸாநம், தெளிகிலேன் - தெளியமாட்டுகிறேனில்லை, நீஎத்தனை ஸர்வஜ்ஞனேயாகிலு மிவளுடைய வ்யஸநஸங்கட்யத்தைப் பார்த்தாலிதுக்கு முடிவுண்டாகப் புகுகிறதாகவெனக்குத் தோற்றுகிறதில்லைஎன்றபடி. ॥௰॥

இவள் - இப்பெண் பிள்ளையானவள், தனக்கு - விரஹாக்நி ஸந்தப்தையானதனக்கு, முடிவொன்று - முடிவை யொன்றையும், முடிக்கைக்குபாயமொன்றையு மென்றபடி. இங்குமுடிவு சப்தம் முடிக்கைக்கு உபாயபரம். அறிகிலேனென்னும் - அறியமாட்டுகிறிலே னென்றுசொல்லுகிறாள். இந்தவிரஹ தசையிலே தனக்கு முடிகையே நன்மை யென்று நினைத்து அதுக்குபாய மொன்று மறியமாட்டுகிறிலே னென்று சொல்லாநிற்கிறாளென்று கருத்து. மூவுலகாளியே என்னும் - மூன்றுலோகங்களையு மாளுகிறவனேஎன்னாநிற்கிறாள், மூன்றுலோகங்களையுமாளுகிற விஷ்ணுக்கந்தராத்மபூதனே என்றுசொல்லுகிறாளென்றபடி. கடி - பரிமளமானது, கமழ் - பரிமளியாநிற்கிற, கமழ்கை - பரிமளிக்கை. பரிமளம் ப்ரவஹியாநிற்கிற என்றபடி, கொன்றைச் சடையனே யென்னும் - கொன்றைப்பூவை ஜடையிலே யுடையவனேயென்னாநிற்கிறாள். ருத்ரனுக்கந்தராத்மபூதனே என்றுசொல்லாநிற்கிறாளென்றபடி. நான்முக - சதுர்முகனான, கடவுளேயென்னும் - தெய்வமேஎன்னாநிற்கிறாள். கடவுள் - தெய்வம், சதுர்முகனாகிய தேவதைக்கந்தராத்மபூதனே என்று சொல்லாநிற்கிறாளென்றபடி. ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மருத்ராதிகளோடுள்ள வுறவு சேஷைக ஜீவிதையான என்னோடுனக் கில்லையோ வென்று தாத்பர்யம். வடிவுடை - திவ்யரூபத்தை யுடையவர்களான, பகவதநுபவ ரஸமெல்லாம் வடிவிலேதோன்றும்படி யுஜ்ஜ்வலரூப ஸாலிகளான என்றபடி, வானோர் - நித்யஸூரிகளுக்கு, தலைவனேஎன்னும்-ப்ரதாநனே என்னாநிற்கிறாள், உன்னழகாலேயவர்களை தோற்பித்தடிமை யாக்கிக்கொண்டு அவர்களுக்கு சேஷியாயிருக்கிறவனே என்றுசொல்லுகிறா ளென்றபடி. அவர்களுக்கு நீயுன்னைக் கொடுத்துக்கொண்டிருக்குமாப்போலேஎனக்கு முன்னைக்காட்டியருளா யென்கிறாள் என்று தாத்பர்யம். வண் - உதாரமான, திருவரங்கனேயென்னும் - ஸ்ரீரங்கத்திலேயிருக்கிறவனேஎன்னாநிற்கும். நித்யஸூரிகள் மாத்ரமநுபவிக்கிறதாய்ப்போகாதே ஸம்ஸாரிகளுமநுபவிக்கும்படி கோயிலிலே

மூ—அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள்முகில்வண்ணனடியே* ||௰||
முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன்மொய்புனற்பொருநல்* துகில்வண்ணத்தூநீர்சேர்ப்பன்
வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன்* முகில்வண்ணனடிமேற்சொன்னசொல்மாலையாயிரத்திப்பத்து

ஆ—இனி பெருமாள்திருவடிகளைச்சேர்ந்து முடியமாட்டாள் போய்முடிந்தாளென்னும்படி உத்க்ருஷ்டப்ரேமவிஶேஷயானவிவள் ப்ரபூதமானவிந்த விஶ்லேஷநிபந்தநமான ஸர்வவிதஸந்தாபமெல்லாம் விஸ்ம்ருதமாம்படி தானாசைப்பட்டபடியே பெரியபெருமாள்திருவடிகளையே ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றாள் என்றிவளுடைய திருத்தாயார் ப்ரீதையாகிறாள். ||௰||

(முகில்வண்ணன்) பெரியபெருமாள்திருவடிகளைச்சேர்ந்து ஸர்வப்ரகாரஸம்ஶ்லேஷமும் பண்ணப்பெறுகையாலே உஜ்ஜீவநராய் ஸாத்ரவஸஞ்ஜநிதவைவர்ண்யமான திருப்பொருநலாலும் ரமணீய த்ருமஷண்ட ஸந்தோநிதாரிதாநிகாரங்களாலும் பரிவேஷ்டிதமான திவ்யநகரியையுடையனாயிருந்த சடகோபன் முகில்வண்ணனடிமேற்சொன்ன சொல்மாலையாயிரத்திப்பத்தும்வல்லார் பெரியபெருமாள்திருமேனியில் நீலமான ஜ்யோதிஸ்ஸின்வெள்ளத்தாலே தேஜோரூபமான திருநாட்டிலே பயர்வறுமமரர்கள்சூழ ஸவி

இ—த்ருதவ்ரதையாளென்றுகருத்து. அணுகியித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரபூதமான வித்யாதிகளால்) இத்தால் ஸர்வேஶ்வரனிவளுடைய வ்யாகுலதையையறிந்து தன்ஶீலாதிஶயத்தாலும் ஔதார்யத்தாலுமிவளுடையவாஞ்சாஸம்ஶ்லேஷத்தை விஶேஷித்து ப்ரகாஶிப்பிக்க இவளுக்கதால்பிறந்த ஸந்தோஷத்தைக்கண்டு தாயார் ஸந்தோஷயாய்ச்சொல்லுகிறாளென்று ஸங்க்ஷிப்தார்த்தம். ||௰||

✳நிகமனம்.✳

முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுயர்ந்தவனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பெரியவித்யாதியால்) மொய்புனற்பொருநல்துகில்வண்ணத்தூநீர்சேர்ப்பனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாத்ரவஸஞ்ஜேத்யாதியால்) வண்பொழில்சூழ்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (த்ருமஷண்டேத்யாதியால்) வண்குருகூர்ச்சடகோபனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திவ்யநகரேத்யாதியால்) முகில்வண்ணவானத்துஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பெரியபெருமாளித்யாதியால்) இமையவர்சூழஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்வறுமித்யாதியால்) பேரின்பவெள்ளத்தேஎன்கிற

ஶ—வந்து கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனேஎன்கிறாளென்று பதார்த்தம். நீ கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற ஸுகம்நான் பெறவேண்டாவோ என்கிறாளென்று ஸாரதாத்பர்யம். அடி - அவன்திருவடிகளை, அடையாதாள்போல்- அடையாதவள்போலே இருந்தவளான, இந்த விரஹத்தாலே யிவள் முடிந்து போமித்தனையொழிய இனியவன்திருவடிகளை யடையமாட்டாளென்னும்படி இருந்தவளான என்றபடி. இவள் - இப்பெண்பிள்ளையானவள், முகில்வண்ணன் - மேகஸ்வபாவனானவனுடைய, முகில் - மேகம், ஜலஸ்தலவிபாகமற வர்ஷிக்கும் மேகம்போலே ஸர்வருக்கு முபகரிக்கும் ஸ்வபாவரான பெரியபெருமாளுடைய என்றபடி. அடி - திருவடிகளை, அணுகி - கிட்டி, அடைந்தனள் - அடைந்தாள், தேஶாந்தரத்திலேவிஶதமாக ஸந்ஶ்லேஷிக்கப்பெற்று ஸுகித்தாளென்று கருத்து. ||௰||

முகில்வண்ணன் - மேகவர்ணரான பெரியபெருமாளுடைய, அடியை - திருவடிகளை, அடைந்து - ஸம்ஶ்லேஷித்து, தேஶாந்தரத்திலே விஶதமாக ஸந்ஶ்லேஷித்தென்றபடி. அருள்சூடி - க்ருபையை ஶிரஸாவஹித்து, அவருடைய ப்ரஸாதத்தைப் பெற்றுஎன்றபடி. உய்ந்தவன் - உஜ்ஜீவித்தவரான, விரஹதாபந்தீர்ந்து ஸுகித்தவரான என்றபடி. மொய் - நிபிடங்களான, ஸம்ருத்தங்களான என்றபடி. புனல் - ஜலங்களை யுடைத்தான, பொருநல் - தாம்ரபர்ணியினுடைய, இதுக்கு, நீர் என்கிறத்தோடேயந்வயம். துகில்வண்ண - படவர்ண ஸத்ருஶம்போலே, துகில் - படவஸ்த்ரம், தூ - ஶுப்ரமான, "ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா" என்கிறபடியே அதிஸ்வச்சமானஎன்று பதார்த்தம். நீர் - ஜலத்தை, சேர்ப்பன் - சேர்ந்தவரான, தாம்ரபர்ணீதீரஸந்நிஹிதரான என்றபடி. வண் - அதிஸாந்த்ரங்களான, பொழில் - உத்யானங்களாலே, சூழ் - பரிவ்ருதமான, வண்குருகூர் - அதிரமணீய திருநகரியில், சடகோபன் - ஆழ்வாரானவர், முகிலவண்ணனடிமேற்சொன்ன - மேகவர்ணன்விஷயமாகவருளிச்செய்ததான, சொல்மாலையாயிரத்து - ஸூக்திரூபஸஹஸ்ரத்தில்,

மூ—மவல்லார்* முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர்பேரின்பவெள்ளத்தே* ॥கக॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ—ஸ-முகிகவர்ஸேவாஸக்தநஸஹஜநித நிரவதிகாநந்த ஸமானாவாஸநிமக்நராயிருப்பரென்கிறார். ॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ—தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸவிஸ-முகிகெத்யாதியால்) ॥கக॥

ஈ— இப்பத்தும்- இந்த பத்து பாட்டுக்களையும், வல்லார்- ஸஹ்ருவிக்கவல்லார்கள், முகில்வண்ண- ஜேவவணமான, பெரியபெருமாளுடைய திருமேனியி லத்யுஜ்வலகாந்தியுக்தவாஸங்களாலே நீலவணமான என்றபடி. வானத்து- பரமவ்யோமத்திலே, இமையவர்-தேவர்கள், நித்யஸூரிகளென்றபடி. சூழ- இவர்கள்பக்கலாதரா திசயத்தாலேசூழ்ந்துகொண்டிருக்க, பேரின்ப வெள்ளத்தே - ஸமாநந்தவ்யவாஸத்திலே, இன்பம் - ஆநந்தம் வரிவுமணம் ஸமஸ்தாநந்தானந்தத்திலேஎன்றபடி. இருப்பர் - நித்யமாக ஸுகிஷ்தராவர்கள். ॥கக॥

ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஸேவதிஶ்ரீஸவ்வாஸராமாநுஜமஹாதேஶிகாயநம:.

ஶ்ரீ:

த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலீ.

(கங்குலும்பகலும்.)

ஶ்ரீரங்கேஸஸ்யாநாத்விஜமஹிதாஸ்ருஷ்டகாலேத்யுஸ்ராவிதார

த்விஸந்த்யாஸ்தாயா¬ரமணயநத: கோஷகாமநாஸ்ராவம் ।

ஸமாஸமவ்யூஹநாஜ்ஞமஹிதநாதயோவதிவ்யாதரஸாக

ஸாம்யஸாநாம்விமலாமஸுஸமயகிவேத்யாதயிமாநுஸாரி: ॥

(ஶ்ரீரங்கேஸஸ்யாநாத) செங்கயல்பாய் நீர்திருவரங்கத்தாய் - திர்யக்குகளுக்குங்கூடக் களித்துவர்த்திக்கும்படி ஸுஸமமான ஜலஸம்ருத்தியையுடைய ஶ்ரீரங்கத்திலே யெழுந்தருளியிருக்கையாலும், (நிவிஜமஹிதாஸ்ருஷ்டகாலேத்யு:) முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய் - எல்லாலோகங்களையும் ஸ்ருஷ்டிக்கையாலும், ஆத்யஸ்ருஷ்த்தாலே ஸகலாமாயையிலே "காகுத்தாகண்ணனேயென்னும்" என்றுசொல்லுகிற கவதீயரக்ஷகத்வம் ஸம்ரக்ஷிக்கப்படுகிறது. (ஸாவிதார) சிட்டனே - வரிஸஜனுகையாலும், (த்விஸந்த்யாஸ்தாயா) அந்திப்போதவுணனுடலிடந்தானே - விரோதியான ஹிரண்யனை ஸம்ஹரிக்கையாலும் (உரமணயநத:) பைகொள்பாம்பணையாய் - தன்திருமேனிஸ்பர்சத்தாலுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவனந்தாழ்வானை திருப்படுக்கையாகவுடையவனுகையாலும், (கோஷகாமநாஸ்ராவம்ஸமாஸமவ்யூஹநாத) பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் - வேதநருடைய கர்மாநுகுணமாக ஸுகது:கங்களைக் கொடுக்குமவனுகையாலும், (ஜ்ஞமஹிதநாதயோவதிவ்யாதரஸாக) இங்கேஸம்விஸ்திதமன்று சூன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னும் - நின்திருவெயிற்றுவித்யாதி - முகில்வண்ணனடியை - மோக்ஷமநத்தைமெடுத்து மொமொவாஸகர்கருவகாரிக்கை பாலும், ஸாமஸாம்யத்தைக் கொண்டு ஸமுகிக்குவகாரிக்கையாலும், ஸஷ்டாகவஸாமகம்போலே ஸ்யாமோய்க்குளிர்ந்திருக்கிற வடிவையுடையனுகையாலும், எல்லார்க்கும்ஸாதியான ஶ்ரீரங்கநாயன் ஸ்வாஶ்ரிதருடைய மஹிமையை ஸதிப்பிக்கிறானென்று "கங்குலும்பகலும்" என்கிறஶதகத்திலே காரிமாறன் அருளிச்செய்தானென்கிறார். ॥

ஶ்ரீமதேநிகமாந்தமஹாதேஶிகாயநம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஏழாம்பத்தில் இரண்டாந்திருவாய்மொழிமுற்றிற்று.



# மூன்றாந்திருவாய்மொழி.

ஆ—(வெள்ளைச்சுரிசங்கு) இப்பிராட்டியோடே பெரியபெருமாள் ஸம்ஶ்லேஷரஸத்தை யநுபவித்து அந்த ஸம்ஶ்லேஷரஸமுள்ளடங்காதபடி பெருகினவாறே அதுஸாத்மிக்கைக்காகவு மாஶ்ரிதரக்ஷணார்த்தமாகவுந் தென்றிருப்பேரையிலே எழுந்தருளத்திருவுள்ளத்தே கோலியருளி இவளுடைய ஸமாதாநார்த்தமாக விவளிடத்திலே ஶீக்ராகமநத்தைப்பண்ணியருளி தென்றிருப்பேரையிலே வேட்டைக்குப்போய்வருகிறோமென்றருளிச்செய்ய, இப்படி அதிஶீக்ரகாமியான விவள் வ்யாமுக்தவிஶ்லேஷையாகையாலு மிவனெழுந்தருளுகை யிவனைக்காணுதொழிகைக்கு ஹேதுவென்னுமிட மறியாமையாலு மெழுந்தருள ஸம்மதித்து விஜயத்தைப்ராஶம்ஸித்து திவ்யாயுதங்களைக்கொடுத்தருளி "ஸூர்யாரஸநாநந்தயாஜ ஶம்ஸநாந்விஶயந்தீ" என்னும் ஸூக்தியையாலே திருப்பல்லாண்டுபாடிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலளவும் பின்னேயெழுந்தருளப் பெரியதிருவடி திருத்தோளிலேயேறியருளி தாமரைத்தடாகம் மலர்ந்தாப்போலேயிருந்த திருக்கண்களாலே யிவளைப்புரிந்துபார்த்தருளி இவளாலேயநுஜ்ஞாதனாய்த் தென்றிருப்பேரையிலேயெழுந்தருள, இவளவனைக்காணுமையாலே க்ருதஸங்கல்பையாய் அவனெழுந்தருளியிருந்த தென்றிருப்பேரையிலேயெழுந்தருள வ்யவஸாயிக்க இவளுடைய திருத்தாயாரும் தோழிமாரும் மற்றுமுள்ள பந்துக்களு மிவளைப்ரதிஷேதிக்க நான்போகைதவிரேன், தனியேபோவேனென்னும் பழியுங்களுக்கு வாராமே

## மூன்றாந்திருவாய்மொழி.

இ — கீழ்ப்பாட்டில்சொன்னபடியே ஆழ்வார் பெரியபெருமாளோடு மாநஸஸம்ஶ்லேஷவிஶேஷத்தைப்பெற்று ஸந்துஷ்டராயிருக்க விஶ்லேஷதஶையில்போலே இத்திருவாய்மொழியிலே விரஹிணியான வொருபிராட்டியினுடைய பேச்சுக்களைப்பேசுகை யஸங்கதமன்றோவென்ன? இப்போதிவர் மாநஸாநுபவவிஶேஷத்தாலே ஸந்துஷ்டராயிருந்தாரேயாகிலும் பாஹ்யஸம்ஶ்லேஷங்கிடையாமையாலே பின்னையுமவஸந்நராய் இப்போதவனோடு பாஹ்யஸம்ஶ்லேஷம்பெறவேணுமென்று க்லேஶப்படுகிற தம்முடையதஶையை பெரியபெருமாளோடு ஸம்ஶ்லேஷித்துப்பிரிந்து விரஹார்த்தையான வொருபிராட்டியானவள் தான் திருப்பேரையில் செல்லவேணுமென்று அன்னைமாரையும் தோழிமாரையுங்குறித்துச்சொல்லுகிற வாக்யாவஸ்தையாலே பேசுகிறாளென்கிற கருத்தாலே யவதரிப்பிக்கிறார் (இப்பிராட்டியோடே இத்யாதியால்) இப்படி ஸ்வாவஸ்தையிலே இத்திருவாய்மொழி ஸங்கதமானாலும் அந்யாவஸ்தையிலே பெரியபெருமாளோடு ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று கீழ்த்திருவாய்மொழியிலே வ்யஸநப்பட்ட விப்பிராட்டி இத்திருவாய்மொழியிலே திருப்பேரையிலே செல்லவேணுமென்று பேசுகை யஸங்கதமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (அந்தஸம்ஶ்லேஷரஸமித்யாதியால்) இத்தனைஸம்ஶ்லேஷம் நடவாநிற்க இவளவன்விஶ்லேஷத்தை ஸம்மதிப்பளோ, இவள் ஸம்மதிக்கவில்லையாகில் அவனிவளை விஶ்லேஷித்துப்போகை யுசிதமோவென்னவருளிச்செய்கிறார் (இவளுடைய ஸமாதாநார்த்தமாகவித்யாதியால்) அவ்யாமுக்தவிஶ்லேஷையாகையாலுமென்றது - ஸம்ஶ்லேஷரஸபரவஶமாகையாலே விஶ்லேஷமின்னபடியிருக்குமென்று தெரியாதேபோம்படி அத்தை மறந்தவளாகையாலுமென்றபடி. (இவனெழுந்தருளுகையித்யாதி) இவன் திருப்பேரைக்கெழுந்தருளுகிறது இவனைக்காணுதேபோகுகைக்கு ஹேதுவென்னுமிடத்தை யறியமாட்டாதபடி அத்யந்தமுக்தையாகையாலுமென்றபடி. இவன் திருப்பேரைக்கெழுந்தருளுகிறதும் ஒருஸம்ஶ்லேஷவிஶேஷமென்றே எண்ணிக்கொண்டிருந்தாளென்றுகருத்து. இப்படி அவனைப்பிரிந்தவிவள் ஸாக்ஷாத்தன்னோடு அவன் ஸம்ஶ்லேஷித்திருந்த தஶையிலுண்டான வவனுடையவழகுகளை நினைத்துச்சொல்லுமத்தனையொழிய ஸம்வாதத்திலேயிருக்கிற தான் காணுதவனுடைய ப்ரயாணஸந்நாஹங்களை வெள்ளைச்சுரிசங்கொடித்யாதியாலே யிவள் பேசக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (விஜயத்தையித்யாதியால்) திவ்யாயுதங்களைக்கொடுத்தருளி என்கிறவிடத்திலே "ததஸ்ஸ்வஸ்த்யயநம் க்ருத்வா மந்த்ரவத்விஜயைஷிணீ யநாஷீவாயதேக்ஷணா । உதாஸீதா தயோர்ஹஸ்தௌ ஸப்ரேமுதார்த்தா" என்கிறஶ்லோகஸூசிதம். திருவணுக்கன் திருவாசலளவுஞ்சென்று ப்ரயாணஸந்நாஹங்களையெல்லாங் காண்கையாலே இவளவற்றைச் சொல்லக்கூடுமென்றதாய்த்து. புரிந்துபார்த்தருளி என்றது - திரும்பிப்பார்த்தருளி என்றபடி. *

மூ— வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித்தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே* புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீரென்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள்* வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தவேதவொலியும்விழா

ஆ— நீங்களேயென்னைத் தென்திருப்பேரையிலே யீண்டெனக்கொண்டுபோய்விடுங்கோளென்கிறாள். நிரதிசயௌஜ்ஜ்வல்ய வலிவர்ணம் நிஜ்ஜலம்பாரசு வசத்ருசமும்போலேயிருந்த ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், நிரதிசய தீப்தியுக்த ஸர்யஸமமும்போலேயிருந்த திருவாழியையுமேந்தி, பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே பெரியதிருவடி திருத்தோளிலேயேறிய நளி இலங்கொளிசேர அரவிந்தம்போன்ற நீண்டகண்களையுடையனானவ னென்னெஞ்சினூடே சாரிகைத்திரிந்தருளுகிறபடி நீங்கள் காணகிறிலீகோள். இன்னபடியென்றென்க்குச் சொல்லநிலமாகிறதில்லை, ஆதலாலவனை யொருக்ஷணங்காணுதொழியில் தரிக்கமாட்டேன் வேதகோஷத்தாலும் உத்ஸவகோஷத்தாலும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸம்ப்ரமகோஷத்தாலும் வலிவர்ணமான திருப்பேரையிலே உத்ஸவஜநித நிரவதிகஸம்ப

✳✳✳✳ முதற்பாட்டு ✳✳✳✳

இ— வெள்ளைச்சுரிசங்கொடு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயௌஜ்ஜ்வல்யத்யாதியால்) ஆழியேந்தியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயதீப்தீத்யாதியால்) புள்ளைக்கடாகின்ற என்கிறவிடத்தி லபிப்ராயவிசேஷத்தை யருளிச்செய்கிறார் (பொன்மலையித்யாதியால்) மீமிசையென்றது - உபரி என்றபடி. கநகாசலோபரி காளமேகம்போலேயென்றபடி. தாமரைக்கண்ணனென்கிறதற்கு திருமொழிப்பாசுரத்தாலே தாத்பர்யமருளிச்செய்கிறார் (இலங்கொளியித்யாதியால்) இலங்கொளி – விளங்காநிற்கிறகாந்தியானது, சேர் - சேர்ந்திருக்கிற, காந்திப்ரசுரமாயிருக்கிற என்றபடி அரவிந்தம்போன்ற – அரவிந்தஸத்ருசமான, புள்ளைக்கடாகின்றவாற்றைஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சாரிகையித்யாதியால்) என்சொல்லிச்சொல்லுகேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்னபடியித்யாதியால்) வாக்யார்த்துக்குப் பரமதாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாவித்யாதியால்) வேதவொலியுமித்யாதி விளையாட்டொலியுமறுமளவுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதகித்யாதியால்) ஸ்ரீவைஷ்ணவரானவென்கிறவிடத்திலே "வைஷ்ணவநிஜஸ்ரீவைஷ்ணவர் ஸ்ரீமஹாஸ்ரேஷ்டஸம்பஸ: । ராமோவிஷ்ணுஸ்ஸம்பாக்தா ஸ்ருக்ஷேவதியெஸ்யா:” என்கிறஸ்லோகமநுஸந்தேயம். வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உத்ஸ

ப— அன்னைமீர்காள்? - மாத்ருஜநங்காள், வெள்ளை - தவளமான, ஸ்பாடிகமானதிருமேனிக்குப் பரபாகமாம்படி சுத்தமான என்றபடி, சுரிசங்கொண்டு - சுரியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே, சுரி - சுழல், சக்கச்சுழிபோலே வலம்புரியான ஸகலசங்கலக்ஷணவிசேஷத்தையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடேகூட என்றபடி. ஆழி - வட்டமானது, அப்படியொருவிசேஷண மிட்டுச்சொல்ல வொண்ணாதபடி சுதர்சனமான ஸ்ரீஸுதர்சனத்தைஎன்றபடி. ஏந்தி - அவற்றில்வைஷ்ணவத்தாலே திருக்கைகளாலே ஏந்திக்கொண்டென்றபடி. தாமரைக்கண்ணன் - சரணாரவிந்தவதனன், கரசரணங்களையுந் திருக்கண்களையும்சேர வர்ணித்தது இவைகளுடையவசீகரண்யதன்மை ஸௌந்தர்யத்துக்குண்டாயிருக்கையாலே. அதாவது:— திருக்கண்களைப்போலே திவ்யாயுதங்களும் திருமேனிக்கலங்காரமாயிருக்கையாலும் திவ்யாயுதங்களைப்போலே திருக்கண்களும் எல்லாரையும் தோற்றுக்காலிலே விழப்பண்ணுகையாலுமென்றபடி. என்னெஞ்சின் - என்னுள்ளினுடைய, ஊடே - மத்யத்திலே, புள்ளை - பக்ஷியை, கருடனை என்றபடி, கடாகின்ற - கதியாக நடத்துகிற, ஆற்றை - ப்ரகாரத்தை. ஆறு - ப்ரகாரம், கடாகின்ற ஆற்றைஎன்கிறவிடத்திலே ஸப்தமியிலேயகாராகமும். காணீர் - காண்கிறீகோளில்லை. உங்கள்நெஞ்சிலே தோற்றாத மார்த்தத்தைக்கொண்டு நீங்களிதுகூடாதென்றிருக்கக்கூடுமோ வென்றுகருத்து. நாங்கள் காணோமாகில் நீசொல்லலாகாதோவென்ன? உத்தரஞ் சொல்லுகிறாள். என் சொல்லி - என்ன பாசுரத்தைச் சொல்லி, சொல்லுகேன் - என்னெஞ்சில்நடக்கிற வாச்யார்த்தைச் சொல்லக்கடவே னென்றபடி. அதுவாவாசோகோசரமென்றுகருத்து. வெள்ளச்சுகம் - வெள்ளமான ஸுகங்களை யுடையவனை, நிரவதிகாநந்த ஸஹிதனை வென்றபடி. அவன் - அந்த பரமபுருஷோத்தமன், வீற்றிருந்த - வீறுதோன்றும்படி இருந்த, வீறு - உத்கர்ஷம், ஸர்வோத்கர்ஷந்தோன்றும்படி எழுந்தருளி யிருந்தவிடமான என்றபடி. இதுதிருப்பேரைக்கு விசேஷணம். வேதவொலியும் - வேதகோஷமும், ஒலி - கோஷம், விழா

மூ — வொலியும்* பிள்ளைக்குழா விளையாட்டொலியுமறாத்திருப்பேரெயிற்சேர்வன்நானே* ॥௨॥
நாணக்கருங்குழற்றோழிமீர்காளன்னையர்காளயற்சேரியீர்காள்* நானித்தனிநெஞ்சங்காக்கமாட்டேனென்

ஆ — உத்ஸவாதியிலிருந்தனைப் ஸர்வரக்ஷகனைப்பெற்றுக்கொண்டிருக்கிற திருப்பேரைக்காணவேணும், நீங்களென்னைக்கொண்டுபோய்விடீர்களாகில நானேயாகிலும்போவனென்று தன்னை நிஷேதிக்கிற தாய்மாரையும் தோழிமாரையுங்குறித்துச்சொல்லுகிறாள். ॥௧॥

(நாணக்கருங்குழல்) அதிஶயித நீலாலகாலங்க்ருத வதநாரவிந்தங்களையுடைய தோழிமாருமன்னையரும் மற்றுமுள்ளவயஸ்யஜநங்களும் நீதனியேபோகை யீட்டல்லவென்றுசொல்ல, அவர்களைக்குறித்து நானென்னுடைய ஸ்வதந்த்ரமானநெஞ்சைக் காக்கமாட்டேன், எனக்குவிதேயமன்று, ஆஶ்ரிதஸம்ரக்ஷணைகரஸனாகத் திருநாட்டிலநின்றும் ஸ்ரீவஸுதேவர்திருமகனாய் வந்தவதரித்தருளி, அக்காலத்தில் பெறாதாருடையவிழவுதீரும்படி தேன்மொய்த்தபூம்பொழில தண்பணைசூழ் தென்திருப்பேரையில் ஸர்வரக்ஷகனையெழுந்

இ — ஸம்ஶ்லேஷத்யாதியால்) சேர்வன்நானேயென்கிறவிடத்தில அவதாரணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீங்களென்னையித்யாதியால்) சேர்வன்நானேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானேயாகிலுமித்யாதியால்) ॥௧॥

நான் திருப்பேரையிலேபோயல்லது நில்லேனென்று சொல்லவந்தவிவள் அத்தைப்பிப்பாட்டிலே என்னெஞ்சவன்பக்கலிலே கிடக்கிறதென்றுசொல்லுகை யஸம்கதமன்றோவென்ன விதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதரிப்பிக்கிறார் (அதிஶயிதேத்யாதியால்) இத்தால் பூர்வார்த்தத்தில் பதங்களுக்கர்த்தமும் ஸூசிதமாயிற்று. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானென்னுடையவித்யாதியால்) மணிவண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதியால்) கண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீவஸுதேவேத்யாதியால்) அக்காலத்திற்பெறாதாருடையவென்றது - அந்த க்ருஷ்ணாவதாரகாலத்திலே அநுபவிக்கப்பெறாதாருடைய என்றபடி. வானப்பிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வரக்ஷகனித்யாதியால்) பாட்டுக்குப் ஸாரதாத்பர்யமருளிச்செய்கிறார்.

ப — வொலியும் - உத்ஸவகோஷமும், விழா - உத்ஸவம், உத்ஸவங்களிலுண்டான ஶங்கவாத்யாதிகோஷமுமென்றபடி. பிள்ளைக்குழா - பாலஸமூஹத்தினுடைய, குழா - ஸமூஹம், விளையாட்டொலியும் - க்ரீடநத்திலுண்டானகோஷமும், க்ரீடநகாலத்திலே பாலர்கள் சொல்லுகிற ஶப்தமான ஜயகோலாஹலமுமென்றபடி. அறா - அறுதலான, விச்சேதியாதவென்றபடி. இதுவெல்லாம் நித்யமாக நடவாநிற்கிறதானவென்றபடி. திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே. நானே - நான்தானே, நீங்கள் கொண்டுபோய் விடீர்களாகில்நான்தானேயாகிலுமென்றபடி. சேர்வன் - போவேன். ॥௧॥

நாணக் கருங்குழல் - ஸலஜ்ஜ ஸ்நிக்தங்களாய நீலங்களான கேஶபாஶங்களையுடையவர்களான, நாணமென்று மயிர்முடிக்கிடும் ஸுகந்தத்ரவ்யத்துக்குப்பேர். நாணக்கருங்குழலென்று ஸம்போதநவாக்யத்தில விஶேஷணம். இப்படிவர்த்திதேஹ ஶோபிதகேஶபாஶங்களானவுங்கள ஸம்ருத்தியில்லையாகில் நாநங்குப்போகவிலையாதிரேயோவென்று கருத்து. இவளோடு ஸம்ஶ்லேஷகாலத்திலே தானேசாற்றிக்கழித்தவையாய் ‘ஸர்வஸ்வமப்ரதாதோ’ என்கிறகணக்கிலே தங்களுக்கவன் ப்ரஸாதித்தருளினவையான பரிச்சதங்களையெல்லாமித்தோழிமார்கள் அவன்பக்கல ப்ரீதியாலே அத்யாவஸித்துக்கொண்டிருக்கையாலேயவர்களுடைய ஸம்ருத்தியேயிவளுக்கு உத்தேஶ்யவேஷாதி ஸாரகமாய்க்கொண்டு பாதகமாயிருக்கைபாலே இப்படிசொல்லுகிறாள். தோழிமீர்காள் - ஸகிகாள், அன்னையர்காள் - தாய்மார்காள், அயல் - அசலாரான, ஸமீபஸ்தஜநவ்யக்திகளான என்றபடி. சேரியீர்கள் - ஊரிலிருக்கிறஸ்த்ரீகாள், சேரி - ஊர், சேரியிலிருக்குமவர்கள். சேரியார், சேரியீர்களென்று ஸம்போதநம். அந்தரங்கதமைகளான தோழிமாரோடு அந்தரங்கைகளான தாய்மாரோடு அநந்தரங்கரல்லாரானவூராரோடு வாசியற இவளுடைய பாவத்தையெல்லாரு மறியும்படியாய்த்திவளுடைய வாத்ஸல்யாதிஶயம். நான் - அவன்பேர் சொன்னால் நையும் ப்ரக்ருதியான நான், இத்தனிநெஞ்சம் - இந்த தனிநெஞ்சத்தை, சொல்வழியுங் கேளாதே, ஸ்வதந்த்ரமான விந்த நெஞ்சத்தையென்றபடி. “ஸாநவக்ஷிம்ஸவிஷ்யஸி” என்றுகொண்டு ஒருவரையும் பாராதே போகாநின்ற விந்த நெஞ்சத்தையென்கை. காக்கமாட்டேன் - அவன் பக்கல் போகாதே தகையமாட்டேன்

மூ—வசமன்றிதிராப்பகற்போய்* தேன்மொய்த்தபூம்பொழிற்றண்பணைசூழ்தென்திருப்பேரையில்வீற்றிருந்த* வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன்செங்கனிவாயின்றிறத்ததுவே* ॥௨॥

செங்கனிவாயின்றிறத்ததாயுஞ்செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயுஞ்* சங்கொடுசக்கரங்கண்டுகந்துந்தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்துஞ்* திங்களுநாளும்விழாவறாததென்திருப்பேரையில்வீற்றிருந்த* நங்கள்பிரானுக்கென்னெஞ்சந்தோழிநாணுநிறையுமிழந்ததுவே* ॥௩॥

---

ஆ—தருளியிருந்தவவனுடைய ஸம்ஶ்லேஷத்தாலே புதுக்கணித்த திருப்பவளத்திலே என்னெஞ்சிராப்பகல் போய்ப்படிந்துகிடக்கும், இனிநானெங்ஙனேபோகாநிற்கும்படியென்கிறாள். ॥௨॥

(செங்கனிவாயின்) உன்னுடையலஜ்ஜைக்கும நிறைவுக்கும்போருமோ தனியேபோகையென்று தோழிசொல்ல திருப்பவளத்தினழகிலே போய்ப்படிந்தும் திருப்பவளத்திலொளிசொழுந்துவிட்டு மேனோக்கிவளர்ந்ததோவென்னும்படி நீண்டிருந்த திருவபிஷேகத்திலழகிலேதாழ்ந்தும், திருவாழியுந் திருச்சங்குமேந்தின வழகைக்கண்டுகந்தும், மற்றோரழகுக்குரித்தல்லாதபடி தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும், என்னுடையநெஞ்

---

இ—(இனிநானித்யாதியால்) ॥௨॥

✳ மூன்றாம்பாட்டு ✳

மநஸ்ஸவன்பக்கலிலே ப்ரவணமாயிருக்கிறதென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன அர்த்தத்தையே சொல்லுகிறதாகையாலிப்பாட்டு புநருக்தியன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (உன்னுடையவித்யாதியால்) லஜ்ஜாதிகள் நிஶ்ஶேஷமாய்ப்போயிற்றென்கையிலே பாட்டுக்குத் தாத்பர்யமாகையால் புநருக்தியில்லையென்றதாய்த்து. நிறைவு - அடக்கம், அதாவது:— நெஞ்சிலேயோடுகிறது ஒருவர்க்குந்தெரியாதபடியிருக்கை. செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருப்பவளத்திலொளியித்யாதியால்) தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்துமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்

---

ப—என்வசமன்று- எனக்கு விதேயமன்று, இது, மநஸ்ஸானது, இராப்பகல்- ராத்ரிந்திவம், சிலபோது ஸம்ஶ்லேஷமும்சிலபோதுஸம்ஸாரயாத்ரையுமாயிருந்ததாகிலிறே ஹிதஞ்சொல்லிமீட்கலாவதென்றுகருத்து. போய்- விட்டுப்போய், இதுக்கு திறத்ததுவென்கிறதோடே அந்வயம்., தேன் - வண்டுகளானவை, தேனென்றுவண்டுக்குப் பேர். மொய்த்த - நிபிடமாகஸேவித்துக்கொண்டிருக்கிற, பூம்பொழில் - புஷ்போத்யாநங்களாலும். தண்- ஶீதளங்களான, பணை-நீர்நிலங்களாலும், பணை - நீர்நிலம், சூழ்- பரிவ்ருதமான, தென்- தக்ஷிணதேஶீயமான திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே, வீற்று - வீறுபெற்று, வீறு - உத்கர்ஷம், ஸர்வேஶ்வரத்வ வைபவமெல்லாமதோற்றும்படிஎன்கை. இருந்த - எழுந்தருளியிருந்தவனான, வானப்பிரான் - பரமவ்யோமத்திலிருக்கு முபகாரகனான, வானம் - பரமவ்யோமம், பரமபதத்திலே தானிருக்கிறபடியை யெல்லாம் நமக்காகவிங்கே யிருந்துகாட்டுகிற வுபகாரகனானவென்றபடி. மணிவண்ணன் - நீலரத்நவர்ணனான, மணி போலே முடிந்தாளலாம்படி ஸுலபனான என்றபடி. கண்ணன் - க்ருஷ்ணனுடைய செங்கனிவாயின்றிறத்தது- சிவந்தகனிபோலேயிருக்கிறவதரத்தின் விஷயத்திலேயிருக்கிறது. கனி - பழம், இங்கே பிம்பபலமும் விவக்ஷிதம். திறம் - விஷயம், திறத்திலிருக்குமது திறத்தது, ததேகப்ரவணமாயிருக்கிறதென்றபடி. ஆதலால்நானெங்குப்போய்சேராநிற்கமாட்டேனென்றுகருத்து. ।௨॥

தோழி - வயஸ்யே ஸகியே, என்னெஞ்சம் - என்னுடைய மநஸ்ஸானது, செங்கனிவாயின்றிறத்ததாயும் - சிவந்தகனிபோலேயிருக்கிற அதரவிஷயத்திலே அதிப்ரவணமாயும், செஞ்சுடர் - ஸூர்யகிரணம்போலேயான, நீண்முடி - உத்துங்கமான கிரீடத்திலே, தாழ்ந்ததாயும், ப்ரவணமானதாயும், சங்கொடு - ஶங்கத்தோடு, சக்கரம் - சக்ரத்தையும், கண்டுகந்தும் - ஸாக்ஷாத்கரித்து ஆநந்தித்தும், தாமரைக்கண்களுக்கு — தாமரஸஸத்ருஶங்களான நேத்ரங்களுக்கு, அற்றுத்தீர்ந்தும் - மற்றொரு அவயவங்களுக்கும் ஶேஷமாகாதபடி யவற்றுக்கே ஶேஷமாயுமென்றபடி. இதுக்குநிறையுமிழந்ததுவென்கிறத்தோடே அந்வயம். திங்களும் — மாஸங்களிலும், நாளும் - திநங்களிலும், விழா- உத்ஸவங்கள், மாஸோத்ஸவங்களும் நித்யோத்ஸவங்களுமென்றபடி. அறாத — விச்சேதியாததான, தென்திருப்பேரையில் வீற்றிருந்த- ஶ்ரேஷ்டம், நங்கள் பிரானுக்கு — நம்முடைய வுபகாரகனுக்கு, அவதாரத்தாலே நமக்குஸாம்யமுள்ள வுபகாரகனானவனுக்கு. நாணும் - லஜ்ஜையும், நிறையும் — அடக்

மூ—இழந்தவெம்மாமைத்திறத்துப்போனவென்னெஞ்சினருமங்கேயொழிந்தார்* உழந்தினியாரைக்கொண்டெ ன்னுசாகோவோதக்கடலொலிபோலவெங்கு* மெழுந்தநல்வேதத்தொலிநின்றோங்குதென் திருப்பேரையி ல்வீற்றிருந்த* முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேனன்னையர்காளென்னையென்முனிந்தே* ௪॥

ஆ—சானது திங்களும்நாளும் விழாவறாத தென் திருப்பேரையிலேவீற்றிருந்த நங்கள்பிரானுக்குநாணும்நிறைவு மிழந்தது, இனியெனக்கு நாணும்நிறைவுமுண்டோவென்று தோழியைநோக்கிச்சொல்லுகிருள். ௩॥

(இழந்த) யாதுமோவென்று நிரூபியாதே போகப்பெறலாமோவென் றன்னைமார்தன் னை முனிய இழந்தவெம்மாமைதிறத்துப்போன வென்னெஞ்சினரு மவனுடையவழகைக்கண்டு என்னைமறந்து வாராதேயங்கேயொழிந்தார், இனி இங்கிருந்தென்ன வாஷாஸம்வாயிப்பது, ஆரோடேயெத்தைநிரூ விப்பது, ஓதங்கிளருகிற கடலினுடைய வொஷம்பொலேஇருந்த ஸமஸமான வேதவொஷத்தாலே ஸ ஸூஸமான தென் திருப்பேரையிலே வீற்றிருந்தருளினவிவனுடைய நண்ணுவசுரர் நலிவெய்துநல்ல வமரர்பொலி

இ—செய்கிறார் (மற்றோராமுக்கித்யாதியால்) உரித்தல்லாதபடியென்றது - ஸேஷமாகாதபடியென்கை, உரித்து- ஸேஷஸூதம். ௩॥

✱ நாலாம்பாட்டு. ✱

திருப்பேரைக்கு நான்தானேபோவேனென்றபோதே தான்வன்பக்க லத்யாவஸெகயென்னுமிடம் ஸூ ஷ்டமாயிருக்க விப்பாட்டிலுமவ்வஸத்தைச்சொல்லுகை வாமருகியன்றோவென்ன விதுக்குத்தாதுபஞ் சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (யாதுமோவித்யாதியால்) அங்கேயொழிந்தாரென்கிறதற்குத் தாதுய ஞமருளிச்செய்கிறார் (அவனுடையவழகையித்யாதியால்) உழந்தினியென்கிறதற்குத் தாதுபஞமருளிச்செய் கிறார் (இனியித்யாதியால்) ஆரைக்கொண்டென்னுசாகோஎன்கிறதற்குத் தாதுபஞமருளிச்செய்கிறார் (ஆ ரோடேயித்யாதியால்) நல்வேதஎன்கிறத்தையுரைக்கிறார் (ஸமஸமித்யாதியால்) ஓங்குஎன்கிறத்தையுரைக்கி றார் (ஸமூஸமானவென்று) முழங்குஎன்கிறதற்குத் தாதுபஞமருளிச்செய்கிறார் (நண்ணுவசுரரித்யாதியால்) ஸஷாஸம், நண்ணு- தன்னைபாஸ்ரயியாதவர்களான, அசுரர் - ஸவாமர்களானவர்கள், நலிவு- வீமெயை,

ஶ— கத்தையும், இழந்தது - ஸூஷ்டம், வகாரம்வாக்யவாரணம். ௩॥

இழந்த - என்னாலே இழக்கப்பட்டதான, அவனவஹரித்துக்கொண்டுபோனதான வென்றபடி. எம்மா மை - என்னுடைய மாமையுடைய, திறத்து - விஷயத்திலே, மாமை - காமதி, அவனவஹரித்துக்கொண்டு போன வென்னுடைய காமதிக்காக வென்றபடி. போன - அவன்பக்கலிலே போனதான, என்னெஞ்சினரும் - என்னுடையமநஸ்ஸும், அவனுக்காக வன்றிக்கே என் காமதிக்காகப்போன வென்மநஸ்ஸு மென்றபடி. நெஞ்சினருமென்கிறவ்ஹுவநம் அங்கேபோயவரோடேகூடினவாறேமிகவும்பெரியவராயென்னைமறந்துவிட் டாரென்று வ்யஜிப்பிக்கைக்காக. அங்கே - அவ்விடத்திலேதானே, ஒழிந்தார் - நின்றுவிட்டார், அவனழகை க்கண்டவாறே அங்கே நின்றுவிட்டாரென்றபடி. இனி - இப்படி நெஞ்சுபோனபின்பு, உழந்து - க்லேசப்பட் டுவாஷாஸமொன்றுமின்றிக்கேக்லேசப்பட்டுஎன்றபடி. ஆரைக்கொண்டு- ஆரைஸஹாயமாகக்கொண்டு, என் - என்னத்தை, எந்தவஸத்தைஎன்றபடி. உசாகோ - உசாவுவேன், ஸூவம் பண்ணி நிரூபிக்கக்கட வேனென்றபடி. உசாவுகை - ஸூவம்பண்ணுகை, கோ வென்றது கிம்ஸவ்யயமாய்கொண்டு க்ஷேபா ஸம்கம். மநஸ்ஸுபோனபின்பு யாதுமாதும் நிரூபிக்ககூடுமோ வென்றுகருத்து. ஓதக்கடல் - ஓதத்தை யுடைத்தான ஸமுத்திரத்தில் ஓதம் - தரங்கஜ்ஜம், ஒலிபோல - வொஷம்போலே, எங்கும் - ஸவலேவு தேஸத்திலும், எழுந்த - உஜ்ஜிதங்களான, நல் - ஸமஸமான, வேதத்து. வேதங்களினுடைய, ஒலி -வொ ஷமானது, நின்று - ஸூயியாய்க்கொண்டு, ஓங்கு - ஓங்காநின்ற, ஸமூஸமாகாநின்றவென்றபடி. தென்திருப்பே ரையில்வீற்றிருந்த - ஸூஷ்டம், முழங்கு - ஸவாரஸமான, அந்த வேதவொஷ ஸூதிஸுநியாலே ஸவா ஸமாக நின்றவென்றபடி. சங்கக்கையன் - ஸங்கத்தைக்கையிலே யுடையவனான வெம்பெருமானுடைய, மாயத்து - மாயையிலே, ஆஸ்சர்யமான வழகிலே, ஆழ்ந்தேன் - ஸமெக்நயானேன் அன்னையர்காள்?- தாய்மார் காள்? என்னை - இப்படியிருக்கிற வென்னை, முனிந்து - கோபித்து, என்?- என்னவுபயோஜநமுண்டு, நீங்கள் தாய்மாரான ஸாதுத்தாலே கோபிக்கப்போமோ வென்றுகருத்து. ௪॥

மூ—முனிந்துசகடமுதைத்துமாயப்பேய்முலையுண்டுமருதிடைபோய்க்* கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்தகண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன்* முனிந்தினியென்செய்தீரன்னைமீர்காண்முன்னியவன்வந்துவீற்றிருந்த* கனிந்தபொழிற்றிருப்பேரையிற்கேகாலம்பெறவென்னைக்காட்டுமினே* ॥ரு॥

ஆ— வெய்தும்படி முழங்குகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தையேந்தினவழகு வெள்ளத்திலேபுக்கழுந்தினேன், இனியென்னை முனிந்து ப்ரயோஜநமென்னென்று தன்னுடைய வன்னைமாரைநோக்கிச்சொல்லுகிறாள். ॥ச॥

(முனிந்து) உன்னுடையஸ்த்ரீத்வத்துக்குப் போருமோவென்றவர்கள் பின்னையுந்தன்னைமுனிய, ஸந்நாயிதையாய், ரோஷத்தாலே ஶகடத்தைப்பாய்ந்த திவ்யசேஷ்டிதத்துக்கும் வஞ்சனையால்வந்த பேய்ச்சிமாயும் படி முலையுண்டதிவ்யசேஷ்டிதத்துக்கும், கனிந்தவிளவுக்குக் கன்றெறிகைக்காக விளங்கனியைக்குறித்துப்பார்த்தருளின பார்வைக்கு மென்பெண்மைதோற்றேன், நீங்களினியென்னைமுனிந்துசெய்வதென்? என்னுடைய வரவுபார்த்து முன்னமேபோயவன் வீற்றிருந்த நிரவதிகஸௌரப்யமான சோலையையுடைத்தான தென்திருப்பேரையிலே கொண்டுபோயவன்பக்கலிலே யென்னை யீண்டக்காட்டிக்கொடுங்கோளென்கிறாள். ॥ரு॥

இ— எய்து - அடைந்து, நல்ல - நல்லவர்களான, தன்னையாஶ்ரயித்தவர்களானவென்றபடி. அமரர் - தேவர்களானவர்கள், பொலிவு - வ்ருத்தியை. எய்தும்படி - அடையும்படி, மாயத்தாழ்ந்தேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அழகித்யாதியால்) ॥ச॥

✳ஐந்தாம்பாட்டு.✳

அவன்பக்கல்நான த்ருடவ்யவஸாயையானேன், என்னைநீங்கள் முனிந்தென்னப்ரயோஜநமென்று கீழ்ச்சொன்னவர்த்தத்தையே சொல்லுகையாலே யிப்பாட்டு ஸாநாகாங்க்ஷியன்றோவென்ன வவதரிப்பிக்கிறார் (உன்னுடையவித்யாதியால்) முனிந்துசகடமுதைத்துஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்நேஹாதித்யாதியால்); மாயப்பேய்முலையுண்டுஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வஞ்சனையாலித்யாதியால்) முன்னியவன்வீற்றிருந்தஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவரவித்யாதியால்) கனிந்தபொழிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) திருப்பேரையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தென்றிருப்பேரையிலேஇத்யாதியால்) ॥ரு॥

✳ஆறும்பாட்டு.✳

எனக்கவன்பக்கலிலே ஸஹிநிவேஶத்ருடத்வமென்னும் என்னைத்திருப்பேரையிலே கொண்டுபோய்க்காட்டுங்கோளென்னும் கீழ்ச்சொன்னவர்த்தங்களையே சொல்லுகிறதாகையாலேயிப்பாட்டு ஸாநாகாங்க்ஷியன்றோ

ப— முனிந்து - கோபித்து, "ஸ்நேஹாதீவ்ரரோஷ:" என்கிறபடியேஸ்நேஹாதிசயாய் அது விஞ்சித்தவாறே கோபித்தென்றபடி. சகடம் - ஶகடத்தை, உதைத்து - திருவடிகளாலே தாடநம்பண்ணி, மாய - வஞ்சகையான, பேய் - பூதநையினுடைய, முலை - ஸ்தநத்தை, உண்டு - அமுதுசெய்து, மருது - அர்ஜுந வ்ருக்ஷங்களுடைய, இடை - மத்யத்திலே, போய் - அவைகளானவவற்றிலகப்படாதே தப்பிப்போய், கனிந்த - பக்வமான, விளவுக்கு - கபித்தவ்ருக்ஷத்துக்கு, விளவு - கபித்தம், கன்றெறிந்த - வத்ஸத்தை எடுத்தெறிந்தவனான, கபித்தாஸுரனாய்நின்ற வஸுரன்மேலே வத்ஸாஸுரனாய்வந்திருந்த வஸுரனை ஏகப்ரயத்நத்தால் கல்லெறிவாரைப்போலே எறிந்தவிசித்ரசேஷ்டிதனானவென்றபடி. கண்ணபிரானுக்கு - க்ருஷ்ணனான உபகாரகனுக்கு, அந்தக்ருஷ்ணாவதாரத்தில் விசித்ரசரித்ரங்களை யெல்லாம் எனக்கு ப்ரகாஶிப்பித்த உபகாரகனுக் கென்றபடி. என்பெண்மை - என்னுடைய ஸ்த்ரீத்வத்தை, தோற்றேன் - இழந்தேன், இனி - இப்படியானபின்பு, அன்னைமீர் - தாய்மார்காள், முனிந்து - என்னைக்கோபித்து, என்செய்தீர் - என்ன கார்யஞ்செய்யாநிற்கிறீர்கோள், இந்தமுனிவாலொரு ப்ரயோஜநமுமில்லையென்றபடி. முன்னி - பூர்வமே, என்னுடைய வரவு பார்த்துக்கொண்டு எனக்கு முன்னேதானே என்றபடி. அவன்வந்து வீற்றிருந்த - அவன்வந்தெழுந்தருளியிருக்கவிடமான, கனிந்தபொழில் - பரிபக்வமான உத்யாநங்களையுடைத்தான, திருப்பேரையிற்கே - திருப்பேரையென்கிறதிவ்யநகரத்துக்கு, காலம்பெற - ஶீக்ரமாக, என்னை - அவன்வருமளவும் விளம்பம் பொறுக்கமாட்டாதவென்னை, காட்டுமின் - காட்டுங்கோள், திருப்பேரையிலிருக்கிறவனுக் கென்னைக் கொண்டுபோய் ஶீக்ரமாகக் காட்டுங்கோளென்றபடி. ॥ரு॥

மூ—காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்காதல்கடலின்மிகப்பெரிதா* னீலமுகில்வண்ணத்தெம்பெருமானிற் குமுன்னேவந்தென்கைக்குமெய்தான்* ஞாலத்தவன்வந்துவீற்றிருந்தநான்மறையாளரும்வேள்வியோவாக்* கோலச்செந்நெற்கள்கவரிவீசுங்கூடுபுனற்றிருப்பேரையிற்கே* ॥௬॥

ஆ—(காலம்பெற) வேட்டைக்கெழுந்தருளினவத்தனையன்றோ இப்போதே யெழுந்தருளுகிறானிறே, இங்ஙனே பதறவேணுமோ, என்று அவர்கள்சொல்ல, எனக்கவன்திறத்திலுள்ள ஸந்நிவேஶவெள்ளத்துக்கொரு முடிவில்லை, நீலமேகஸந்நிபமான திவ்யரூபத்தினுடைய வழகாலே யென்னைத்தோற்பித்தடிமையாக்கினவனென்கண்ணிலேவந்துதோற்றாநிற்கும், என்கைக்குமெய்தான், ஸர்வேஶ்வரஸாந்நித்யமநேகவேஷ நித்ய நைமித்திகாதி ஸகலகர்மாநுஷ்டாநநிரதராய் வேதவிதக்ரேஸரான திவ்யஜநங்களாலே ஸததஸேவ்யமாய், கதிரமணீய ஸஸ்ய ஸம்ருத்திகளாலே வீஜ்யமாநமாய் ஸாந்த்ரஸலிலஸம்ருத்த தா...

இ—வென்ன ஸங்கதிப்பிக்கிறார் (வேட்டைக்கித்யாதியால்) காதல்கடலின்மிகப்பெரிதாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கித்யாதியால்) த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீலமேகேத்யாதியால்) வேள்வியோவாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஶேத்யாதியால்) நான்மறையாளருமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதவிதித்யாதியால்) கோலச்செந்நெற்கள் கவரிவீசுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கதிரமணீயேத்யாதியால்) கூடுபுனலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாந்த்ரஸலிலேத்யாதியால்) ஞாலத்தவன்வீற்றிருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்

ப—காதல் - ஸந்நிவேஶமானது, எனக்கவனைக் காணவேணுமென்கிற ஸந்நிவேஶமானதென்றபடி, கடலில் - ஸமுத்ரத்தைக்காட்டில், மிகப்பெரிது - மிகவும் பெரியதாய் இருக்கிறது, ஆலென்று வேதஜ்யோதகம் ஆதலால் அவனுகவருமளவும்விளம்பம் பொறுக்கமாட்டேனென்றுகருத்து, ஆனாலும் காதலை யளவுபடுத்திக் கொண்டு நீ நாங்கள்சொல்லுகிற வார்த்தையைக்கேட்கவேண்டாவோவென்ன? சொல்லுகிறாள். நீலமுகில் வண்ணத்து - நீலமேகவர்ணத்தை யுடையவனான, வண்ணத்தை யுடையவன் வண்ணத்தன், வண்ணத் தெம்பெருமானென்று ஸமாஸம். எம்பெருமான் - அவ்வழகாலே என்னை யடிமை யாக்கிக்கொண்டவன், முன்னே வந்து - என்கண் முன்னேவந்து- நிற்கும் - நில்லாநிற்கிறான், கண்ணுக்குத் தோற்றுமாப்போலே தோற்றாநிற்கிறானென்றபடி. இப்படியவன்வந்து முன்னே நின்றிலனாகில் நானுங்கள் வார்த்தையைக்கேட்டு மீளேனோ அவனிப்படி வந்து முன்னேநிற்க வென்னால் மீளப்போமோ வென்றுகருத்து. இப்படியவன்வந்து முன்னே நின்றானாகில் உன்னஸ்தங் தலைக்கட்டித்தே யென்ன? சொல்லுகிறாள். என்கைக்கும்- என்னுடைய கைகளுக்கும், எய்தான் - எட்டான், வார்த்தைசொல்லுதல் அணைத்தல்செய்யாமை மாத்ரமன்று. கைக்குங் கூடக்கிட்டுகிறானில்லை யென்றபடி. ஆனால் - நீ செய்யநினைக்கிறதென்னென்னில் சொல்லுகிறாள்மேல், ஞாலத்து - ப்ருதிவியிலே, அவன் - அந்தஸர்வேஶ்வரன், வந்து - தன்னழகோடே வந்து, வீற்று - வீறுபெற்று, தன்னுடைய ஸர்வேஶ்வரத்வ வைபவம் ப்ரகாஶிக்கும் படியென்கை. இருந்த - எழுந்தருளியிருந்த ஸ்தலமான, இது திருப்பேரைக்கு விஶேஷணம். நான்மறையாளரும் - வதாவேத ஶாலிகளான திவ்யப்ராஹ்மணர்களும், மறை - வேதம். மறையுடையவர்கள் மறையாளர், மறையாளருமென்கிற வசநத்தின்மே லிருக்கிற உகாரம் கவரி வீசு மென்கிறத்தோடே ஸம்பந்தம். ஸர்வஜ்ஞரான ப்ராஹ்மணர்களும் அஜ்ஞங்களான செந்நெற்களும் ஒக்க கைங்கர்யம்பண்ணும்படி யிருக்கிற என்று ஸமுதாயத்துக்குத் தாத்பர்யம். வேள்வி - யாகங்களிலே, நித்யநைமித்திக ரூபங்களான ஸமாராதநங்களிலே என்றபடி. ஓவா - ஓயாதவிடமான, ஸர்வதா நித்யநைமித்திக ஸமாராதநங்களை யநுஷ்டியாநிற்கிறவிடமானவென்றபடி. இதுவுந்திருப்பேரைக்குவிஶேஷணம். கோல - ரமணீயங்களான, செந்நெற்கள் - ஸஸ்யாக்ரஶேஷியிலேசிவந்திருக்கிறநெல்லுகளானவை, கவரிவீசும் - சாமரம் வீசாநிற்கிற, சாமரவிமர்ஶங்களானகதிர்கள் ஸமாகம்பித ஶிரஸ்களாய்க்கொண்டு அசைகிறபோது சாமரம் வீசுகிறாப்போலே யிருக்கிறதென்றுகருத்து. நான்மறையாளரும் வேள்வியிலே ஓயாதவர்களாய் செந்நெற்களும் கவரிவீசுகிறனவா யிருக்கிறஸ்தலமான என்று பாடாந்தரம். கூடுபுனல் கூடினஜலங்களை யுடைத்தான, சேர்ந்தஜலங்களை யுடைத்தானவென்றபடி. அந்தஸமாராதநங்களுக்கும்செந்நெற்களுக்குமநுரூபமானஜலஸம்ருத்தியையுடைத்தான வென்கை. திருப்பேரையிற்கே - திருப்

மூ—பேரையிற்சூழ்கடற்றென்னிலங்கைசெற்றபிரான்வந்துவீற்றிருந்த* பேரையிற்கேபுக்கென்னெஞ்சநாடிப்
பேர்த்துவரவெங்குங்காணமாட்டேன்* ஆரையினியிங்குடையந்தோழியென்னெஞ்சங்கூவவல்லாருமில்லை*
யாரையினிக்கொண்டென்சாதிக்கின்றதென்னெஞ்சங்கண்டதுவேகண்டேனே* ॥௭॥

ஆ—வண்ணலோரிக்ஷ வாஸ்தவ்யமாயிருந்த திருப்பேரையிலே யெனக்காகவெழுந்தருளியிருந்த பெரியபெருமாள் பக்கலிலே காலம்பெற வென்னைக்காட்டுமின்களென்று தன்னுடைய வன்னைமாரைநோக்கிச்சொல்லுகிறாள். ॥௬॥

(பேரையில்) உனக்கவன்பக்கலுள்ள ஸந்நிதானம் நிரவதிகமாயிருந்ததாகிலும், அவனெழுந்தருளுமளவு மிங்கேயிருக்குமத்தனை, அங்குப்போகை யுக்தமன்றென்று தோழிசொல்ல, ஸமுத்ரஸந்நிதப்ராகாரஜயிவிஶிஷ்டமான லங்கையிலே ராவணனை ஸபரிஜநபாந்தவமாகக் கொன்றருளின விஜயலக்ஷ்மீ விஶிஷ்டனாய்க்கொண்டு தென்றிருப்பேரையிலே யெழுந்தருளியிருந்த விருப்பைக்கண்டென்னெஞ்சின்னம் மீண்டுவாராது, எனக்கிங்கொருதுணையுமில்லை. துணையானவென்னெஞ்சை யழைக்கவல்லாருமில்லை, இங்காரைக்கொண்டென்ன ப்ரயோஜனம் ஸாதிப்பது இனியென்னெஞ்சு புக்க தேஶத்திலேபோய்ப்புகு மித்தனையென்று தன்தோழியைக்குறித்துச்சொல்லுகிறாள். ॥௬॥

இ—செய்கிறார் (எனக்காகவித்யாதியால்) ॥௬॥

✳ ஏழாம்பாட்டு. ✳

நெஞ்சங்கேபோயிற்றென்றும் திரும்பிவரக்காணேனென்றும் எனக்கிங்காருமில்லையென்றும் நானுமங்கேபோவேனென்றும் கீழ்ச்சொன்னவர்த்தங்களையே யிப்பாட்டிலுஞ்சொல்லுவானேனென்ன ஸங்கதிப்பிக்கிறார் (உனக்கித்யாதியால்) பேரையிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமுத்ரஸந்நிதேத்யாதியால்) சூழ்கடற்றென்னிலங்கை செற்றபிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜலயீத்யாதியால்) வீற்றிருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஜயேத்யாதியால்) பேர்த்துவரவெங்குங்காணமாட்டேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சின்னமித்யாதியால்) ஆரையினியிங்குடையமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கிங்கித்யாதியால்) என்னெஞ்சங்கூவவல்லாருமில்லையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (துணையானவென்னெஞ்சையித்யாதியால்) என்னெஞ்சங்கண்டதுவேகண்டேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனியென்னெஞ்சித்யாதியால்) ॥௭॥

ப— பேரையென்கிற திவ்யநகரத்திற்கே, என்னை - விரஹவ்யாகுலையான வென்னை, காலம்பெற - ஶீக்ரமாக, காட்டுமின்கள் - காட்டுங்கோள், திருப்பேரையிலேகொண்டுபோய் விடுங்கோளென்றபடி. ॥௬॥

பேர் - பெரியதான, ஸமுத்ரஸந்நிதமானவென்றபடி. எயில் - ப்ராகாரத்தாலே, எயில் - ப்ராகாரம் சூழ் - விஶிஷ்டமான, கடற்றென்னிலங்கை - கடலையுடைத்தான தக்ஷிணதிக்கிலிருக்கிற லங்கையை, ஸமுத்ரத்தை யகழாகவுடைத்தாய் ஸமுத்ரம்போலே பயங்கரமான லங்கையிலிருக்கிற ராவணாதிகளையென்றபடி. செற்ற - ஹிம்ஸித்தவரான, பிரான் - அத்தாலே ஜகத்துக்கெல்லா முபகாரகனானவன், வந்து - தூரத்தில்தேடிக்கொண்டுபோகவேண்டாதபடி தானேகிட்டிவந்து, வீற்று - வீறுபெற்று, விஜயலக்ஷ்மியெல்லாம் ஸாம்ராஜ்யமாய்த்தோன்றும்படி, இருந்த - எழுந்தருளியிருந்தவிடமான, அவன் ப்ரதிகூலநிரஸனம்பண்ணி விடாய்த்துவந்திருக்கிறான் “ஹதக்ரூராவஶிஷ்டஸ்வஜ” என்கிறபடியே பரிஶ்ரமாபஹாரம்பண்ணப்போகவேணுமென்றுகருத்து. பேரையிற்கே - திருப்பேரையிலே, புக்கு - ப்ரவேஶித்து, நாடி - அவனைத்தேடி, என்னெஞ்சம் - என்னுடைய மனஸ்ஸானது, பேர்த்து - மீண்டு, எங்கும் - ஒருவிடத்திலேயும், வரக்காணமாட்டேன் - வரும்படிகாணமாட்டுகிறேனில்லை, இனியது வரமாட்டாதென்றுகருத்து. இனி - இப்படிநெஞ்சுவாராதொழிந்தபின்பு. தோழி - என்னோடு ஸமதுக்கஸுகையான ஸகியே, இங்கு - இவ்வவஸ்தையிலே, ஆரையுடையம் - ஆரைஸஹாயமாகவுடையோம், ஒருவரும்ஸஹாயமில்லையென்றபடி. என்னெஞ்சம் - அங்கேபோனவென்னுடைய மனஸ்ஸை, கூவவல்லாருமில்லை - அழைக்கத்தக்கவருமில்லை, மனஸ்ஸைத்திருப்பவும் ஒருவராலேயும் ஶக்யமன்றென்றபடி. இனி - இப்படிநெஞ்சுவாராதேபோய், நீயுமென்னைப்போலே துக்கிதையாயிருந்தபின்பென்றபடி. ஆரைக்கொண்டு - எந்தஸஹாயத்தைக்கொண்டு, என் - என்னப்ரயோஜனத்தை, சாதிக்கின்றது - ஸாதிக்கிறது, இனியிங்கே நமக்கொருப்ரயோஜனமுமில்லையென்றபடி. என்னெஞ்சங்கண்டதுவே - என்னுடைய மனஸ்ஸுகண்டவிஷயத்தையே, கண்டேனே - நானுங்கண்டுவிட்டேன். ॥௭॥

மூ—கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக்கார்கடல்வண்ணனோடென்றிறத்துக்* கொண்டலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்டவென்காதலுரைக்கிற்றோழி* மண்டிணிஞாலமுமேழ்கடலும்நீள்விசும்புங்கழியப்பெரிதால்* தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்ததென்திருப்பேரையிற்சேர்வன்சென்றே* ॥அ॥

ஆ—(கண்டதுவேகொண்டு) ஜ்ஞாநமான பக்திவிஶேஷம் ஸூக்ஷ்மமாயிருக்கச்செய்தே புறம்புதோற்றுகிற ஶரீரத்தையேகொண்டு ஸகலஸஜாதீயஸம்பாஷணஜநிதமான என்னபக்திவிஶேஷத்தைக் குற்றமாகவுங்கொண்டு லோகமெல்லாங்கூடி ஒருத்திக்கெம்பெருமான்பக்கலுள்ள பக்திவிஶேஷமே, இப்படியபக்திவிஶேஷிச்சை குடிப்பழியன்றோ? என்று என்னை யலர்தூற்ற, அதடியாகக்கொண்டு கிளர்ந்தெழுந்த என்னபக்திவிஶேஷத்தின்பெருமை சொல்லநிலமன்று, சொல்லில் தோழி இவ்வஸம்வேத்யமான அண்டங்களு மளவிறந்ததிருநாடும் நிறையப்பெருகி அதுவுமிடம்போராமை பொங்கிப்பெருகாநின்றது, ஆதலாலவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நானேயாகிலுஞ்சென்று ஸம்ஶ்லேஷிக்கை தவிரேனென்கிறாள். ॥அ॥

(சேர்வன்சென்று) இப்போதேதானே எழுந்தருளுகிறானிறே, இப்படி பதறவேணுமோவென்றும் போகைதானுமிடல்லவென்றுந் தோழிமாருமன்னையருஞ்சொல்ல; நீங்களென்னையொன்றுந் தேற்றவேண்டா,

## ✳எட்டாம்பாட்டு.✳

இ— கண்டதுவேகொண்டெ(ன்)கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜ்ஞாநமானவித்யாதியால்) கார்க்கடல்வண்ணனோடென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலஸஜாதீயேத்யாதியால்) என்திறத்துக்கொண்டென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னபக்திவிஶேஷத்தையித்யாதியால்) உரைக்கிலென்கிற பதத்தாலே ஸூசிதமாகிற அர்த்தத்தை யருளிச்செய்கிறார் (சொல்லநிலமன்றென்று) மண்டிணிஞாலமுமேழ்கடலுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவ்வஸம்வேத்யேத்யாதியால்) நீள்விசும்புமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அளவித்யாதியால்) கழியப்பெரிதுஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுவுமித்யாதியால்) ॥அ॥

## ✳ஒன்பதாம்பாட்டு.✳

நீர்களுரைக்கின்றதென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீங்களித்யாதியால்) இங்கபிப்ராயம்

ப— தோழி - ஸகியே? கண்டதுவேகொண்டு - வெளியிலேகாணப்படுகிற ஶரீரத்தைக்கொண்டு, உள்ளேயிருக்கிற என்னபக்திவிஶேஷத்தை அறியாதேமேல்காணப்படுகிற தனுகாந்திநாதிவிஶிஷ்டஶரீரத்தைக்கொண்டென்றபடி. எல்லாருங்கூடி - ஸ்நேஹிதரான தோழிமாரும் ஹிதபரரானவன்னைமாருமெல்லாரு மேகமாய்க் கூடிக்கொண்டு, கார் - நீலவர்ணமான, கடல் - ஸமுத்ரத்தினுடைய, வண்ணனோடு - வர்ணத்தை யுடையவனோடே, என்திறத்து - என்பக்கலுள்ளத்தை, இங்குதிற ஶப்தம் திறத்திலே யிருக்கிற வஸ்துவைக்காட்டுகிறது யென்பக்கலுள்ள பக்திவிஶேஷத்தை யென்றபடி. அவனோடெனக்குண்டான ஸாத்ருஶ்யத்தை யென்றபடி. கொண்டு - க்ரஹித்து, அத்தையொரு குற்றமாக க்ரஹித்தென்று தாத்பர்யம். அலர்தூற்றிற்றதுமுதலா - பழிதூற்றினபதுவேமுதலாக, அலர் - பழி, நீங்கள் திரளாக அபவாதஞ்சொன்னதுவே உத்தம்ஸகமாகவென்றபடி, கொண்ட - இடங்கொண்டதான, ஸத்ருஶப்ரவ்ருத்தமானதானஎன்றபடி. நீங்கள் பேசாதிருந்திகோளாகில் என்னுடைய பக்திவிஶேஷமளவுபடாதோ வென்றுகருத்து. என்காதல் - என்னுடைய பக்திவிஶேஷத்தை, உரைக்கில் - சொல்லப்புக்கால்' மண் - ம்ருத்திகைகளாலே, திணி - திணிந்திருந்ததான, நிபிடப்ரதேஶமானஎன்றபடி. ஞாலமும் - பூலோகமும் - ஏழ்கடலும் - ஸப்தஸமுத்ரங்களும், நீள் - அதிவிஸ்தாரமான' விசும்பும - ஆகாஶமும், பரமவ்யோமமுமென்றபடி. கழிய - அதிக்ராந்தமாம்படி, இவைஎல்லாம் அதிக்ஷேபமாம்படி இவையித்தனையும்விஞ்சிஎன்றபடி, பெரிது - பெரியதாயிருக்கிறது, ஆல் - விஷாதத்யோதகம். தெண் - தெளிந்ததையுடையான, திரை - தரங்கங்களாலே, ஶுத்தஜலத்துடைய தரங்கங்களாலே என்றபடி. சூழ்ந்து - சூழப்பட்டு, அவன் வீற்றிருந்த - அவனெழுந்தருளியிருந்த விடமான, "தஸ்யாவதநஷம்ஶ்லேஷாத் நாவஶிஷ்ஸங்கரமயிஷ்டா ! விஸ்ரத்யஸமிநுக்கிளா தவாம்கேஸரிவாவிஶம்" என்கிறபடியே ஸந்நிஹிதமான தேஶத்திலேபோய்ப் புகக்கடவேனென்றபடி. தென்திருப்பேரையில் - தக்ஷிணதேஶஸ்திதமான திருப்பேரையிலே. சென்று சேர்வன் - போய்ச்சேருவேன். ॥அ॥

மூ— சேர்வன்சென்றென்னுடைத்தோழிமீர்காளன்னையர்காளென்னைத்தேற்றவேண்டா* நீர்களுரைக்கின்றதென்னிதற்கென்னெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லை* கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்டகண்ணபிரான்வந்துவீற்றிருந்த* ஏர்வளவொண்கழனிப்பழனத்தென்திருப்பேரையின்மாநகரே* ||௰||

ஆ— போகைக்கு நீங்கள்சொல்லும்விரோதமென்? போனால்வரக்கடவ விரோதமுண்டோவென்றிவள்சொல்ல; உன்னுடைய மெய்ப்பாடாதிகளுக்குப் போராது என்று அவர்கள்சொல்ல, அவனுடைய ஸௌந்தர்யஸௌசீல்ய காருண்யாதிகுணங்களாலே என்னுடைய மெய்ப்பாடாதிகளபஹ்ருதங்களாயிற்றன, ஆதலாலதிஸ்ப்ருஹணீயமா யதிரமணீயமாயென்னோடேஸம்ஸ்லேஷிக்கைக்காக அவன்வந்தெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே சேர்வன்சென்றென்கிறாள். ||௰||

(நகரமும்) அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நீ போகில் ஊருநாடும் மற்றுமெல்லாருமுன்னைப் பழிசொல்லாரோவென்று தோழிமார்சொல்ல, அவர்களையிறே நான் தேடுவதென்றிவள்சொல்ல, பழிசொன்னாலுனக்கு லஜ்ஜையாகாதோவென்று பின்னையுந்தோழிமார்சொல்ல,

இ— மருளிச்செய்கிறார் (போனால் இத்யாதியால்) நெஞ்சுநிறைவுமில்லையென்கிற பக்ஷம்மேலே உக்தமாயிருக்கையாலே யிங்கத்தைச்சொல்லுகை வ்யர்த்தமன்றோவென்ன இதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (உன்னுடைய மெய்ப்பாடு இத்யாதியால்) கார்வண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யரூபத்தாலே) கண்ணபிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌசீல்யரூபத்தாலே) கார்க்கடல்ஞாலமுண்டவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (காருண்ய இத்யாதியால்) நெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடைய இத்யாதியால்) ஏர்வளவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிஸ்ப்ருஹணீயமாயென்று) ஒண்ணென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிரமணீயமாயென்று) வந்துவீற்றிருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னோடே இத்யாதியால்) ||௰||

✳ பத்தாம்பாட்டு. ✳

திருப்பேரைப்போவேனென்று சொல்லாநின்றவிவள் நகரமும்நாடுந்தேர்வேனென்றுசொல்லுகை அஸங்கதமன்றோவென்ன இதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (அவனி இத்யாதியால்) நகரமுநாடும் பிறவுந்தேர்வேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களையிறே இத்யாதியால்) என்னெஞ்சங்கவர்ந்தென் றிப்பாட்டிற்சொல்லுகிற இது மேலோடே வ்யர்த்தமன்றோவென்ன இதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (பழிசொன்னால் இத்யாதியால்) மாயன்மகரநெடுங்குழைக்காதனென்

ப— என்னுடைத்தோழிமீர்காள்? - என்னுடைய ஸகிகாள், அன்னையர்காள்? - தாய்மார்காள், என்னை - அங்குப்போகையிலே துணிந்திருக்கிற வென்னை, தேற்றவேண்டா - நீங்களாஸ்வாஸம் பண்ணவேண்டா, இதற்கு - நானங்கேபோகிறவிதுக்கு, என் - என்னத்தை, என்னவிரோதத்தை, நீர்கள் - நீங்கள், உரைக்கின்றது - சொல்லுகிறது இதுக்கொரு விரோதமுண்டோ சொல்லுகைக்கென்று கருத்து. நீ போகையுன்னுடைய மெய்ப்பாடாதிகளுக்கு விருத்தமன்றோவென்னில், நெஞ்சும் - மனஸ்ஸும், நிறைவும் - மெய்ப்பாடாதிகுணவர்க்கமும், எனக்கிங்கில்லை - ஸ்பஷ்டம். எல்லாமவனாலேயபஹ்ருதமாயிற்றென்றுகருத்து. கார்வண்ணன் - நீலவர்ணனான, கார்க்கடல் ஞாலமுண்ட - நீலவர்ணமான ஸமுத்ரத்தை யுடைத்தான ப்ருதிவியை ப்ரளயத்திலே வயிற்றிலே வைத்துரக்ஷித்தவனான, கண்ணபிரான் - க்ருஷ்ணனாயவதரித்துஉபகாரகனானவன், என்னுடையநெஞ்சையும் நிறைவையு மபஹரிக்கைக்கீடான ஸௌந்தர்யகாருண்ய ஸௌசீல்யாதிகுணங்களையுடையவனானவனென்று பாவம். வந்து - என்னோடே ஸம்ஸ்லேஷிக்கைக்காக முன்னமேவந்து, வீற்றிருந்த - ஸவைபவனாதனைக்கொண்டு வஸிக்கிற விடமான, ஏர்வள - ஏர்களுடைய ஸம்ருத்தியை யுடையவையான, ஏர் - க்ருஷியிலே நியுக்தமான வ்ருஷபஸங்கம், வளம் - ஸம்ருத்தி, ஒண் - ரமணீயங்களான, கழனிப்பழன - கழனிகளையும்பழனங்களையு முடைத்தான, கழனி - க்ஷேத்ரம். பழனம் - நீர்நிலம், தென் - தக்ஷிணதேசஸ்தமான. திருப்பேரையில்மாநகர் - திருப்பேரையிலாகிற மஹாநகரத்தை, சென்று - போய் - நீங்கள்சொல்லுகிறவார்த்தைக்கு மீளாதே போயென்றபடி. சேர்வன் - அடைவேன், வழியிலே நில்லாதே சேர்ந்துவிடுவேனென்றபடி. ||௰||

மூ— தண்டுழாய்* கடிசேர்கண்ணிப்பெருமானேயென்றென்றேங்கியழுதக்கால்* படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நாற்றோளும்* துடிசேரிடையுமமைந்ததோர் தூநீர்முகில்போற்றோன்றாயே* ௩॥

தூநீர்முகில்போற்றோன்றாநின்சுடர்கொள்வடிவுங்கனிவாயும்* தேநீர்கமலக்கண்களும்வந்தென்சிந்தைநிறைந்தவா* மாநீர்வெள்ளிமலைதன்மேல்வண்கார்நீலமுகில்போலத்* தூநீர்கடலுள்துயில்வானேயெந்தாய்

ஆ— ஏங்கியழுதக்கால் ஸர்வாவயவஸம்ஶ்லிஷ்டமகரகுண்டலவிஶிஷ்டமாய் ஸர்வாதிஶாயி சதுர்பாஹுதநு ஸௌந்தர்யஶோபிதமாய், விலக்ஷணவிக்ரஹவிஶிஷ்டமாயிருப்பதொரு மேகம்போலே வந்து தோன்றுகிறிலையென்கிறார். ॥௩॥

(தூநீர்) விலக்ஷணவிக்ரஹவிஶிஷ்டமாயிருப்பதொரு மேகம்போலேயிருந்த வுன்னுடைய உஜ்ஜ்வலமானதிருவடியும், கனிவாயும், ஸாரஸ்யநிமித்தமாய், ஶ்ரமாபஹமாய், லாவண்யஸம்பந்நமாய், ரக்ஷக

இ— யருளிச்செய்கிறார் (நிரதிஶயதேஜோமயமாய்) துடிசேரிடையுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தநுமத்யமா-) ஶேஷம்-ஸ்பஷ்டம். ॥௩॥

✳நாலாம்பாட்டு.✳

தேநீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ரஸஸாரதயா) இவ்விஶேஷணத்தால் கணத்துக்குஷமித்த வஸ்துக்களையருளிச்செய்கிறார் (ஶ்ரீமத்தயா) ஹர்ஷத்தையிற்போலே வந்தென்கிற

ஶ—பரிமளமான, ஸுகந்தத்தான வென்றபடி. கடிசேர் என்கிறத்தை யிங்கேயநுஸந்திப்பது. வர்ணம் சேராநிற்கும், கடி- வர்ணம், நாட்செல்ல நாட்செல்ல வர்ணம் விஞ்சி வாராநின்றுள்ள வென்றபடி. தண்டுழாய்கண்ணி- ஶீதள தாபஹாரகமான, பெருமானே- பெரியோனே, என்றென்று- இப்படியே நிரந்தரமாகச்சொல்லி, ஒருக்கால் சொல்லி யாறியிருக்கிறேனென்று தான்தேறியிருக்கிறாயோ. ஏங்கி- தீவ்ரஶோகவேகத்தாலே ஸந்நியும்பிறப்பிடமாட்டாதே ஸங்குசிதகண்டனாய், அழுதக்கால்- நானழுதால், இதுக்குத் தோன்றாயென்கிறத்தோடே அந்வயம். படிசேர்- படியாய்ச்சேர்ந்திருக்கிற, படி- ஸ்வபாவம் ஸர்வாவயவங்களுக்கு மிகவுமநுரூபங்களாயிருக்கிற வென்றபடி. மகரக்குழைகளும்- மகரகுண்டலங்களும், பவளவாயும்- ப்ரவாளாதரமும், நால்தோளும்- சதுர்பாஹுக்களும், துடிசேர்- துடிக்கு ஸத்ருஶமான, துடி- டக்காவாத்யவிஶேஷம், தநுமத்யமான வென்றபடி. இடையும்- மத்யமும், அமைந்தது- சமைந்ததான, இவையித்தனையுமுடைத்தாம்படி ஸம்ஸ்லிஷ்டமானதென்றபடி. தூய்நீர்- நிர்மலஜலத்தையுடைத்தான, விலக்ஷண விக்ரஹமாகையால் ஸ்வச்சநீலஶீதளமான வென்றபடி. ஓர்- லோகவிலக்ஷணமான, அத்விதீயமான வென்றபடி. முகில்போல்- மேகம்போலே, தோன்றாய்- தோன்றுகிறாயில்லை, உபாயஜ்ஞனான வுனக்கு இது உசிதமோ பிரானேயென்றபடி. நான்காணும்படி வந்துதோன்ற வேணுமென்று கருத்து. ॥௩॥

மாநீர்- மஹாஜலத்தில், விஸ்தாரமான ஒரு ஜலாஶயத்தில் கிடக்கிற வென்றபடி. வெள்ளிமலைதன்மேலே - ரஜதகிரியின்மேலே, தன்னென்று ஸ்வார்த்தத்திலேயாகம். வண் - உதாரமான, ரமணீயமான வென்றபடி. கார்நீலமுகில்போல - வர்ஷாகாலத்து நீலமேகம்போல, கார் - வர்ஷாகாலம், தூநீர் - ஶுப்ரஜலமான, வெளுத்தஜலத்தையுடைத்தானவென்றபடி. கடலுள் - க்ஷீரார்ணவத்திலே, துயில்வானே - கண்வளர்ந்திருக்கிறவனே, ரஜதகிரிஸ்த்ருஶதாஸாத்ருஶ்யாஸ, உந்நதவிஶாலஶீதள ஶேஷஶயநத்தின் மேலே கண்வளர்ந்தருளுகிறவனானவென்றபடி. கடலுள்துயில் என்கிறவிடத்தில் ளகாரலோபம் தகாரேடகாரஆதேஶம் உபயமொரேகாதேஶ:. எந்தாய் - ஸ்வஸ்வாமிந், தூநீர்முகில்போல் - விலக்ஷணவிக்ரஹமான மேகம்போலே, கண்டபோதே விடாய்கெடும்படியான வர்ஷாகாலமேகம்போலே என்றபடி. தோன்றும் - ப்ரகாஶிக்கும்ஸ்வபாவமான, நின் - த்வதஸாதாரணமான, சுடர்கொள் - சுடரைக்கொண்டிருக்கிற, சுடர் - ப்ரபை, உஜ்ஜ்வலமானவென்றபடி. வடிவும் - திருமேனியும், கனிவாயும் - பிம்போஷ்டமும், கனி - பழம், இங்கு பிம்பபலபரம். தேநீர் - தேனாகிறநீரையுடைத்தான, ரஸாத்ரவிஶிஷ்டமானவென்றபடி. தேன்நீரென்றவிடத்திலே நகாரலோபம் வர்ணவிகாரஸந்தி:. கமலக்கண்களும் - கமலஸத்ருஶங்களான நேத்ரங்களும், வந்து - என்கண்ணுக்குத்தெரியாதபடிவந்து, என்சிந்தைநிறைந்தவா - என்

மூ— சொல்லமாட்டேனே* ॥௪॥
சொல்லமாட்டேனடியேனுன்றுளங்குசோதித்திருபாதம்* எல்லையில்சீரிளநாயிறிரண்டுபோலென்னுள்ள வா* வல்லலென்னுமிருள்சேர்தற்குபாயமென்னேயாழிசூழ்* மல்லைஞாலமுழுதுண்டமாநீர்கொண்டல்வண்ணனே* ॥ரு॥

---

ஆ—விகஸிதமான பங்கஜம்போலேயிருந்த திருக்கண்களும், நயநஹோரவமன்றியே வந்தென்சிந்தைநிறைந்து வ்யஸநகரமாகிறபடி சொல்லவல்லனல்லேனென்கிறார். ॥௪॥

(சொல்லமாட்டேன்) ஸ்ரீஉபகாரவஸ்துஸ்வரூபவர்ணமான மேகத்தின்நிறம்போலேயிருந்த திருநிறத்தையுடையவனே உன்னுடைய நிரதிஶயதீப்திப்ரகாஶமான திருவடிகள் நிரதிஶயதேஜோரூபமாய் நிரவதிகஸௌந்தர்யயுக்தமாயிருப்பதிளநாயிறிரண்டுபோலே என்னுள்ளே விளங்குகிறபடி மறக்கவும்முடிகிறதில்லையென்கிறார். ॥ரு॥

(கொண்டல்வண்ணா) ஸௌந்தர்யாதிகளையுடையவனே, ஸமஸ்தஜீவநாயகமான திவ்யசேஷ்டிதங்களையுடையவனே.

---

இ—சிந்தைநிறைந்தவாவென்று ஸ்வாநுபூதியைப்பேசுகை யிங்கே ஸங்கதமன்றோவென்ன, இதுக்கு ஸ்ரீகாரணாநுஸந்தானமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நயநத்ருஷ்டிபடியென்னுமளவாலே) இக்கால் ஸர்வஸ்வரூபமாக ஆநந்தாநுபவம்நடவாநிற்க விஸ்மரிப்பவனேனென்ன அதுவேயெனக்குமிகவும் பாதகமாகிறதென்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. ॥௪॥

✳ ஐந்தாம்பாட்டு. ✳

ஆழிசூழித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீஉபயத்யாதியால்) துளங்குசோதியென்கிறத்தையருளிச்செய்கிறார் (நிரதிஶயேத்யாதியால்) எல்லையில்சீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிஶயதேஜோரூபமித்யாதியால்) அல்லலித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மறக்கவித்யாதியால்) இத்தாலுன்னழகு என்னெஞ்சிலேநின்று என்னைநலிகிறதென்று கீழ்ப்பாட்டிலேயருளிச்செய்தவ திப்பாட்டிலே அதுமறக்கவும்முடிகிறதில்லை என்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. ॥ரு॥

✳ ஆறாம்பாட்டு. ✳

குடக்கூத்தாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமஶ்லேஷத்யாதியால்) ஆளென்கிறதற்குத்

---

ப— ஶரீரஸ்தலேநிறைந்தபடியை, சொல்லமாட்டேன் - இந்தப்படியென்றுசொல்ல ஶக்தனாகிறிலேன். ॥௪॥

ஆழிசூழ்- ஸமுத்ரபரிவ்ருதமான. ஆழி- ஸமுத்ரம், மல்லை ஞாலம்- மஹாவ்யாப்தியை, மல்லை மஹத், முழுது- க்ருத்ஸ்நத்தையும், உண்ட- கபளீகரித்ததன, ப்ரளயகாலத்திலே, வ்யாபித்ததான வென்றபடி. மாநீர்- மஹாஜலத்தையுடைத்தான, முழுதுண்ட மாநீரென்று பஹுவ்ரீஹி. ப்ரளயகால ப்ரவ்ருத்தஜலத்தைப்போல ஶ்யாமவர்ணமான வென்றபடி. கொண்டல்வண்ணனே- ஸஜலஜலதத்தினுடைய வர்ணம்போலேயிருக்கிற வர்ணத்தையுடையவனே, அடியேன்- உன்னழகுக்குத் தோற்றடிமையாயிருக்கிற நான், சொல்லமாட்டேன்- ஸர்வமியமென்றுசொல்ல ஶக்தனாகிறிலேன், இப்படிசொல்ல முடியாததேதென்னில்; உன்- உன்னுடைய, துளங்குசோதி- விளங்காநிற்கும ஜ்யோதிஸ்ஸையுடையவனான, துளங்குதல்- விளங்குதல், திருப்பாதம்- திருவடிகள், எல்லையில்- நிரவதிகமான, சீர்- அழகையுடையவையான, இரண்டு இளநாயிறு போலென்று மாறியநயிப்பது- இரண்டு பாலஸூர்யர்கள்போலே, என்னுள்ளவா- என்னுள்ளத்திராநின்றன, திருவடிகளை பாலஸூர்யர்களாகச்சொன்னது ஆரணஸாஸ்ரதையாலும் கண்ணாலே பருகலாயிருக்கையாலும் பாதிக்கத்துடங்கின வித்தனையென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காகவும். அல்லலென்னும்- ஸம்ஸாரரூபமதாகச் சொல்லப்படுமதான, அல்லல்- ஸம்ஸாரம். இருள்- அந்தகாரமானது, அஜ்ஞாநமான தென்றபடி. விஷாணமென்கை. சேர்தற்கு- வந்து கிட்டுகைக்கு. உபாயமென்னே- உபாயமேது, உபாயமொன்றுமில்லையென்றபடி. நாட்டாரநஸம்ஸாரரூபமாகச் சொல்லுகிற அஜ்ஞாநமே இத்தஶையில் எனக்குஉத்தேஶ்யம். ஸம்ஸாரநிரஸநைகஸ்வபாவ ஸ்வரூபமயமானது என் ஹ்ருதயத்திலே விளங்குகையாலே தாத்ருஶாஜ்ஞாநாந்தகாரம் வருகைக்கு ஒரு உபாயமும் காண்கிறிலேன், ஆதலாலதை மறந்துபிழைக்கவும்வழியில்லையென்று கருத்து. ॥ரு॥

மூ— ௯* தக்கவைவர்தமக்காயன்றீரைம்பதின்மர்தாள்சாயப்* புக்கநற்றேர்த்தனிப்பாகாவாராயிதுவோ பொருத்தமே* ||அ||
இதுவோபொருத்தமின்னாழிப்படையாயேறுமிருஞ்சிறைப்புள்* அதுவேகொடியாவுயர்த்தானே

ஆ—நானும் உள்ளங்குழைந்து அலைவன் நான் உன்னைமறந்திருக்கவொட்டுகிறதில்லை இந்த்ரியங்கள், உன் திருவடிகளையே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றிருக்குமவர்க்கு ரக்ஷகனுய், அன்றீரைம்பதின்மர் தாள்சாயப்புக்க நற்றேர்த்தனிப்பாகா? அத்தேரை இங்ஙனே திருத்திக்கொண்டுவாராய், இதுவோ உன்னுடைய ப்ரணயித்வமென்கிறார். ||அ||

இ—ஸத்ருசவஸ்துக்களுன்னை மறக்கவொட்டுகிறதில்லையென்கிறுரென்று ஸம்பந்தமறிவித்தே. தக்கவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன் திருவடிகளையே யித்யாதியால்) ராஜ்யாதிகளிலே ஆஸக்தியுண்டாயிருந்ததாகிலும் பாண்டவர்களுக்கு ஸ்ரீநாரதாதிதைவஸ்வரூப ஸ்ரீகீதாச்ரவணாதிஸம்பந்த ஸம்பத்தியாலே ஸ்வசரணமே ப்ராப்யப்ராபகமென்னக்குறையில்லையிறே! தேர்த்தனிப்பாகாவாராயென்கிற ஸம்போதநத்தாலே அபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (அத்தேரையித்யாதியால்) திருத்திக்கொண்டென்றது—திருப்பிக்கொண்டென்றபடி. ||அ||

✳ஒன்பதாம்பாட்டு.✳

மின்னாழியென்று திருவாழிக்கு விசேஷணமானது சொன்னத்தால் ஸாமித்தயத்தையருளிச்செய்கிறார்

ஈ—னென்றபடி. தக்க- யோக்யமான, ஸ்வசரணமே ப்ராப்யப்ராபகமென்னும் வேச்வாஸிகளானவென்றபடி. ஐவர்தமக்காய் - ஐவர்களுக்கும்ஸ்வம்மாய், தம்மென்று ஸ்வாமித்வப்ராப்தியோக்யர், பாண்டவர்களுக் கிஷ்ட விநியோகார்ஹனென்றபடி. அன்று - பாரதயுத்தம் ப்ரவ்ருத்தமானகாலத்திலே, ஈரைம்பதின்மர் - துர்யோதனாதி, ப்ரதிஸம்பந்தரான துர்யோதனாதிகளென்றபடி. ஈரைம்பது- த்விகுணிதபஞ்சாசத், ஈரைம்பது ஸம்க்யையையுடையவர் ஈரைம்பதின்மர், தாள்சாய - கால்சாயும்படியாக, மிஞ்சுதொழுந்துங்கள்போலே ஹிம்ஸிக்கப்படும்படியென்றபடி. புக்க - ஸத்ருஸேநாமத்யப்ரவிஷ்டமான, நல்தேர் - நல்லதேருக்கு, உன்னைஸாரதியாகவுடைத்தாகையாலே ஸ்லாக்யமான ரதத்துக்கென்றபடி. தனிப்பாகா?- அத்விதீயநிர்வாஹகனே, பாகன் - நிர்வாஹகன், ரதியானஅர்ஜுநன் முதுகின்கீழேயொதுங்கும்படி ப்ரயாணத்தைக் கொண்டு ஸாரதியானவனேயென்றபடி. வாராய் - வருகிறுயில்லை, "ஸேநயோருபயோர்மத்யே ரதம்ஸ்தாபய மேऽச்யுத" என்றுலப்படிசெய்யலாவது அர்ஜுநனுக்கேயோ எனக்காக அந்தத்தேரை யிங்கே நடத்தலாகாதோ, ஆச்ரிதர்ஐவருமாய் தனிப்பாகஸம்பந்தருமானுலோ வுதவலாவது, நான்வனகாகியுமாய் வரிக்கிற செவேலாதிஹங்கள் ஸஹாயார்த்தங்களுமானு லுதவலாகாதோவென்றுகருத்து. இதுவோபொருத்தம் – இங்ஙனேயோவுன்னுடைய ஆச்ரிதஸம்ஸ்லேஷஸ்வபாவம், ஆச்ரிதர்க்காக தூத்யஸாரத்யாதிகளைப்பண்ணினதும், ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்ததும் எல்லாம்பொய்யோ, "நாராயணாயேதி" மென்று கவிபாடினனும் உன்பக்கல் கைக்கூலியாகப்பொய்யைப்பாடின னித்தனையோவென்று கருத்து. வாராய் – எனக்கதெல்லாஞ்செய்யவேணுமோ, ஒருக்கால்முகங்காட்ட வமையுமேயென்றுதிருவுள்ளம். ||அ||

மின்னாழி– மின்போலேயிருக்கிற திருவாழியாகிற, ஸ்வநீலஜீமூதஸங்காசமான திருமேனிக்கு வித்யுத்ஸ்தாநமம்போலேயிருக்கிற திருவாழியாகிறவென்றபடி. படையாய்– ஆயுதமுடையவனே, படை- ஆயுதம், படையுடையவன் படையான், படையாயென்று ஸம்போதநத்தில் ரூபம். ஏறும்- ஏறப்படுமதான, திவ்யவாஹநமான என்றபடி. இரும்சிறை- பெரியசிறகை யுடைத்தான, இரும் என்று பெரியது, சிறை- பக்ஷம், சுகிவிவாஹவக்ஷஸாமியான வென்றபடி. புள் அதுவே- அந்த பக்ஷியையே, பஹுப்ரகார ப்ரவிஸ்ரன பெரியதிருவடியையே என்றபடி கொடியா- த்வஜமாக, உயர்த்தானே- உயரவஹித்தவனே, ஆச்ரிதவிரோதிநாஸநனைப் ஸ்ரீமஜேந்த்ராழ்வானுக்குப்போலே சுகிக்கவொருபோதேவந்தருளி யெனக்கு வடிவழகைக்காட்டியருளவேணுமென்று ஸம்போதநத்வயத்துக்கும் தாத்பர்யம். யதா- ப்ரயோஜ நாஹாராதிகலசின பாண்டவர்களள்வன்றிக்கே தெங்கலயேகாரவிசுரான திருவாழியாழ்வான் முதலானுரோடு ஸம்ஸ்லேஷிப்பதும் பொய்யோவென்று கருத்தாகவுமாம். இதுவோபொருத்தம் – இங்ஙனே

ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி:.

(மாயக்கூத்தா.)

ஸ்ருஷ்டியை ஸாங்கிதத்வாத் ஸமஹிமகடநாத் ஸ்தாநவ்ருத்யா சயித்வாத்।
ஜீமூதஸ்யாமளத்வாத் ஸ்ரிதஸுலபதயா பத்மபாண்யாதிமத்த்வாத்
ஸாரூப்யாத்வாத்ஸல்யாத் ஸ்வநிரவதி மஹாவைபவாத் ஸர்வகத்வாத்
ஜீவாபேக்ஷாவ்யபேக்ஷாவதி தநுவநகஷ்டீவ திஷ்டத்யஹாணி ॥௬௬॥

(ஸ்ருஷ்டியை ஸாங்கிதத்வாத்) மாயக்கூத்தாவாமனு - ஸ்ருஷ்டிகளாய் விலக்ஷணமான வேஷங்க ளையுடையனாகையாலும், (ஸமஹிமகடநாத்) சுடர்ச்சோதிமுடிசேர் சென்னியம்மானே - நிரவதிகதே ஜோமயமான திருவபிஷேகத்தைப்புடையனாகையாலும், (ஸ்தாநவ்ருத்யா) முடிசேர்சென்னியம்மான் - அத்திரு வபிஷேகத்தாலே ஸர்வஸ்வாமித்வந்தோற்ற நிற்கையாலும், (சயித்வாத்) தாநீர்கடலுள் துயில்வானே- பரிஸரமான பயோநிதியிலே கண்வளர்ந்தருளுகையாலும், (ஜீமூதஸ்யாமளத்வாத்) மாநீர்க்கொண்டல் வண்ணனே - நீலமேகநிபமான திருநிறத்தையுடையனாகையாலும், (ஸ்ரிதஸுலபதயா) கொண்டல்வண் ணாகுடக்கூத்தா - க்ருஷ்ணனாய் அவதரித்து ஆஸ்ரிதர்க்கு ஸுலபனாயிருக்கையாலும், (பத்மபாண்யாதிமத்த் வாத்) செந்தண்கமலக்கண்கைகாலித்யாதி - செந்தாமரைப்பூத்தாப்போலேயிருக்கிற திருக்கண்மலரையும். திரு க்கைகளையும், திருவடிகளையும், நிரவதிகஸௌந்தர்ய நீலரத்நநிபமான திருமேனியையுமுடையனா கையாலும், (ஸாரூப்யவாத்ஸல்யாத்) தக்கவைவர்தமக்காயித்யாதி - ஆஸ்ரிதனான அர்ஜுநனுக்கு ஸாரத்யத்தைப்பண்ணுகையாலும், (ஸ்வநிரவதி மஹாவைபவாத்) இம்மாஞாலம்பொறைதீர்ப்பான் - வடமதுரையி லேவந்தவதரித்து பூமியினுடையபாரத்தை அபஹரிக்கையாலும், (ஸர்வகத்வாத்) கறந்தபா லுள்நெய்யேபோலிவற்றுளெங்குங்கண்டுகொள் - க்ஷீரத்திலே ஸர்ப்பிஸ்ஸிருக்கிறாப்போலே எல்லாவஸ்துக்களிலும் வ்யாபித்து நிற்கையாலும், எம்பெருமான் ரக்ஷிக்குமிடத்தில் சேதநருடைய அபேக்ஷாவ்யபேக்ஷனாயிருக்கிற னென்று "மாயக்கூத்தா" என்கிறதசகத்திலே மாறன் அருளிச்செய்தாரென்கிறார். ॥௬௬॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எட்டாம்பத்தில் ஐந்தாந்திருவாய்மொழிமுற்றிற்று.

❧ ✳ ❧

# ஆறாந்திருவாய்மொழி.

ஆ—(எல்லியுங்காலையும்) எம்பெருமானென்னுடைய விடாயெல்லாந்தீரும்படி யருள்செய்தருளினன், ஒருவன் செய்தருளினபடியேயன்றென்று நினைத்துக்கிடக்கும்படி யருள்செய்தருளினன், அவ்வருள்தானென்றால்

---

❧ ஆறாந்திருவாய்மொழி. ❧

❧ முதற்பாட்டு. ❧

இ— நல்லவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விடாயெல்லாந்தீரும்படியென்று) ப்ரயோஜநத் துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவனித்யாதியால்) பாட்டில்வாக்யார்த்தமேகவாக்யமாயிருக்க ததாஸ்ரயணம் வாக்யபேதமாய் ப்ரவர்த்தித்தது அருள்நல்லதென்றும் அது யாவதாத்மபாவியமென் று மிவ்வர்த்தத்வயத்திலும் இப்பதத்வயத்துக்குத் தாத்பர்யமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. பாஹ்யஸம் ஸ்லேஷாபேக்ஷையாலே க்ருதஜ்ஞராயிருந்த ஆழ்வார் நல்லவருளென்றும் யாவதாத்மபாவியெ மென்று மித்தனை கொண்டாடுகைக்கு விஷயம் திருக்கடித்தானத்தில் அவதாரஸ்திதிமாத்ரமாக மாட்டாமையால் இவ்வுத்தராயணம் ஸம்மதமன்றேவென்று ஸங்கிக்கிறார் (அவ்வருளித்யாதியால்) எது எ ன்றது ப்ரஸ்நமாத்ரமான ப்ரஸ்நம், திருக்கடித்தானத்தில் அவதாரஸ்திதிமாத்ரம் ஸங்கல்பிதஸ்தாவர விஷ யமாகாதென்று ப்ரஸ்நாபிப்ராயம். இவ்வுத்தராயணம் ஸம்மதமாம்படி இதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

மூ— எல்லியுங்காலையுந்தன்னைநினைந்தெழ* நல்லவருள்கணமக்கேதந்தருள்செய்வா* னல்லியந்தண்ணந்துழாய்முடியப்பனூர்* செல்வர்கள்வாழுந்திருக்கடித்தானமே* ௧

ஆ— முன்னம்திருக்கடித்தானத்திலே வந்துபுகுந்தருளினனென்கிறார். ௧௦
(திருக்கடித்தானமும்) பின்னையுஞ்செய்தருளுகிறான்; திருக்கடித்தானத்தையும் என்னெஞ்சையுமொக்க,

இ—(முன்னமித்யாதியால்) முன்னமென்றதுக்குமேல்பாட்டுக்களி லருளிச்செய்யப்புகுகிற அநந்த ஸவிசேஷங்களுக்கும் மேல்த்திருவாய்மொழியில் அருளிச்செய்யப்புகுகிற ஸம்ச்லேஷத்துக்கும் முன்னமென்றுகருத்து. இப்படி திருக்கடித்தானத்தில் அவன்வந்துநிற்கிறவிது பஹுவியாநந்த ஸவதேவக ஸம்ச்லேஷவிசேஷ ப்ரதாநஸ்தமாயிருக்கிறதாகையாலே இது ஆழ்வார்க்கிப்போதுமிகவும் ஸாவதநவிஷயமாகவற்றுகையாலிவ்வுத்தாரயத்தம் ஸம்மதமென்றதாயிற்று. இத்தாலித்திருவாய்மொழிக்கு ஸங்கதி ஸூசிதையாயிற்று. எங்ஙனேயென்னில்? மாயக்கூத்தனிலாழ்வாருடைய ஆர்த்தத்வநியைக் கேட்டு தத்ஸ்ரூஷயனுயவருடைய ஆர்த்திதீரும்படி ஸம்ச்லேஷித்தருளுகைக்காக வருகையிலே உத்யுக்தனானவெம்பெருமான் இனி நாம் கடுகவந்தவங்காட்டில் ஸௌகுமார்யாதிசயத்தாலே தடுமாறியழியும்படியாய்ப் படுவாராகையாலே ப்ரீதியையுத்பாதிப்பித்துப் பின்பு ஸம்ச்லேஷிக்கவேணுமென்று பார்த்து பதினாலாண்டு பிரிவாலேநொந்த ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாமெழுந்தருளின ப்ரீதி ஸூசகத்தபின்பு திருவயோத்யையிலே புக்கருளுகைக்காகத் திருவடியை முற்படப்போகவிட்டு பெருமாள்தாம் ஸ்ரீபரத்வாஜாச்ரமத்தே விட்டிருந்தருளினப்போலவும், ஸ்ரீவஸுதேவர்திருமகன் தூதுஎழுந்தருளுகிறபோது பாண்டவர்களான ஸ்ரீவிதுராதிகளுக்குத் தானெழுந்தருளின ப்ரீதிஸூசகத்தபின்பு ஹஸ்திநாபுரத்திலே புக்கருளுகைக்காக "குசஸ்தலே நிவஸதி ஸ ச ப்ராதரிஹேஷ்யதி" என்கிறபடியே குசஸ்தலத்திலே விட்டருளியிருந்தாப்போலவும் ஆழ்வாருக்குத் தானெழுந்தருளின ப்ரீதிஸூசகத்தபின்புவந்து ஸம்ச்லேஷிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே வந்துபுகுந்தருளி யிவர்பக்கல் அதிவ்யாமோஹனாயிருக்கிறபடியை யிவரநுஸந்தித்து ப்ரீதராய் இதைப்பேசி யநுபவிக்கிறாரென்று இங்கேஸூசிதமாகிறது. இத்தாலித்திருவாய்மொழிக்கு "ஸ்வதிதாரண ஸஜ்ஜ" மென்கிறஸமனந்தரம் ப்ரீதிவார்த்தமென்றதாயிற்று. ௧

✳ இரண்டாம்பாட்டு. ✳

திருக்கடித்தானத்திலிருப்பை யிப்பாட்டிலுஞ்சொல்லுகை வாநராதிகமன்றேவென்ன விங்கு தசாதிசிதமான அநந்த ஸவிசேஷத்தைச்சொல்லுகையிலே தாத்பர்யமென்றுகாட்டுகிறார் (பின்னையுமித்யாதியால்) (செய்தருளுகிறான்) ஒருஅநந்த ஸவிசேஷத்தைஉதிசேஷ: உமக்கு ப்ரதிவம்யங்கள் அநந்தங்

ப— அல்லியம்- வர்ஷங்களாலே அழகியதான, அல்லி- வர்ஷம், வர்ஷரேணுபூஷிதயா அதிஸுந்தரமானவென்றபடி, தண்- சீதளமான, அம்- ஸுதாவிஸுந்தரமான, துழாய்- திருத்துழாயை, முடி- திருமுடியிலே யுடையவனான, அப்பன்- ஸ்வாமியானவன், கீழ்த்திருவாய்மொழியிலே 'மொய்பூந்தாமத்தண்டுழாய் கடிசேர்கண்ணிப் பெருமானே" என்றுநாரணைசைப் பட்டபடியேவந்து தோற்றின ஸ்வாமியானவனென்றபடி. எல்லியும்- ராத்ரியும், காலையும்- பகலும், ஸர்வகாலமுமென்றபடி. தன்னை- என்பக்கல் நிரதிசயப்ரேம ஸஹிதத்தைப்பண்ணின தன்னை, நினைந்து- இதென்ன வாத்ஸல்யமென்று விஸ்மயாவிஷ்டனுய் ஸ்மரித்துஸ்மரித்து, எழ- எழும்படி, உஜ்ஜீவிக்கும்படியென்கை. நல்ல- நல்லவையான, என்னுடைய விடாயெல்லாந்தீரும்படியான என்றபடி. அருள்கள்- க்ருபைகளை, நமக்கே- மற்றொருவருக்குக் கிடையாதபடி நமக்கே அஸாதாரணமாக, தந்து- ப்ரகாசித்தருளி, க்ருபாகார்யங்களைச் செய்தருளியென்றபடி. அருள்செய்வான்- மேல்இடைவிடாதே க்ருபாகார்யங்களைச் செய்தருளாநிற்கிறான், ஊர்- இப்படி உபகாரியாயிருக்கிறவனெழுந்தருளியிருக்கிற திவ்யநகரம், செல்வர்கள் வாழும் திருக்கடித்தானம்- ஸ்ரீமான்கள் வாழ்கிற திருக்கடித்தானம், "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியே கைங்கர்யஸம்பத்ஸம்ச்லேஷ ஸம்பத்தையுடையவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸமஸ்தநாஸ்தவ வைலக்ஷண்யங்களாலே நித்ய ஸ்ரீமான்களாய் வஸிக்கிற திருக்கடித்தானமென்றபடி. ௧

மூ—திருக்கடித்தானமுமென்னுடைச்சிந்தையு* மொருக்கடுத்துள்ளேயுறையும்பிரான்கண்டீர்* செருக்கெடுத்தன்றுதிகைத்தவரக்கரை* யுருக்கெடவாளிபொழிந்தவொருவனே* ‖௨‖

ஒருவரிருவரோர்மூவரெனநின்* றுருவுகரந்துள்ளுந்தோறுந்தித்திப்பான்* திருவமர்மார்பன்திருக்கடித்தானத்தை* மருவியுறைகின்றமாயப்பிரானே* ‖௩‖

ஆ—தனக்கிருப்பிடமாகக்கொண்டருளினான். அவனாரென்னில்? செருக்கெடுத்தன்றுதிகைத்தவரக்கரை யுருக்கெடவாளிபொழிந்தசுவிதீயன், கண்டீரென்கிறார். ‖௨‖

(ஒருவர்) பின்னையுமொருவரா யிருவராய் மூவராய்த்தோன்றி உருவுதெரியாதபடிவந்து வாளிபொழிந்தவனென்று அவன்சிகலேயே யநுஸந்தித்து அதுக்குமேலே இன்றுதிருக்கடித்தானத்திலு மென்னெஞ்சிலும்

இ—ளாயிருக்க இப்படி யநுஸந்திக்கமாட்டாளென்கிற ஸதிஸங்கையைக் காட்டுகிறார் (அவனாரென்னி லென்று) ஆரென்றுகேஷவாக்ஷேபம். ஒருவனுமாகமாட்டானென்றபடி. ராவணாதிநிரஸநம்பண்ணின ஸாஹஸீரனாகையாலே என்விரோதிகளையும் நிரஸிக்கிறானென்கிறாரென்று நினைத்தருளிச்செய் கிறார் (செருக்கெடுத்திதாதியால்) ‖௨‖

✳ மூன்றாம்பாட்டு ✳

உபாயாக்ரஜவ்ருத்தாந்தமாகையாலே "வந்தேவமதனைவ்யூஹநவாஸநிவாஸிநம்" என்கிறபடியே யாழ்வாரை மேல்போகவொட்டுகிறதில்லையென்று நினைத்தருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) பின்னையுமென்கிறதற்கு அநுஸந்தித்துஎன்கிறதோடந்வயம். திருக்கடித்தானத்தில் திவ்யஸம்ஹநிவாஸமொன்றேயாயிருக்க இருவர்மூவரென்கையும் அதிப்போது அநுஸந்தாநமாயிருக்க உருவுகரந்து என்கையும் ஸம்கதமல்லாமையால் கீழ்ச்சொன்ன வாளிபொழிந்தசெயலிலே இதுக்கந்வயமாகவேணுமென்று நினைத்தருளிச்செய்கிறார் (வந்தித்யாதியால்) சிகலே - வ்யாபாரத்தை, கீழ்ப்பாட்டிற்சொன்னதில்க்காட்டில்

ரா— செருக்கு- மதம், எடுத்து- தலையெடுத்து, உத்கடமாயென்றபடி. பலபலஹாஜபலஸமத்தாலே மதாதிகமாயென்கை. திகைத்த- மோஹித்தவரான, ஸகலவஸ்தித்திருமகளை ஜயிக்கலாமென்று ஸாஹஸித்த மதிகேடரான வென்றபடி. அரக்கரை- ராக்ஷஸர்களை, ராவணாதிகளைக்குறித்து என்றபடி. இதுக்குப்பொழிந்தவென்கிறத்தோடே யந்வயம். அன்று - அக்காலத்தில், பிராட்டியைப்பிரிந்ததனாலுண்டான தன்திருவுள்ளத்திலும் நீரிலேநெருப்பெழுந்தாப்போலே சீற்றம்விளையும்படி அவர்கள் ஸாஹஸாயங்களைப்பண்ணின அந்தகாலத்திலே. உருக்கெட — ரூபங்கெடும்படி, "ஷிந்நம்பின்நம்ஸரைர்த்தக்தம்" என்கிறபடியே யவர்கள்ஸரீரங்களழியும்படியென்கை. வாளி - பாணங்களை, பொழிந்த - "ஸரவர்ஷம்வவர்ஷஹ" என்கிறபடியே வர்ஷித்தவனை, ஒருவன்கண்டீர் - ஏகவீரன்கண்டீர், கண்டீரென்றது ஸகலவிரோதிகளையும் நிரஸிக்கும் ஸாமர்த்த்யஸூசகம். திருக்கடித்தானமும் - அந்ததிவ்யநகரத்தையும், என்னுடைச்சிந்தையும் - என்னுடையசித்தத்தையும், ஒருக்க - ஒருபடிப்பட, எடுத்து - க்ரஹித்து, இரண்டையும்ஏகரூபமாக அபிமானித்தென்றபடி. இரண்டிலுமேகரூபமாக ஆஸக்திசெய்தருளியென்கை. உள்ளே - இவற்றுக்குள்ளே, உறையும்பிரான் - வஸிப்பாகிற்கிறமஹோபகாரகன். ‖௨‖

ஒருவர் இருவர் ஓர்மூவரெனநின்று - இராமலக்ஷ்மணர்களோடு யுத்தம்பண்ணியருளுகிறபோது முற்பட ஒருவராய், பின்பு ஸம்ரம்பாதிவேகம் விஞ்சவிஞ்ச இருவர்மூவரென்னும்படிநின்று, அநேகரூபனைத்தோன்றி என்றபடி. உருவுகரந்து- அஸிதீடமான ரூபமமறைந்து, லக்ஷ்யஸித்தி யஸம்யோகத்துக் கவகாஸமில்லாதபடியாய்வேகம்பின்னையு மதிகமானவாறே நிரதிஸயதேஜோரூபமான திவ்யஸம்ஹநநமும் அத்ருஸ்யமாயென்றபடி. வாளிபொழிந்தவனென் றநுஸந்திப்பது. ஸரங்களைவர்ஷித்தவன், திரு — ஸ்ரீயானவள், அமர்- அமர்ந்திருக்கிற, மார்வன் - வக்ஷஸ்ஸையுடையவனைக்கொண்டு, அந்த வீரஸ்ரீயோடே வந்தானென்றபடி. லக்ஷ்மியைத் திருமார்பிலே யுடையவனைக்கொண்டு என்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்தலம், மருவி - ஆஸ்ரயித்து, உறைகின்ற - அங்கே நித்யவாஸம்பண்ணுகின்ற, மாயப்பிரான் - ஆஸ்சர்யசேஷ்டிதனான உபகாரகனாய், உள்ளுந்தோறும் — அநுஸந்திக்குந்தோறும், உள்ளுகை — அநுஸந்திக்கை, தித்திப்பான் - போக்யனாகின்றான். ‖௩‖

மூ—மாயப்பிரானென்வல்வினைமாய்ந்தற* நேசத்தினால்நெஞ்சநாடுகுடிகொண்டான்* தேசத்தமரர்திருக்கடித்தானத்தை* வாசப்பொழில்மன்னுகோயில்கொண்டானே* ॥௪॥

கோயில்கொண்டான்றன்திருக்கடித்தானத்தைக்* கோயில்கொண்டானதனோடுமென்னெஞ்சகம்* கோயில்கொள்தெய்வமெல்லாந்தொழவைகுந்தம்* கோயில்கொண்டகுடக்கூத்தவம்மானே* ॥௫॥

---

ஆ—பிராட்டியோடேகூடவந்து புகுந்தருளினானென்கிறார். ।௩

(மாயப்பிரான்) இவன்திருக்கடித்தானத்தைக்காட்டிலு மென்னெஞ்சிலே வல்வினைகள்தீரும்படி ஸ்நேஹத்தைப்பண்ணிக்கொண்டு குடியாகவிருந்தருளினானென்கிறார். ॥௪॥

(கோயில்கொண்டான்) அங்குமிங்குமாயிருந்தருளுகையன்றியே ஸ்நேஹாதிசயத்தாலே திருக்கடித்தானத்தையுங்கொண்டு என்னெஞ்சினுள்ளே புகுந்தருளினானென்கிறார். ॥௫॥

இ— அதிசயிதாநுஸந்தாநவிசேஷத்திலே யிப்பாட்டுக்குத் தாத்பர்யமென்று காட்டுகைக்காக அருளிச்செய்கிறார் (அதுக்குமேலேயென்று) கீழ்ப்பாட்டில்சொன்ன அநுஸந்தாநத்துக்குமேலென்றபடி. உள்ளுந்தோறு மென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சிலுமென்று) திருவமர்மார்வன் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிராட்டியித்யாதியால்) ॥௩॥

✳ நாலாம்பாட்டு ✳

திருக்கடித்தானத்தை வாசப்பொழிலித்யாதியாலே உத்யாநஸம்ருத்தமாகச்சொல்லி நெஞ்சைக்குடியாகச்சொன்னதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவனித்யாதிகொண்டென்னுமளவாலே) இத்தால் கீழச்சொன்ன அநுஸந்தாநத்திற்காட்டில் அதிகமான அநுஸந்தாநஞ்சொல்லுகிறதென்று ஸங்கதிஸூசிதை. நெஞ்சிலே என்கிறதற்கு ஸ்நேஹத்தையித்யாதிபோடே யர்த்தம். ஸ்நேஹஸப்தத்தாலே நேசத்தினாலென்கிறபதமும் வ்யாக்யாதம்.॥

✳ ஐந்தாம்பாட்டு. ✳

இப்பாட்டுக்கெல்லாம் த்விதீயபாதார்த்தத்திலே தாத்பர்யமென்றுநினைத்து தந்நாத்ருத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அங்குமித்யாதியால்) ॥௫॥

---

ப— தேசத்தமரர் - தேஜஸ்ஸையுடையவரானவமரருடைய, தேசம்- தேஜஸ்ஸு, தேசமுடையவர்- தேசத்தார், தேசத்தமரரென்று ஸமாஸம், நித்யாநுபவத்தாலே தேஜிஷ்டராயிருக்கிற நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமானவென்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்பஷ்டம். வாசப்பொழில் - வாஸனையுடையவையான உத்யானங்கள், ஸ்வபரிமளப்ரசுரங்களான உத்யாநங்களென்றபடி. மன்னு - மன்னியிருக்கிற, நித்யமாகவுண்டாயிருக்கிறவென்றபடி. கோயில்- வாஸஸ்தாநமாக, உத்யாநஜூடமாகவென்று அத்யாஹார்யம். கொண்டான்- பரிக்ரஹித்தவனான, மாயப்பிரான் - ஆச்சர்யசேஷ்டிதங்களையுடைய உபகாரகனான, என்வல்வினை- என்னுடைய ப்ரபலபாபங்கள், வினைஸப்தமிங்கே அநிஷ்டபர்யாயம். காணவாராயென்றென்று கண்ணும்வாயுந்துவர்ந்து துவர்ந்துபட்டது:க்கமெல்லாமென்றபடி. மாய்ந்து - நசித்து, அற - நிஸ்ஸேஷமாம்படி, நேசத்தினால் - ஸ்நேஹத்தினாலே. த்ராவிடத்தில் யகாரஸகாரயோ: அபேதத்தினாலே இப்பாட்டில்பாதசதுஷ்டயத்திலும் த்விதீயவர்ணாநுப்ராஸத்துக்குக் குறையில்லை. நெஞ்சநாடு - நாடுபோலேவிஸ்தீர்ணமான என்னுடையநெஞ்சை, ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்களை அநுஸந்தித்துப் பெரியநாடுபோலேவளர்ந்திருக்கிற நெஞ்சையென்றபடி. ஸம்ஸ்லேஷங்களிலும் விஸ்லேஷங்களிலும் அவனுடையகுணசேஷ்டிதாதிகளை வளநவோந்ருத அநுஸந்திக்கையாலே த்ருடதரஸம்ஸ்காரபாடவத்தால் அநவரததீபநதுக ஸ்ரீகுணசேஷ்டிதாத்யவகாஹநஸீலதயா விஸாலமானநெஞ்சையென்கை. குடிகொண்டான் - ஸபரிகரமாக நித்யவாஸம்பண்ணும்ஸ்தாநமாகவபரிக்ரஹித்தான். ॥௪॥

கோயில்கொள்- கோயில்களைக்கொண்டவர்களாயிருக்கிற, எம்பெருமானைப்போலே தாங்களும் ஜகதாதாரத்வாசையாலே தனித்தனியேயொரு கோயில்களையுடையவர்களான வென்றபடி. தெய்வமெல்லாம் - தேவதைகளெல்லாம், ப்ரஹ்மவிஷ்வக்ஸேநாதிக ளெல்லாமென்றபடி. தொழ - ஸேவிக்கும்படி, வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, கோயில்கொண்ட - தனக்குநிவாஸமாகவுடையவனான, குடக்கூத்தவம்மான் - க்ருஷ்ணனாயவதரித்து குடக்கூத்தாடினஸ்வாமியானவன், திருக்கடித்தானத்தை - ஸ்பஷ்டம், கோயில்கொண்டான்தன்- தன்கோயில்

மூ—கூத்தவம்மான் கொடியேனிடர்முற்றவும்* மாய்த்தவம்மான் மதுசூதவம்மானுறை* பூத்தபொழிற்றண்டிருக் கடித்தானத்தை* யேத்தகில்லா குறிக்கொண்மினிடரே* ॥௧॥

கொண்மினிடர்கெட வுள்ளத்துக்கோவிந்தன்* மண்விண்முழுது மளந்தவொண்டாமரை* மண்ணவர்தாந்

ஆ—(கூத்தவம்மான்) இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருக்கடித்தானத்தை யாஶ்ரயித்ததினாலே வந்ததென்னும்ப்ரீதியாலே உபாயகோடிகனாகி ஆஸ்ரிதஸம்ரக்ஷணம்பண்ணினாப்போலே ஸ்வகீயகுணசேஷ்டாவிஷ்காரத்தாலே ஸவிஶேஷஜ்ஞீதனான வென்னுடைய து:க்கத்தைப்போக்கியருளினவனுறைகின்ற திருக்கடித்தானத்தை யேத்தவாருங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களையழைத்துக்கொண்டு அவர்களோடேகூடவேத்தியாஶாஸிக்கிறார். ॥௧॥

✳ ஆறும்பாட்டு. ✳

இ— அவன் தம்பக்கல்பண்ணுகிற அநந்தஸவிஶேஷங்களை அநுஸந்திக்கப்புக்கவிவர் திருக்கடித்தானத்தை யேத்துங்கோளென்று பரோபதேஶம்பண்ணுகை யஸாமஞ்ஜஸ்யமன்றோவென்ன? வஸ்துவிபிக்கிறார் (இஸ்ஸம்ருத்தி இத்யாதியால்) ப்ரீதியாலேயென்கிறதற்கு ஸ்ரீவைஷ்ணவர்களையித்யாதியோடே அந்வயம். மதுசூதவம்மானென் கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உபாய இத்யாதியால்) கூத்தவம்மானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செ ய்கிறார் (ஸ்வகீய இத்யாதியால்) கொடியேனிடரித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸவிஶேஷ இத்யா தியால்) சரமவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஏத்தவாருங்கோளித்யாதியால்) ॥௧॥

ஸ—கொண்டானென்று மாறியநயிப்பது. தனக்கு அஸாதாரணமான வாஸஸ்தானமாக வபிநிவேஶித்தவனைக் கொண்டு, அதனோடும் - அந்ததிருக்கடித்தானத்தோடேகூட, என்னெஞ்சம் - என்னுடையமனஸ்ஸுக்குள்ளே, அகம் - உள்ளு, கோயில்கொண்டான் - வாஸஸ்தானமாகவபிநிவேஶித்தான், கோயிலுக்குவெளியில் செருப்பை வைத்துஉள்ளேபுக்குத் திருவடித்தொழுவாரைப்போலேயாக வொண்ணாதென்று திருக்கடித்தானத்தோடே என்னெஞ்சிலேபுகுந்தருளினானென்றபடி. ॥௫॥

கூத்தவம்மான்- கூத்தையுடைய ஸ்வாமியான, மனோஹரசேஷ்டிதங்களாலே லோகத்துக்கு ஸ்வாமி யானவென்றபடி. கொடியேனிடர் முற்றவும்- க்ரூரனானவென்னுடைய து:க்கங்களெல்லாவற்றையும், இடர்- து:க்கம், காணவேணுமென்று மிகவும்விடாயித்து க்லேஶம்பண்ணின க்ரூரனானவென்னு டைய விரஹது:க்கங்களையெல்லாமென்றபடி. மாய்த்தவம்மான்- போக்கினவென்ஸ்வாமியான, மதுசூத வம்மான்- உபாயமென்கிற அஸுரனை நிரஸித்தாப்போலே ஆஸ்ரிதருடைய விரோதிகளை நிரஸிக் கும் ஸ்வபாவனான ஸர்வேஶ்வரன், உறை- உறையாநிற்கிற, நித்யமாக வஸியாநிற்கிற ஸ்தானமானவென்றபடி. பூத்தபொழில்- வஸந்தருதுஸம்ருத்தியான, அவன் நித்யவாஸம்பண்ணுகையாலே நித்யவஸந்தமான உத்யானங்களையுடையவென்றபடி. கடாக்ஷவைலக்ஷண்யமாதிருவிறே! வஸந்தம்மாறலாவதென்று கருத்து. தண்- ஶீதளமான, ஸம்ஸாரதாபஶமனமான வென்றபடி. திருக்கடித்தானத்தை- ஸ்தானம். ஏத்த- ஸ்தோத்ரம் பண்ணினவளவிலே, இடர்- து:க்கங்களானவை, இல்லா- நிற்கமாட்டாதுகள், அதை ஸ்தோத்ரம்பண்ண வே து:க்கங்களெல்லாம் நமக்கிதுதேஶமன்றென்று சும்மெனாதேகைவிட்டோடும் என்றபடி. குறிக்கொண் மின்- லக்ஷ்யமாகக் கொள்ளுங்கோள், இது ஸ்தோத்ரமென்றிராதே இதை நன்றாக ஶ்ரத்தியுங்கோ ளென்றபடி. ஆகையால் திருக்கடித்தானத்தை ஸ்தோத்ரம்பண்ண வாருங்கோளென்று கருத்து. ॥௧॥

கோவிந்தன் - கோவிந்தனுடைய, பசுக்களுக்குங்கூட ஸுலபனானவென்றபடி. இதற்குத் தாம ரையென்கிறதோடே அந்வயம். மண்விண் - பூமியையும் ஆகாஶத்தையும், முழுதும் - அதில் ஒரு லேஶத்தும் விடாதே க்ருத்ஸ்நத்தையும், அளந்த - த்ரிவிக்ரமவேஷத்திலே அளந்தவையான, ஒண் - ஒள்ளியதான, அபி ராமணீயங்களானவென்றபடி. தாமரை - தாமரஸஸத்ருஶங்களை, ஒரு தாமரைப்பூவைக்கொண்டாயிற்று பூமி ஆகாஶங்களையளந்துகொண்டது, ப்ரஹ்மவைலக்ஷண்யம். திருவடிகளையென்றபடி. ஒண்டாமரையென்கிற விடத்தில் அகாராக்ஷரஸ்ய தகாரஸ்ய டகாராதேஶ:. மண்ணவர் - பூமியிலிருக்கிறவர்கள், இடக்கை வலக்கையறியாத ஸகலமநுஷ்யஜாதிகளெல்லாமென்றபடி. தாம்தொழ - தாங்களேதொழாநிற்க, தங்க ளுக்கே அஸாதாரணஸௌலப்யமாக வஸியாநிற்கவென்றபடி. பரமபதம் நித்யர்க்கேயாயிருக்குமாப்போலே

மூ—தொழுவானவர்தாம்வந்து* நண்ணு திருக்கடித்தானநகரே* ||எ||

தானநகர்கடலைச்சிறந்தெங்கெங்கும்* வானிந்நிலங்கடன்முற்றுமெம்மாயற்கே* யானவிடத்துமென்னெஞ்சுந்திருக்கடித்* தானநகருந்தனதாயப்பதியே* ||அ||

ஆ—(கொண்மின்) கோவிந்தனுடைய மண்விண்முழுதுமளந்த வொண்தாமரையை மண்ணவர்தாந்தொழுகிற படியைக்காண்கைக்காக வானவர்தாம்வந்து நண்ணு திருக்கடித்தானநகரைநினையுங்கோள் இடர்கெடுமென்கிறார்.

(தானநகர்கள்) இப்படி திருக்கடித்தானத்தையநுஸந்தித்துப் பின்னையுந்தன்றிறத்துச் செய்தருளின நன்மையைச்சொல்லுகிறார். உம்முடையநெஞ்சும் திருக்கடித்தானமு மெம்பெருமானுக்கிருப்பிடமாகச்சொன்னீர் வானின்னிலங்கடல் முற்றுமவனுக்கிருப்பிடமல்லவோவென்னில்? அங்ஙனேயாகிலு மென்னெஞ்சுந் திருக்கடித்தானமு மவனுக்குப்பிறந்துடைய திருநகரியாயிருக்குமென்கிறார். ||அ||

*ஏழாம்பாட்டு.*

இ— உள்ளத்துக்கொண்மினென்று சுருபித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நினையுங்கோளென்று) இத்தால் கீழ்ப்பாட்டில் ஏத்துங்கோளென்றார், இப்பாட்டிலே நெஞ்சாலே நினைக்கவமையுமென்கிறாரென்று ஸங்கதி ஸூசிதை. ||எ||

*எட்டாம்பாட்டு.*

தாம்பெற்றஸம்ருத்திகளுக்கெல்லாம் நிதாநம் திருக்கடித்தானமென்னும்ப்ரீதியாலே அதைக்கொண்டாடாநின்றவிவர் அதோடொக்கத் தம்முடையநெஞ்சையு மவனுக்கிருப்பிடமாகச்சொல்லுகை யுக்தமன்றோவென்ன வவதாரிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) ப்ராஸங்கிகம் பரிஹரித்து ப்ரக்ருத முபஸம்ஹரிக்கிறாரென்றபடி. ஆனாலும் திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையும் என்கிறவிரண்டாம்பாட்டிற்சொன்ன வர்த்தத்தைச்சொல்லுகிறதாகையாலே இப்பாட்டுபுநருக்தமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதாரிப்பிக்கிறார் (உம்முடையவித்யாதியால்) தனதாயப்பதியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிறந்துடையவித்யாதியால்) பிறந்துடையது - தாயப்ராப்தமானது, திருக்கடித்தானமும் தம்முடையநெஞ்சமும் மற்றஸ்தலங்களிற்காட்டில் அவனுக்கு விசேஷாபிமாநவிஷயமென்கையிலே இப்பாட்டுக்குத் தாத்பர்யமாகையால் புநருக்தியில்லையென்றதாயிற்று. ||அ||

*ஒன்பதாம்பாட்டு.*

திருக்கடித்தானத்திலே யவன் விசேஷாபிமாநியாயிருக்குமென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன வர்த்தத்தை "திருக்கடித்தானத்துளாயர்க்கதிபதி யற்புத"னென் றிப்பாட்டிலுஞ்சொல்லுகையாலே இதுபுநருக்தியன்றோ

ஸ—உகந்தருளினதேசம் ப்ராயேண ஸம்ஸாரிகளுக்கேயாயிருக்குமென்று திருவுள்ளம். வானவர்தாம்வந்து- நித்யஸூரிகள்தாங்களேவந்து, ஸம்ஸாரிஜநங்களுக்கு ஸுலபமாயிருக்கிற ஸௌசீல்யகுணத்தாலே ஆக்ருஷ்டராய்க்கொண்டு அவசராய்த் தாங்களேவந்தென்றபடி. இங்குள்ளார் பரமபதத்துக்குப்போவது பரத்வத்தையநுபவிக்கைக்காக, அங்குள்ளாரிங்குவருவது ஸௌசீல்யகுணாநுபவம் பண்ணுகைக்காக என்றுகருத்து. நண்ணு- கிட்டாநின்றுள்ள, திருக்கடித்தானநகர்- அந்தநகரத்தை, இடர்கெட- உங்களுடைய து:க்கங்கள் எல்லாம்கெடும்படியாக, உள்ளத்துக்கொண்மின்- ஹ்ருதயத்திலேகொள்ளுங்கோள், மநஸ்ஸாலே ஸ்மரியுங்கோளென்றபடி. கொண்மினென்கிறவிடத்தில் ளகாரஸ்ய மகாரபரத்வே ணகாராதேஶ:. ||எ||

வான்- பரமபதம்; இந்நிலம்- இந்த பூமி, கடல்- க்ஷீரார்ணவம், எங்கெங்கும் முற்றும்- கண்டகண்டவிடங்களெல்லாம், பரமபதபூமி க்ஷீரார்ணவங்களாகிற வெல்லாவிடங்களுமென்றபடி. தலைச்சிறந்து- தலையாகச்சிறந்து, தலையென்று உத்க்ருஷ்டம், சிறக்கை- அதிசயிதமாகை. மிகவும் ச்லாக்யங்களென்றபடி. எம்மாயற்கே- என்பக்கலிலே அதிநிவிஷ்டனான ஆச்சர்யபூதனுக்கே, தானநகர்கள்- வாஸஸ்தாநங்களான நகர்கள், ஆனவிடத்தும்- ஆனவிடத்திலேயும், அவை வாஸஸ்தாநங்களாயிருந்தாலும் என்றபடி. என்னெஞ்சும் திருக்கடித்தான நகரும்- ஸ்பஷ்டம். தனதாயப்பதி- தன்னுடைய தாயஸ்தாநம், தனக்கஸாதாரணமாய் தாயப்ராப்தமான ஸ்தாநமென்றபடி, இதையவன் தனக்கு தாயப்ராப்தஸ்தாநமாக அபிமாநித்திருக்கு மென்கை. ||அ||

மூ—தாயப்பதிகடலைச்சிறந்தெங்கெங்கு* மாயத்தினான்மன்னிவீற்றிருந்தானுறை* தேசத்தமர்திருக்கடித்
தானத்து* ளாயர்க்கதிபதியற்புதன்றானே* ॥௯॥
அற்புதனாராயணனரிவாமன* னிற்பதுமேவியிருப்பதென்னெஞ்சக* நற்புகழ்வேதியர்நான்மறைநின்றதிர்*

ஆ—(தாயப்பதிகள்) எல்லாமவனுக்குத் தாயப்பதிகளன்றோவென்னில்? அதப்படியேயாகிலும் திருக்கடித்தானமென்று லவன்திருவுள்ளம் விழுந்துகிடக்கும்படி ஸுஸ்பஷ்டமென்கிறார். ॥௯॥

(அற்புதன்) இப்படி திருநாடு திருப்பாற்கடல் தொடக்கமாகவுள்ள திருநகரிகளெல்லாவற்றிலும் மத்யஜ்யேஷ்டமாயிருந்த திருக்கடித்தானத்திலேநிற்பது மேவியிருப்பதென்னெஞ்சமென்கிறார். ॥௰॥

இ—வென்ன வவதரிப்பிக்கிறார் (எல்லாமித்யாதியால்) பூர்வார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அப்படியேயாகிலுமென்று) உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கடித்தானமித்யாதியால்) தம்மோடுஸம்ஶ்லேஷத்தி லாஸக்தியாலே திருக்கடித்தானத்திலே யவன் விஶேஷாபிநிவிஷ்டனாயிருக்குமென்று கருத்து. ॥௯॥

*பத்தாம்பாட்டு.*

திருக்கடித்தானத்தை யவன் விஶேஷித்து விரும்பாநிற்குமென்று கீழ்ப்பாட்டிற்சொன்னவிடத்தில் அத்தை விரும்புகைக்கு நிபந்தநம் தம்மோடுஸம்ஶ்லேஷத்தி லாஸக்தியென்னுமிடம் கண்ணாலுமன்றிக்கே அபிப்ராயமாத்ரமாயிருக்கையாலே அதை வெளியிடுகிறதாகையா லிப்பாட்டு கீழ்ப்பாட்டுக்குஶேஷமென்று ஸமதிகாட்டுகைக்காகக் கீழ்ப்பாட்டிலர்த்தத்தை அநுவதிக்கிறார் (இப்படியித்யாதியால்) இப்பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கடித்தானத்திலேயித்யாதியால்) ॥௰॥

ரு— தாய- ந்யாயமான, தனக்கு நிரூபாதிகஸ்வம்மான வென்றபடி. பதிகள் எங்கெங்கும்- ஸ்தாநங்களெல்லாவற்றிலும், இதுக்கு வீற்றிருந்தானென்கிறதோடேயந்வயம். தலைச்சிறந்து- தலையாயிருக்குமதொருபடி அதிஶயிதனாய், ஸர்வோத்க்ருஷ்டமாயிருக்குமதொருபடி அதிஶயிதனையென்றபடி. ஸந்நிவேஶஸௌந்தர்யாதிகுணஶாலியாயென்கை. மாயத்தினால்- ஆஶ்சர்யமான ஸங்கல்பத்தினாலே, ஸங்கல்பரூபஜ்ஞாநத்தாலே என்னுதல். "மாயா வயுநம் ஜ்ஞாநம்" மென்றதிறே. மன்னி- ஸ்திரமாய், விடாமலென்றபடி. வீற்று- வீறுமைபெற்று, வீறு- உத்கர்ஷம், ப்ரஹ்மருத்ராதிகளைப் போலன்றிக்கே ஸர்வாதிகோத்கர்ஷத்தை யுடையவனாயென்றபடி. இருந்தான்- எழுந்தருளியிருந்தவனானவென்றபடி. தேசத்தமர்- ஸமாதாநஸம்பத்தாலே தேஜஸ்விகளான நித்யஸூரிகளுடைய, திருக்கடித்தானத்துள் - அவர்களுக்கு ப்ராப்யமான திருக்கடித்தானத்திலே, தானேயுறை - தானே நித்யவாஸம்பண்ணாநிற்கிற, தானே என்ற அவதாரணத்துக்கு "நாஹம் வஸாமி வைகுண்டே ந யோகிஹ்ருதயே ரவௌ । மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி நாரத" என்கிறபடியே மற்றஸ்தலங்களிலே யெழுந்தருளியிருக்குமிருப்பு அவனுக்கிருப்பாய்த்தோன்றுகிறதில்லை, என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருக்குமதுவே அவனுக்கிருப்பாகத் தோன்றுகிறதென்றுகருத்து. ஆயர்க்கதிபதி - கோபவம்ஶ்யனானவன், அற்புதன் - ஆஶ்சர்யபூதன், திவ்யஸ்தலங்களெல்லாம் தனக்குத்தாயப்பதிகளாய் தானுமவற்றிலே வீறுபெற்றருளியிராநிற்கச்செய்தேயு மென்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்கு உறுப்பானதிலமென்று திருக்கடித்தானத்தை விஶேஷித்து விரும்பாநிற்கிறவவ ஆஶ்சர்யபூதனன்றோவென்றபடி. ॥௯॥

அற்புதன் - ஆஶ்சர்யபூதனை, ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவனையென்றபடி. நாராயணன் - ஸகலரைக்கைவிடாதபடி வாத்ஸல்யாதிகுணஶாலியான, அரி - ஹரியான, ஸாம்ஸாரிகதுக்கஹாரனென்றபடி. வாமனன் - தானர்த்தியாய்ப்பிறந்தாகிலு மாஶ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் நிர்வஹித்துக்கொடுக்குமவனான எம்பெருமான், நிற்பது - வஸிப்பது, இதுக்குத் திருக்கடித்தானமென்கிறத்தோடேயந்வயம். நற்புகழ் - நல்லபுகழையுடையவர்களான, நல் புகழென்கிறவிடத்திலே லகாரஸ்ய றகாராதேஶ: புகழ் - கீர்த்தி, அநந்யப்ரயோஜநர்களென்கிற கீர்த்தியையுடையவர்களானவென்றபடி, வேதியர் - வைதிகர்களுடைய, நான்மறை - நாலுவேதங்கள், அவர்களாலே உச்சரிக்கப்படுகிற நாலுவேதங்களென்றபடி, நின்று - ஸ்திரமாக, நிரந்தரமாகவென்றபடி, அதிர் - அதிராநிற்கிற, முழங்குகிற

ஶ்ரீ— த்ரா—பிரான் - ஆஶ்ரிதருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாகையாலும், (ஶ்ரீவத்ஸவக்ஷஸ்த்வாத்) திருவமர்மார்வன் - பெரியபிராட்டியார் பொருந்திவர்த்திக்கிற திருமார்வையுடையவனாகையாலும், (ஶ்ரீய:பதித்வாத்) மாயப்பிரானென் - ஆஶ்சர்யபூதனாக உபகரிக்குமவனாகையாலும், (ஸர்வாஶ்ரயத்வாத்) கோயில்கொள்தெய்வமெல்லாந்தொழ - நித்யஸூரிகளாலே நிரந்தரம் ஸேவிக்கப்படுகையாலும், (ஸேவ்யத்வாத்) மதுசூதவம்மானுறை - விரோதிநிரஸநஸ்வபாவனாகையாலும், (ஶூரத்வாத்) உள்ளத்துக்கோவிந்தன் - ஸர்வஸுலபனாகையாலும், (ஸௌலப்யாத்) வானின்னிலங்கடலித்யாதி - பரவ்யூஹவிபவாதிகளைக்காட்டிலும் ஆஶ்ரிதருடையநெஞ்சை ஸ்தாநமாகவுடையனாகையாலும், (ஸர்வகாரணத்வாத்) ஆயர்க்கதிபதியற்புதன்றனே - ஸர்வேஶ்வரத்தாலும் ஆஶ்சர்யனாகையாலும், ஸர்வேஶ்வரத்தாலுமென்கிறவித்தை விவரணம்பண்ணுகிறது. "அற்புதநாராயணனரிவாமனன்" என்றுமேலிற்பாட்டு, தன்னிலேஸ்ருஷ்டமான நாமத்தைத்தான் வாஸஸ்தாநமாகவுடையனுவது, விரோதிகளான விரண்டுவடிவைக்கொண்டு விரோதியைநிரஸிப்பது, சிறுகாலைக்காட்டி பெரியகாலாலேயளப்பது, இப்படிகளால் திருக்கடித்தானத்தெம்பெருமானாஶ்ரிதருக்கு ஸுலபவிதரணத்திலே ஸந்நிஹிதனுயிருக்கிறானென்று "எல்லியுங்காலே" என்கிற உபக்ரமத்திலே ஆழ்வார் அருளிச்செய்தருளினுரென்கிறுர். ||கூள||

ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எட்டாம்பத்தில் ஆறுந்திருவாய்மொழிமுற்றிற்று.

# ஏழாந்திருவாய்மொழி.

ஆ— (இருத்தும்வியந்து) இப்படியென்னெஞ்சிலே புகுந்தருளுகிறான், நான்தன்னைப்பிரிந்து பட்டபாடெல்

## ஏழாந்திருவாய்மொழி.

இ— மாயக்கூத்தனில் தமக்கோடின விடாயெல்லாம்மாற்றுகைக்காக எழுந்தருளின வெம்பெருமான்தம்பக்கல்செய்கிற அநுக்ரஹவிஶேஷங்களை க்ருதஜ்ஞதையாலே அநுஸந்தித்துக்கொண்டனுபவிக்கத்துடங்கின ஆழ்வார் அவற்றில் திருக்கடித்தானத்துநின்று செய்தருளின சிலஅநுக்ரஹவிஶேஷங்களை கீழ்த்திருவாய்மொழியிலே பேசியநுபவித்து தடநதாமவன் செய்தருளாநின்றதாய் தமக்கு ஸாக்ஷாத்ஸ்ப்ருஷ்டமான ஸம்ஶ்லேஷவிஶேஷரூபானுக்ரஹத்தை யித்திருவாய்மொழியிலே யநுபவிக்கிறாரென்று ஸங்கதிஸூசிதமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக வருளிச்செய்கிறார் (இப்படியென்று) இப்படியென்றது - கீழ்த்திருவாய்மொழியிலுக்தரீத்யாஎன்றபடி. அதாவது:— தான் ஸமாத்தாகவெழுந்தருளினால் தத்க்ஷணஸம்ஶ்லேஷம்ஜ்யோதிஷ்டதிதடி ஸ்ருஷ்டிவெள்ளமெனக்கு ஸாத்யமாமென்றுபார்த்து ஸத்தியெழுந்தருளாதே திருக்கடித்தானத்தில்நின்று தானெழுந்தருளினஸ்ருஷ்டியை எனக்கு ஸாத்மிப்பித்தருளியென்றபடி. "என்னைத்தன்பொன்னடிக்கீழிருத்தும்" என்கிறவித்தாலும், கருத்தையுறவீற்றிருந்தா" னென்கிறவித்தாலும் நான் பாஹ்யஸம்ஶ்லேஷத்தையபேக்ஷித்தால் தானென்னெஞ்சிலே புகுந்திராநின்றானென் றிப்பாட்டுக்குப் பொருளாகததோற்றுகிறதாகையாலே "ஶ்ரோதவ்ய: மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்கிற உபாஸநவாக்யம்போலே இப்பாட்டும் உபாஸநவாக்யமாய்த்தோற்றுகிறவிது "பொருத்தமுடைவாமன" னென்று அவனுக்கு ப்ரணயித்வஞ்சொல்லுகிறவித்தோடுவிரோதமன்றோவென்ன? "என்னைத்தன் பொன்னடிக்கீ"ழித்யாதிவாக்யத்துக்குத் தமக்குள்ளபாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷையைச் சொல்லுகையிலே தாத்பர்யமன்றிக்கே கீழ் தாம்பட்டவ்யஸநாதிஶயத்தை ஸ்வாபாஸமஹத்ஸமாக அநுபவித்தமநோபவத்தாலே எனக்கவன்பக்கலுள்ள ஆஸக்தியைக்காட்டினு மவனுக்கென்பக்கலாஸக்தி ஸஹஸ்ரகுணமதிகமாயிராநின்றதென்கையிலே தாத்பர்யமாகையால் விரோதமில்லையென்றுகாட்டுகிறுர் (என்னெஞ்சிலேயித்யாதி பட்டுவென்னுமளவாலே) இவ்வநுவாதத்திற்கு ஸ்வாபாஸமஹத்த்வம் பாட்டின்பூர்வார்த்தநிர்த்தேஶத்திலே ஸ்பஷ்டமாகிறது. புகுந்தருளுகிறானென்றது— க்ரியாவாசகமன்று, புகுந்

மூ— காணிலென்னேயென்பாருமில்லை* மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தார்க்* கருள்
கொளாளாயுய்யிலல்லாலில்லைகண்டீரரணே* ॥ரு॥
அரணமாவரற்றகாலைக்கென் றென்றமைக்கப்பட்டா* ரிரணங்கொண்டதெப்பராவரின்றியிட்டாலுமஃதே*
வருணித்தென்னே வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே*

ஆ— த்தில் விடும்ஸ்வபாவரான அவர்களைவிட்டு ஆபத்ஸகனான க்ருஷ்ணனுடையக்ருபைக்கு விஷயமாயுய்யிலல்லால் வேறொருரக்ஷையில்லையென்கிறார். ॥ரு॥

(அரணமாவர்) த்ரவ்யதாநாதிகளாலே ஆபத்துக்கு பந்துக்களை ஸம்பாதித்துவைத்தால் அவர்களும் ஆபத்துவந்தால் க்ருதக்நராய், அநுபகாரிகளைப்போலே யுதவார், ஆதலால் அவர்களைவிட்டு உபகாராபேக்ஷையன்றியே வடமதுரையிலேவந்துபிறந்து ஆபத்ஸகரைரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனுடைய கல்யாண

இ— த்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆபத்ஸகனித்யாதியால்) சதுர்த்தபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (க்ருபைக்கித்யாதியால்) ॥ரு॥

✳ நாலாம்பாட்டு. ✳

ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (த்ரவ்யேத்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டிலே ஸம்பத்துள்ளகாலத்திலே தாங்களேவந்து ஸ்நேஹித்தவர் ஆபத்காலம்வந்தால் வார்த்தையும்சொல்லாரென்றவர் இப்பாட்டிலே த்ரவ்யதாநாதிகளாலே நீங்கள் அவர்களை ஸம்பாதித்துவைத்தாலும் உதவாரென்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆபத்துவந்தாலித்யாதியால்) வருணித்தென்னே யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) இன்றி இட்டாலு மஃதே யென்கிறதற்குத் தாத்பர்யம் சொன்னதாகவுமாம். இரண்டு வாக்யத்துக்குமாகச் சொன்னதாகவுமாம். வடமதுரைப்பிறந்தவன் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உபகாரேத்யாதியால்) சதுர்த்தபாதத்துக்குத்

ப— யென்கை. காணில்- கண்டார்களாகில், என்னேயென்பாருமில்லை- என்னசெய்கிறாயென்றொருவார்த்தை சொல்லுவாருமில்லை, உம்காரத்தாலே தாங்கள் ஒரு வார்த்தைசொன்னால் அதைக்கொண்டிவனுக்கு ஜீவநம் நடக்குமென்றாலும் பூர்வமிவனாலே உபக்ருதராயிருந்தவர்களெவ்வளவும்செய்யநினையாரென்றுகருத்து. ஆதலால் இல்லைகண்டீர் என்று ஸம்பந்தம். மருள்கொள்- அஜ்ஞாநத்தைக்கொள்ளும்படியான, ஜகத்துக்கு நெஞ்சுகலங்கும்படி பயங்கரமானவென்றபடி. செய்கை- வ்யாபாரங்களையுடையவர்களான, அசுரர்- அஸுரர்கள், மங்க- நசிக்கைக்கு, வடமதுரை- உத்தரஸ்ரீமதுராநகரியிலே, பிறந்தார்க்கு- அவதரித்தருளின க்ருஷ்ணனுக்கு, பூஜாயாம் பஹுவசநம். அருள்கொள் ஆளாய்- அருள்கொள்ளும் ஆள்களாய், க்ருபாபாத்ரமான தாஸஜநங்களாயென்றபடி. உய்யிலல்லால்- உஜ்ஜீவித்தாலல்லது, அரண்- வேறொருரக்ஷையானது, இல்லைகண்டீர்- இல்லைகிடிகோள், ஆதலால் அவனையே ஆச்ரயியுங்கோளென்று கருத்து. ॥ரு॥

அற்றகாலைக்கு- கைம்முதல் அற்றுப்போனகாலத்துக்கு, ஆபத்காலத்துக்கென்றபடி. அரணமாவரென்றென்று- நமக்குரக்ஷகராவரென்றென்று பலகால்நினைத்து, அமைக்கப்பட்டார்- பந்துக்களாக்கப்பட்டார், ஸாபேக்ஷராக்கப்பட்டவர்களென்றபடி. இனி நமக்கிவர்கள் அபேக்ஷிதமெல்லாஞ்செய்வரென்று தேறியிருக்கும்படி, த்ரவ்யதாநாதிகளாலே வசீகரிக்கப்பட்ட பாந்தவஸ்வர்களென்கை. இரணம்கொண்ட- ருணம் வாங்கிக்கொண்டவர்களான, தெப்பராவர்- த்ரோஹராவார்கள், தெப்பர்- த்ரோஹர், க்ஷுத்ரரென்றபடி. தாங்கள் ருணமாகக்கொடுத்துவைத்த தநத்தைத் திரும்பவாங்கிக்கொண்டவர்கள்போலே அவர்கள் ஆபத்காலம்வந்தபோது ப்ரத்யுபகாரம்பண்ணநினையாதே க்ஷுத்ரராய் விடுவர்களென்றபடி. இன்றியிட்டாலும்- இல்லாமல்போனாலும், நீங்கள் தநங்களைக்கொடுத்து ஸம்பாதித்துவையாவிட்டாலும், அஃதே- அதுவே, அவர்கள் ஆபத்திலே உதவாமல்போமதுவே நிச்சிதமென்றபடி. தநங்களைக்கொடுத்ததோடு கொடாததோடு வாசியில்லையிறேயென்கை. வருணித்து- வர்ணித்து, என்னே- என்னப்ரயோஜநம், க்ருதக்நருடைய ப்ரகாரங்களை விஸ்தரித்தென்னப்ரயோஜநமென்றபடி. அவர்களை விடுங்கோளென்றுகருத்து, வடமதுரைப்பிறந்தவன்- எல்லோருக்கும் ஆபத்திலே உதவுகைக்காக உத்தரமதுரையிலே அவதரித்தவனுடைய, வண்புகழே-

மூ— சரணென்றுய்யப் போகிலல்லாலில்லைகண்டீர் சதிரே* ||௪||

சதிரமென்றுதம்மைத்தாமேசம்மதித்தின்மொழியார்* மதுரபோகந்துற்றவரே வைகிமற்றொன்றுறுவ*
ரதிர்கொள்செய்கையசுரர்மங்கவடமதுரைப்பிறந்தாற்* கெதிர்கொளாளாயுய்யிலல்லாலில்லை கண்டீரின்
பமே* ||௫||

ஆ—குணங்களை ஶரணமாகப்பற்றுங்கோள், அதுவேசதிரென்கிறார். ||௪||

(சதிரமென்று) சதிராகவாழாநின்றோமென்று தங்களைத்தாங்களேயிசைந்து இனியபேச்சுக்களையுடைய ஸ்த்ரீகளுடைய போக்யமானபோகங்களை புஜித்தவர்களே புஜிக்கைக்கீடான ஐஶ்வர்யங்குன்றினவாறே அவர்களாலே மிகவும் பரிபவிக்கப்படுவர், லோகமெல்லாமதிரும்படியான வ்யாபாரங்களையுடைய

இ— தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஶரணத்வாதியால்) ||௪||

*ஐந்தாம்பாட்டு.*

இசைந்துஎன்கிறதற்குப் புஜித்தவர்களென்கிறத்தோடே அந்வயம். வைகியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (புஜிக்கைக்கீடானவித்யாதியால்) ஐஶ்வர்யம்- தனதான்யஸம்பத்யாதிகள், குன்றினவாறே- ஸாகல்யேந க்ஷயித்தவாறே, மற்றொன்றுறுவர்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்(அவர்களாலேயித்யாதியால்)

ப—கல்யாணகுணங்களை, வண்- கல்யாணம், புகழ- குணம், ஔதார்யாதிகுணங்களென்றபடி. சரணென்று- ரக்ஷகங்களென்று அத்யவஸித்து, உய்யப்போகிலல்லால்- உஜ்ஜீவிக்கவுபக்ரமித்தாலல்லது, சதிர்- ஸாமர்த்யமானது, அநாயாஸேந ஸம்ஸாரோத்தாரணத்தையுடைகையாகிற ஸாமர்த்யமானதென்றபடி. இல்லைகண்டீர்- இல்லைகிடிகோள். ||௪||

சதிரமென்று- சதிராயிராநின்றோமென்று, சதிர்- ஸாமர்த்யம், சதிரையுடையவர் சதிரர், இச்ஶப்தத்தாலே தங்களைச்சொல்லிக்கொள்ளும்போது சதிரமென்று ரூபம். அஸத்விஷயத்தை ஸ்வீகரித்துக்கொண்டு புஜிக்கும்ஸாமர்த்யத்தை யுடையவராயிராநின்றோமென்று என்றபடி. தம்மைத்தாமேசம்மதித்து- தங்களைத்தாங்களே ஸாதித்து, "அஸம்ஸ்த்ருதவிவாதாஸ்மிகாரோஷ்யாம்யஹமிதி" என்கிறபடியே இதுபரஸம்மதமல்லாமையாலே தாங்களேதங்கள் நெஞ்சுக்குள்ளே ஸந்தோஷித்துக்கொள்ளுமத்தனைபோக்கி பிறர்க்கிது ஹாஸ்யமாயிருக்குமிறே. இதுக்குத் துற்றவரென்கிறத்தோடே அந்வயம். இன்மொழியார்- போக்யோக்தியையுடையரான ஸ்த்ரீகளுடைய, இன்- போக்யம், மொழி- உக்தி, "போக்யதிஷ்டிவாவியோஷிதாம் ஸ்த்ரீஷாமாஷா ரேசகேலயம்" என்கிறபடியே உக்திமாத்ரம் போக்யமாகச்சொல்லி ஸ்வீகரித்துக்கொள்ளுவரென்று கருத்து. மதுரபோகம்- போக்யங்களானபோகங்களை, துற்றவரே- துற்றுக்கொண்டவர்களே, துற்றுகை- பூர்ணமாகபுஜிக்கை, பூர்ணமாக அநுபவித்தவர்களே என்றபடி. ஏகாரம் பரிபவத்தினுடைய ஸம்பாவிதத்வத்யோதநார்த்தமேந அத்யந்தாஸம்பாவிதவ்யவச்சேதார்த்தம். வைகி- காலம்கழிந்து, வைகை- காலம்கழிகை, தனதான்யாதிஐஶ்வர்யங்கள் அதீதமானவாறேஎன்றபடி. மற்றொன்று- வேறொருபதத்தை, கீழ்ச்சொன்ன போக்யஸாதனபோகங்களுக்கு விபரீதங்களான ப(ள)ருஷபாஷணாதி தக்ஷப்ரதபரிபவ வாரம்பரைகளை யென்றபடி. அந்த ஸ்த்ரீகள்பண்ணும் பரிபவம் பாபாதிஶயமென்கைக்காக வேறொன்றென்று ஸாமாந்யமாக நிர்தேஶித்தது, உறுவர்- அடைவர்கள், அதிவ்ருத்தாதிகளாய்க்கொண்டு போக்யத்வங்களாயிருந்த ஸ்த்ரீகளே விஷயத்யாஜ்யராய் விடுவரென்றபடி. ஆதலாலின்பமில்லை கண்டீரென்று மேலோடேஸம்பந்தம். அதிர்கொள்- அதிர்க்கையைக்கொண்டிருக்கிற, அதிர்க்கை - கம்பிக்கை, லோகங்களுக்குக் கம்பஜநகமானவென்றபடி. செய்கை- வ்யாபாரங்களையுடையவரான, அசுரர்- அஸுரர்கள், மங்க- நஶிக்கும்படி, வடமதுரை- உத்தரமதுரையிலே, பிறந்தாற்கு- ஸர்வகாரணமும் ஸகலகாரணமாக ஸர்வஜ்ஞனைக்கொண்டு ஸர்வரக்ஷகனும் ரக்ஷணம்பண்ணுகைக்காக அவதரித்தருளின ஸ்ரீக்ருஷ்ணனுக்கு, எதிர்கொள்ஆளாய்- எதிர்கொள்ளும்தாஸராய், "அக்ரூர்மஹாபாஹுஸம்ப்ராப்தோ வஸுதேவஸுதோ நமஸ்க்ருத்ய" என்னும்படியிருக்கிறவனுக்கு ஸாமந்தகாதிஸர்வஜ்ஞ ராதிகளோடே அவிரோதம்பண்ணும் தாஸர்களாயென்றபடி. உய்யிலல்லால்- உஜ்ஜீவித்தாலல்லது, இந்த ஜீவநம் ஸாராஸாரவிவேகம். தாஸ்யஸாதிபாரதந்த்ர்யாதிவஶாத்மாஸாரஸாக்ஷாத்காரத்தைப் பெற்றாலல்லதென்றபடி. இன்பம்- ஸுகமானது, இல்லைகண்டீர்- இல்லைகிடிகோள், ஆதலால் அவன்பக்கலிலேயே நீங்கள் அபிமதநாதீ

மூ—இல்லைகண்டீரின்பமந்தோவுள்ளதுநினையாதே*தொல்லையார்களெத்தனைவர்தோன்றிக்கழிந்தொழிந்தார்* மல்லைமூதூர்வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே* சொல்லியுய்யப்போகலல்லால் மற்றொன்றில்லைசுருக்கே* ।௬॥

---

ஆ—ஐஶ்வர்யமயங்கும்படி வடமதுரைப்பிறந்தாற்கு ஸ்வாமதாதிகளைப்பண்ணி யெதிர்கொள்ளுமடியாரா யுய்ப்பிலல்லால்வேறு ஸாதநமில்லையென்கிறார். ।௫॥

(இல்லைகண்டீர்) எம்பெருமானல்லது வேறுபுருஷார்த்தமில்லையென்னும் இவ்வுண்மையை யுணராதே யெத்தனைபேர் இங்ஙனே முடிந்துபோனார், நீங்களும் அங்ஙனே நஶியாதே ஆஶ்ரிதர்க்கா ஜந்மம்பண்ணுகைக்காக வந்துபிறந்தருளினவனுடைய ஔதார்யத்தையே சொல்லியுய்ப்புகுங்கோள், வேறுப்பவிரகில்லை இது ஸம்க்ஷேபேண சொன்னோமென்கிறார். ।௬॥

(மற்றொன்றில்லை) இச்சுருக்கை மிகப்பரவாமே வ்யக்தமாக்குகிறார். வேறுவக்தவ்யமில்லாதபடி ஸம்க்ஷ

---

இ— இத்தால் கீழ்ப்பாட்டிலே லௌகிகவ்யாபாரங்கள் ஆபத்திலே உதவாரென்றவர் இப்பாட்டிலே அவ்வளவேயன்றிக்கே ஆபத்திலே விரோதமும் பண்ணுவார்களென்கிறாரென்று ஸங்கதி. யத்வா— கீழ்நாலுபாட்டாலும் அவர்களை ஸ்வாபகாரகரல்லர் என்றவர் இப்பாட்டில் ஸ்வாபகாரகரென்கிறாரென்று கருத்தாகவுமாம் எதிர்கொள்ளவாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வாமிநேத்யாதியால்) ஶேஷம் ஸ்பஷ்டம். ।௫॥

* ஆறாம்பாட்டு. *

உள்ளதுநினையாதேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானித்யாதியால்) வசநவ்யக்த்யத்துக்குப் ஸங்கதமருளிச்செய்கிறார் (நீங்களுமித்யாதியால்) இத்தால் கீழ்ச்சொன்ன பரமபுருஷார்த்தஜ்ஞாநம் அத்யந்ததுர்லபமாகையாலே நீங்கள் அதிஶீக்ரமாக ஸமாஶ்ரயராகுங்கோளென்று உபதேஶிக்கிறாரென்று ஸங்கதி. சுருக்கென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்க்ஷேபேண சொன்னோமென்று) ஶேஷம்ஸ்பஷ்டம். ।௬॥

* ஏழாம்பாட்டு *

அவன் கல்யாணகுணமே அநுஸந்தேயமென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன அர்த்தத்தையே குற்றமில்சீர்க்கற்றித்யாதியாலே சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு வ்யர்த்தமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (இச்சுருக்கையித்யாதியால்) சுருங்கச்சொன்னோமென்றருக்கச்செய்தே வ்யக்தமாக்குகிறதென்னக்கூடுமோவென்று ஶங்கியாமைக்காக அருளிச்செய்கிறார் (மிகப்பரவாமேஎன்று) எவ்வுயிர்க்குமென்றதால் ஸமித்தவஸத்தை

---

ஈ—ஸ்வீகராம்படி யாகுங்கோளென்று கருத்து. ।௫॥

இன்பமில்லைகண்டீர்- எம்பெருமானல்லது வேறுபுருஷார்த்தம் இல்லைகிடீர்கோள். உள்ளது- அவனையொழிய வேறு புருஷார்த்தமில்லையென்கிற இந்த யதார்த்தமான அர்த்தத்தை, நினையாதே- அநுஸந்தியாதே, பராமர்ஶித்துத்தெரியாதே யென்றபடி. தொல்லையார்கள்- அநாதிகாலத்திலே உள்ளவர்கள், தொல்லை- அநாதிகாலம், எத்தனைவர்- அஸங்க்யாதரான ஜநங்கள், தோன்றி- பிறந்து, கழிந்தொழிந்தார்- அதீதராய் விட்டார்கள். பரமபுருஷார்த்தஜ்ஞாநம் பெருமையாலே அவர்களுக்கு ஜநநமரணமாத்ரமே பரிஶேஷித்ததென்று கருத்து. அந்தோ- அய்யோ!, இப்படி வ்யர்த்தமாய்ப் போய்விட்டார்களேயென்று ஶோகிக்கிறபடி, நீங்கள் அங்ஙனேயாகாதொழியப் பாருங்கோளென்று கருத்து. ஆனால செய்யவேண்டுவதென்னென்ன? அருளிச்செய்கிறார். மல்லை- ஸர்வஸம்ருத்தமான, மல்லை- ஸம்ருத்தம். மூதூர்- பழைய ஊரான, மூது- பழையது, பகவதவதாரஸ்தாநமாய்ப்பின்பு ஶ்ரீஶத்ருக்நாழ்வான் நகரியாய் இப்படி அநாதியாக ஸம்ருத்தியையுடைய ஊரானவென்றபடி. வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே- ஸ்பஷ்டம். சொல்லி- கீர்த்தநம்பண்ணி, உய்யப்போகலல்லால்- உஜ்ஜீவிக்கப் ப்ரவ்ருத்தித்தால் அல்லது, மற்றொன்றில்லை- வேறொரு உஜ்ஜீவநோபாயமில்லை, ஆகையால் அவனையே ஆஶ்ரயியுங்கோளென்று கருத்து. சுருக்கு- இது ஸம்க்ஷேபம், ஶாஸ்த்ரஸாரார்த்தத்தையெடுத்து ஸம்க்ஷேபேண சொன்னோமென்றபடி. இனி இதுக்குமேல் வக்தவ்யமில்லையென்றுகருத்து, ।௬॥

மூ— போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு*வாழ்துணையாவடமதுரைப்பிறந்தவன்வண்புகழே*
வீழ்துணையாப்போமிதனில்யாதுமில்லைமிக்கதே* ॥அ॥
யாதுமில்லைமிக்கதனிலென்றென்றதுகருதிக்* காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கை

ஆ—(வாழ்தல்) தன்னுடைய கல்யாணகுணாநுஸந்தாநைகதாரணரான சிரியருக்கு வாழ்துணையாக வடமதுரையிலே வந்துபிறந்தருளின ஸர்வேச்வரனுடைய கல்யாணகுணாநுஸந்தாநத்துக்கு மேற்பட்ட புருஷார்த்தோபாயமில்லையென்கிறார். ॥அ॥

(யாதுமில்லை) எல்லாவற்றிலும்மேற்பட்ட புருஷார்த்தமன்றோ ஸாம்ஸாரிகதுக்கநிவ்ருத்திமாத்ரமான கைவல்யமென்று அதைப் புருஷார்த்தமென்றுபற்றில் காதுபெருக்கவென்றுபுக்கு பண்டுள்ளதையும்

✳ எட்டாம்பாட்டு. ✳

இ— மாயவனித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையவித்யாதியால்) சிரியருக்கு- ஸூரவ்யருக்கு, அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவருக்கென்றபடி. இத்தால் அவனவதரித்தது ஸகுணாநுஸந்தாநம் எல்லாருக்கும் ஸித்திக்கைக்காகவாகையாலே தத்குணாநுஸந்தாநமே எல்லாருக்கும் உபாதேயமென்கிறாரென்று ஸம்மதிஸூசிதமாகை. வீழ்துணையாய்ப்போமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அநுஸந்தாநத்துக்குமேல்பட்டவித்யாதியால்) ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

யாதுமில்லைமிக்கதனிலென்றென்று என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எல்லாவற்றிலுமித்யாதியால்) ஸாம்ஸாரிகதுக்கநிவ்ருத்திமாத்ரமாகையாலே எல்லாவற்றிலும் மேல்பட்டதென்று கருத்து. அதுகருதிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதையித்யாதியால்) அதுகருதியென்று ஸாமாந்யமாயிருந்ததேயாகிலும் கீழே பந்துக்களுடையவும் ஸ்ரீமான்களுடையவும் ஸம்பந்தஞ்சொன்னத்தாலே வைஷ்ணவமெல்லாமென்று பர்யவஸிதமாகையால் இது கைவல்யபரமாகை உசிதமென்றுகருத்து.

ப—பரஷி- ஸ்ரீதியாலே ஸங்கல்பம்பண்ணி, போழ்துபோகஉள்ள- காலம்போக்க நினைக்கைக்கு, உள்ளுகை- நினைக்கை, காலக்ஷேபம் பண்ணவேணுமென்று ஆநோரயிக்கைக்கென்றபடி. கிற்கும்- வல்லவர்களான, விஷயாந்தரங்களில் அகப்படாதே இப்படியே ஆநோரயிக்கமாட்டினவர்களானவென்றபடி. புன்மையிலாதவர்க்கு- பொல்லாங்கில்லாதவருக்கு, ப்ரயோஜநாந்தரஸம்பந்தரூப தோஷரஹிதரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கென்றபடி. வாழ்துணையா- குணாநுபவ ரூபபோகத்துக்குபாயமாக, துணை- ஸஹாயம். இங்கே உபாயத்தைச்சொல்லுகிறது, வடமதுரைப்பிறந்தவன்- உத்தரமதுரையில் அவதரித்தவனுடைய, வண்புகழே- கல்யாணகுணங்களே, வண்- கல்யாணம். வீழ்துணையா- ஆசைப்படும்படியான ஸஹாயமாய், புருஷார்த்தோபாயமாக வென்றபடி. வீழ்- ஆசைப்படும்படியானது, ஸ்ரவ்யமானதென்றபடி. போமிதனில்- நடக்கிற இதில்காட்டில், ஸதா அநுஸந்திக்கிற இதில்காட்டிலென்றபடி. மிக்கது- அதிகமான புருஷார்த்தோபாயம், யாதுமில்லை- ஒன்றுமில்லை, இதுவே நிரதிசயமான உபாயமென்றபடி. ॥அ॥

அதனில்- அந்த கைவல்யத்தைக்காட்டில், மிக்கு- அதிகமாய், யாதுமில்லை- ஒரு புருஷார்த்தமுமில்லை, என்றென்று- இப்படி பலகாலம் அநுஸந்தித்து, அதுக்கும் அதிகமாக ஹேயநாஸ்வம் உள்ளதாயிருக்கச் செய்தேயும் ஸம்ஸாரநைரந்த்ர்யத்தாலே இப்படி அநுஸந்தித்தென்றபடி. அது கருதி- அந்த கைவல்யத்தை அபேக்ஷித்து, ஒரு உபாயத்தை அநுஷ்டிக்கும்போது அதுக்குப்பலமாக அந்த கைவல்யத்தை அபேக்ஷித்தென்றபடி. கருதிஎன்றது "ஸாக்ஷாத்ஸம்ப்ராயணம்" என்கிறவிடத்தில் ஆத்மத்யாநம்போலே அநுவாதமாய் கருதினுலென்று கருத்து. காதுசெய்வான்- காதுகளைச்செய்ய இச்சையுடையவனாய், கூதைசெய்து- மூளியாக்கினவனாய், கர்ணாலங்காரஸ்தாநத்தைப் பெரியதாக்கப் ப்ரவ்ருத்தித்துக் காதைமூளியாக்கினவனையென்று பதார்த்தம், காதைவளர்க்கப்போய் மூளியாக்கிக்கொண்டாப்போலேயென்று கருத்து. முறைகடைவாழ்க்கையென் றதிப்பது. முறை- அநாதிகாலமான, அநாதியுள்ளதான வென்றபடி. கடைவாழ்க்கையும்- நிக்ருஷ்டமான போகமும், ஸாம்ஸாரிகபோகமுமென்றபடி. போம்- போய்விடும், புனராவ்ருத்தியில்லாதேபோகிற ஆத்மானுபவத்துக்கே இருந்த ப்ராக்ருத

மூ— றில்லையே* ॥௰॥

ஆதுமில்லைமற்றவனிலென்றதுவே துணிந்து* தாதுசேர்தோட்கண்ணனைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன*
தீதிலாதவொண்டமிழ்களிவை யாயிரத்துளிப்பத்தும்* ஓதவல்லபிராக்கணம்மை யாளுடையார்கள்
பண்டே* ॥௧௧॥

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ஆ— திருவடிகளிலே ஶேஷத்வேந வர்த்தியுங்கோள், உங்களுக்காக ஸம்பாதிக்கப்படுகிறவையும் நீங்களும் அவனுக்கே ஶேஷம், இதிலொரு ஸம்ஶயமில்லையென்கிறார். ॥௰॥

(ஆதுமில்லை) ஆத்மாத்மீயங்களெல்லாம் அவனுக்கே ஶேஷமென்று துணிந்திருந்த சடகோபன் தாதுசேர் தோட்கண்ணனைச்சொன்ன நிரவத்யமாய் கல்யாணமான இத்திருவாய்மொழியை ஓதவல்ல மஹாத்மாக்கள் நம்க்குபண்டே ஸ்வாமிகளென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ— வெளியிடுகிறாரென்று ஸங்கதி ஸூசிதை. நும்மதாதும் இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களுக்காக ஸம்பாதிக்கப்படுகிறவையும் நீங்களுமித்யாதியால்) எண்ணவேண்டா என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதிலித்யாதியால்) ॥௰॥

✳ நிகமனம். ✳

ஆத்யவாக்யத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆத்மேத்யாதியால்) ஶேஷம் ஸ்பஷ்டம். ॥௧௧॥

ப— மாயிருப்பதொன்றில்லையென்றபடி. எண்ணவேண்டா- சிந்திக்கவேண்டாம், இதில் ஒரு ஸம்ஶயமில்லையென்றபடி. ॥௰॥

அவனில்- அந்த க்ருஷ்ணனில்காட்டில், மற்று- வேறுபட்டது, யாதுமில்லையென்று- ஒன்றுமில்லையென்று, நம்முடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் அப்ருதக்ஸித்த விஶேஷணதயா அவனுக்கே ஶேஷபூதங்களால் லது ஸ்வநிஷ்டமாயிருப்பதொன்றுமில்லையென்றபடி. அதுவே- அந்த அர்த்தத்தையே, துணிந்து- அத்யவஸித்து, தாதுசேர்- தாதாலங்க்ருதமான, தாது- புஷ்பகேஸரமாய் தாதாவரம், தோள்கண்ணனை- பாஹுக்களையுடையவனான ஸ்ரீக்ருஷ்ணனை, குருகூர்ச்சடகோபன்சொன்ன- ஸ்பஷ்டம், தீதிலாத- அவத்யரஹிதமான, தீது அவத்யம், ஶப்தார்த்ததோஷரஹிதமானவென்றபடி. ஒண்- ஒள்ளியதான, பஹுகுணஶாலியானவென்றபடி. தமிழ்கள்- ஸர்வாதிகாரமாம்படி த்ராவிடரூபங்களான, இவைஆயிரத்துள்- இந்தபாட்டுக்களாயிரத்துக்குள்ளே, இப்பத்தும்- இந்தபத்துப்பாட்டையும், ஓதவல்ல- அத்யயநம்பண்ணவல்லவர்களான, பிராக்கள்- உபகாரகரானவர்கள், "[illegible]" என்னுமாப்போலே தமக்குபகாரகரென்றபடி. பண்டே- இது ஓதுகிறதற்குமுன்னமே, அத்யயநாத்பூர்வமான ஶரீரஸம்பந்தம் வந்தகாலம்தொடங்கியென்றபடி. நம்மை யாளுடையார்கள்- நம்மைத்தங்களுக்கு தாஸராகவுடையவர்கள், நமக்குநாயகரென்றபடி. அல்லேனென்றுதே பால்குடிக்கவேணுமென்று ஶிஶுவைத் தாய்கொண்டாடுமாப்போலே கொண்டாடுகிறபடி. ॥௧௧॥

✳ ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஶேவதிஶ்ரீவேதவ்யாஸராமாநுஜமஹாதேஶிகாய நம:. ✳

ஸ்ரீ:

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:

(கொண்டபெண்டிர்.)

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥[illegible]॥

([illegible]) எண்டிசையுங் கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான- ப்ரளயாபத்திலே

ஸ்ரூ—தா— எல்லாலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து அத்தாலே மிகவும் கொண்டாடப்படுகையாலும், (ப்ரத்யயஜநநாத்) 'கணையொன்றாலே யேழ்மராமெய்த வெங்கார்முகிலே'- சக்ரவர்த்தித்திருமகனாய் ஒருதிருச்சரத்தாலே ஸப்தஸாலங்களையும்பேதித்து "ஶங்கிதஶ்சாஸ்மி" என்றிருந்த ஸுக்ரீவருக்கு 'ஜநயந் ப்ரத்யயம் ததா' என்கிறபடியே ப்ரத்யயத்தை யுண்டாக்குகையாலும், (தைத்யநாஶாய மதுராஜாத ஜாதவாந் உத்தரஸ்யாம் ஸாஸ்திரிகீதோபாஸநாஸந்தாயாம் யஶோதாயா:) மருள்கொள்செய்கை அசுரர்மங்க வடமதுரைப்பிறந்தார்க்கருள்கொளாளாயுய்யிலல்லால்- அஸுரநாஶகராதுர்ஸூர நிரவதிகமாகத் தன்வாத்ஸல்யத்தாலே வடமதுரையிலே க்ருஷ்ணனாய்வந்தவதரிக்கையாலும, மேலில்பாட்டுக்கள்தோறும் 'வடமதுரைப்பிறந்தவன் வண்புகழேசரணென்றுய்ய' 'அதிர்கொள்செய்கை யசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு' 'மல்லைமூதூர் வடமதுரைப்பிறந்தவன் வண்புகழேசொல்லியுய்ய' 'பெற்றதாயன் வடமதுரைப்பிறந்தான்' 'வாழ்துணையா வடமதுரைப்பிறந்தவன்' 'மாதுகிலின் கொடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த' 'மண்ணின்பாரம்நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்' என்று விரோதிநிரஸநார்த்தமாக வடமதுரையிலே வந்தவதரித்தருளினதையே ப்ரஶம்ஸிக்கையாலே இவைத்தாலேதானே ஸநகாதிகளும் ஸர்வஸ்வதங்களாயிற்றென்று திருவுள்ளம். இப்படி ஸர்வஜநங்களுக்கும் ஶரண்யனான க்ருஷ்ணனுடைய திருவடிகளை ஆஶ்ரயித்தாலொழிய 'ஸம்ரக்ஷணைஸ்யஸந்த்யஸ்ய கோப்தா ஶரண்யரக்ஷிணே' என்னும்படியிருக்கிற ஸம்ஸாரிசேதநனுக்கு வேறுஸஹாயமும் ரக்ஷகமுமில்லையென்று ப்ரமேயமான அர்த்தத்தை 'கொண்டபெண்டிர்' என்றுபதேசத்திலே காரிஸூநு அருளிச்செய்தருளினாரென்கிறார். ॥க௦.௲॥

"ஸ்ருவக்ஷஸ்வ்ருஷ்ணிஸ்ய" என்று ஒன்பதிறைபிரத்தில் வரும். 'தேவகீஜாதஶங்கராயாம்' என்று திலர்வாக்கும், திருதேவகீக்கு தேவகீஎன்றும் திருநாமம் உண்டாயிருக்கதிறே; திருவவதாரத்திற்கு ப்ரயோஜநம் ஸாதுபரித்ராணாதி த்ரயமுமாயிருக்கச்செய்தேயும் ஒவ்வொன்றிலே நோக்காயிருக்குமாப்போலே இங்கும் 'அசுரர்மங்க' விதூஷியாலேசொன்ன திருவவதாரத்துக்கும் தாத்பர்யங்கொள்ளுகையுசிதம். ஜாதவாந்- பிறந்தவன், ஜநனதான், 'ஸம்பவாமி' என்று பிறக்கையாலும், தைத்யநாஶாயஜாதவாந்- அசுரர்மூதூர்பிறந்தவன், ஸர்வநாஶஹேதுவில் வந்துபிறக்கையாலும், தைத்யநாஶாயஜாதவாந்- அசுரர் மூதூர்பிறந்தவன், ஸந்தாநஸம்ஹிதியில் வந்துபிறக்கையாலும், உத்தரஸ்யாம்ஸாஸ்திரிஜாதவாந்- வடமதுரை, ஸப்தமோக்ஷதமங்க, மோக்ஷப்ரதாயகமாகப் பிறந்தருளுகையாலும், தேவராஜஸ்ஸந்தாயாம்ஜாதவாந்- திருநாமமே ஹேமஸாரக்ஷேத்ரங்களிலொன்றில் பிறந்தருளுகையாலும், யஶோதா- வாழ்துணையா, நிரவதிகமான தன்க்ருபையாலே ஸுவமானஇடத்தில் பிறந்தருளுகையாலும், யஶோதா- பெற்றதாயன் உபலாலநம்பண்ணின ஆதாபோலே பரியுமவளுகையாலே. தரிக்கையாலும், வம்ஶோ:- பெற்றதாயன் உபலாலநம்பண்ணின ஆதாபோலே பரியுமவளுகையாலே. ஸ்ரீயாநவம்ஶவாகையாலும், க்ருஷ்ணஸ்ய- கண்ணன், ஸஸ்யுதைபிருக்கையாலும், என்று பொருள்கொள்ளவடுக்குமென்று நம் ஆசார்யர்கள் அருளிச்செய்வர்கள்.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் முதத்திருவாய்மொழிமுற்றிற்று.

# முதற்றிருவாய்மொழிமுற்றிற்று.



# இரண்டாந்திருவாய்மொழி.

மூ—பண்டைநாளாலேநின்றிருவருளும்பங்கயத்தாட்டிருவருளுங்* கொண்டுநின்கோயில்சீய்த்துப்பல்படிகாற்
குடிகுடிவழிவந்தாட்செய்யுந்* தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்றாமரைக்கண்களானோக்காய்*.

ஆ— (பண்டைநாளாலே) இப்படியெம்பெருமானுடைய உறவுடைமையை அநுஸந்தித்து இவ்வுறவுடையவனானவனோடே கலந்துபரிமாறவேணுமென்று மநோரதித்துக்கொண்டு திருப்புளிங்குடியிலே போய்ப்புக்கு, அவ்விடத்தில் தன்திறத்து ஸாமாந்யகடாக்ஷமல்லது, வேறொருவிஶேஷகடாக்ஷம் பண்ணியருளக்காணாமையாலே சாலவின்னாதாராய் என்னை உன்னழகியதிருக்கண்களாலே நோக்கியருளவேணும், திருவடிகளைத் தலையிலேவைத்தருளவேணும், திருப்பள்ளியுணர்ந்து பிராட்டியோடுகூட இருந்தருளவேணும், எழுந்திருந்

## இரண்டாந்திருவாய்மொழி.

இ— இருத்தும்வியந்திலேபெற்ற ஸர்வேஶ்வரஸம்ஶ்லேஷத்திற்கு விச்சேதமின்றிக்கே அத்தாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷத்தாலே நெடுமாற்கடிமையிலே ஶேஷவ்ருத்திகாமராய் அந்தப்ரீதியுள்ளடங்காமையாலே கொண்டபெண்டிரிலே ஸம்ஸாரோபதேஶம்பண்ணி இப்படி உத்தரோத்தரமாகஸந்துஷ்டராயிருக்கிற ஆழ்வார் விஶ்லேஷதஶையில்போலே இத்திருவாய்மொழியிலே 'கண்களால்நோக்காய்' என்றும் 'நின்பாதபங்கயமே தலைக்கணியாய்' என்றும் இப்புடைகளிலே அலற்றுகை ஸம்பந்தமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (இப்படியீத்ருஶியால்) உறவுடைமை- ஸம்பந்தமுடையவனாயிருக்கை, கலந்துபரிமாறவேணுமென்றது- ஸர்வவிதாநுபவங்களான ஸாக்ஷாத்ஸம்ஶ்லேஷம்பண்ணி வ்யாபரிக்கவேணுமென்றபடி. கீழ்த்திருவாய்மொழியிலே அவனுடைய ஸர்வவிதபந்துத்வத்தை அநுஸந்தித்தவாறே இவருக்கிப்படி ஸங்கம் இப்போது பிறந்ததென்றுகருத்து. ஸ்வபாவமென்றறிந்தாலிப்படி செய்தாலல்லது தரித்திருக்கமுடியாதிறே, இங்கு ஸாமாந்யகடாக்ஷமாவது- ஸம்ஸாரிகளெல்லார்பக்கலிலும் ஸர்வஸாதாரணமாக ரக்ஷணாதிகளன்றிக்கே ஸத்தாமாத்ரம் செய்தருளுகை, விஶேஷகடாக்ஷமாவது- தாமபேக்ஷித்தபடியே ரக்ஷணாதிகளெல்லாம் செய்தருளுகை; சாலவென்றது- மிகவுமென்றபடி. இன்னாதாராய்என்றது- நிர்விண்ணராயென்றபடி. மநோரதங்களையுடையவென்றது- மநோரதங்களெல்லாவற்றையுமென்றபடி. *

## முதற்பாட்டு.

நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுமென்று பாட்டிலே ஸமஸ்தமாயிருந்தாலும் ஸுகஸம்ஸ்மரண

ப— தெண்டிரை- தெளிந்ததிரைகளையுடைத்தான, திரை- தரங்கம், தெண்டிரையென்கிறவிடத்தில் ணகாரஸ்தாநே டகாரஸ்தாநாதேஶம், விஶததரங்கஶாலியானவென்றபடி. திருமேனியின் ஸௌகுமார்யத்துக்கநுகுணமாக ஜலஸம்ருத்தியையுடையதானவென்றபடி. பொருநல்- தாம்ரபர்ணியினுடைய, தாம்ரபர்ணியோடு சேர்ந்ததானவென்றபடி. தண்பணை- குளிர்ந்தநீர்நிலங்களாலே, பணை- நீர்நிலம், சூழ்ந்த- பரிவ்ருதமான, திருப்புளிங்குடி- திருப்புளிங்குடியென்கிற திவ்யதேஶத்திலே, கிடந்தானே- கண்வளர்ந்தருளுகிறவனே, விபவஸந்நிதிகளெல்லாம் கடந்தநேகஜந்துக்களோடு நீ நிர்வாஹிகஸமர்த்தனாய பக்தஸம்ஸாரத்திலேயிறே என்ஸந்நிதானத்திலேவந்து கண்வளர்ந்தருளி யுன்னழகையெனக்குக்காட்டிற்று, அப்படியேயின்னமும் நானபேக்ஷிக்கிறதெல்லாம் செய்தருளவேணுமென்றுகருத்து. நின்திருவருளும்- நித்யஸம்பந்தனான வுன்னுடைய க்ருபையையும், பங்கயத்தாள்திருவருளும்- பங்கஜவாஸிநியினுடைய க்ருபையையும் உன்னுடையக்ருபைக்கும் நிதாநமான பெரியபிராட்டியார் க்ருபையையுமென்றபடி. உன்ஸந்நிதியினுடைய க்ருபைக்கு விஷயமான என்னை நீ உபேக்ஷிக்கை உசிதமோவென்றுகருத்து. பண்டைநாளாலேகொண்டு- ப்ராசீநகாலத்திலேபெற்று, பண்டை- ப்ராசீநம், நாளாலேயென்று ஸப்தம்யர்த்தே த்ருதீயா, முன்பு நெடுநாளேதுடங்கியென்றபடி, நெடுநாள்க்ருபைபண்ணி ஸம்ஸாரத்திலே கைவிடலாமோபிரானே என்றுகருத்து. நின்கோயில்- உன்னுடைய திவ்யாயதநத்திலே, சீய்த்து- ஸம்மார்ஜநமுதலான கைங்கர்யம் பண்ணி, சீய்க்கை- ஸம்மார்ஜநம்பண்ணுகை, இது உபலக்ஷணம், உசிதகைங்கர்யங்களைப்பண்ணியென்றபடி. பல்படிகால்- ஸமஸ்தப்ரகாரமாக, ஸந்தாநபரம்பரையாகவென்றபடி, குடிகுடி- குடிகுடியாக,

மூ— தெண்டிரைப்பொருநற்றண்பணை சூழ்ந்ததிருப்புளிங்குடிக்கிடந்தானே* ||க||
குடிக்கிடந்தாக்கஞ்செய்துநின்தீர்த்தவடிமைக்குற்றேவல்செய்துன்பொன்* னடிக்கடவாதேவழிவருகின்ற

---

ஆ— தென்னெதிரே வந்தருளவேணும், என்றிப்படிகளிலே தம்முடைய ப்ரார்த்தனைகளையபேக்ஷிக்கிறார். பிராட்டி ஸந்நிதமாகையாலே பண்டேயுன்னாலே விஷயீக்ருதராய் ஸர்வவிதகைங்கர்யங்களிலும் அந்வித ராய் என்றுங்குடியாக வடிமைசெய்துவர்த்திக்கிற வடியோங்களுக்கருளி சோதிவாய்திறந்து உன்தாமரைக்கண்களால்நோக்காய், தெளிந்ததிரையையுடைய திருப்பொருநலோடுகூடின அழகியநீர்நிலஞ்சூழ்ந்த திருப்புளிங்குடியிலேவந்து கண்வளர்ந்தருளினவனே? யென்றுப்ரார்த்திக்கிறார். ||க||

(குடிக்கிடந்து) ஸகலஸம்பந்தியோஜநராய்க்கொண்டுஉனக்கனாரதமான வடிமைசெய்துஉன்திரு

---

இ— த்தாலும் ப்ரகரணவசத்தாலும் பங்கயத்தாள்திருவருளுமென்றது ஸம்பந்தத்தைக்குங்கூட ஸஹகாரிதைந விவக்ஷிதமென்றுகாட்டுகிறார் (பிராட்டியித்யாதியால்) பிராட்டிக்கு ஸம்பந்தமில்லாமையாலும் ஸா த்ருஶப்ரயோக வாத்ஸல்யாதிஶயத்தாலும் வெதநர்பக்கல் ஜ்ஞாநாகாரஸம்பந்தத்திலே அவளுடையகடா க்ஷம் ப்ரயோஜநவியாய் ‘தஸ்மிந்தவாஸ்யபிநாவியத்தவிஶ’ என்கிறபடியே ஸ்நாநாநுஸந்தாந அவனு டையகடாக்ஷம் ஸநஸ்ரவியாயிருக்குமென்றுகருத்து. இத்திருவாய்மொழியி னுவக்ரமமான முதற்பா ட்டில் பண்டேயுன்னாலே விஷயீக்ருதரென்கையாலே விரக்தஷயமென்கிற ஸமாஸநாமம் இத்திருவாய் மொழிக்குப் ப்ரகிவாத்யமென்றதாயிற்று. நின்கோயில்சீய்த்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வவிதேத்யாதியால்) ஶேஷம் ஸ்பஷ்டம். ||க||

✱ இரண்டாம்பாட்டு. ✱

குடிக்கிடந்தாக்கஞ்செய்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலஸம்பந்தீத்யாதியால்) குற்றேவ ல்என்கிறதையுரைக்கிறார் (உனக்கனாரதமித்யாதியால்) உன்பொன்னடிக்கடவாதே என்கிறதற்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உன்திருவடிகளித்யாதியால) படிக்களவாக நிமிர்த்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செ

---

ஶ— வாத்ஸல்யத்ருஷ்டமாகவென்றபடி. வழிவந்து- ஶாஸ்த்ரமர்யாதையிலேவந்து, ஶாஸ்த்ரமர்யாதையும் தப்பா தபடி தஸிஷ்டராய்என்றபடி. ஆட்செய்யும்- அடிமைசெய்யாநிற்கிற, தொண்டரோர்க்கு- ஶேஷபூதரான வெங்களுக்கு, தம்மநுபந்திகளையுங்கூட்டிக்கொண்டு சொல்லுகிறபடி. இப்படி அடிதுடங்கி உனக்கேகுடி களாகையாலே ஸநந்யப்ரயோஜநர்களான அடியோங்களுக்கென்றபடி. அருளி- க்ருபைபண்ணி, சோதிவாய் திறந்து- உஜ்ஜ்வலமானதிருப்பவளம் திறந்து, விகாஸம்போலே ஸ்ப்ருஹணீயமான திருப்பவளத்தைத்திறந்து ஒருவா ர்த்தை அருளிச்செய்தென்றபடி. வார்த்தை அருளிச்செய்யும்போதுள்ள திருப்பவளத்தினழகைக் காணவே ணுமென்றுகருத்தாலே சோதிவாய்திறந்தென்றிவ்வளவே அருளிச்செய்தது. உன்தாமரைக்கண்களால்- என் னுடைய தாபஶமம்போலே ஶ்ரமஹரமான ஶீதளங்களான உன்னுடையவிஶாலநயநங்களாலே, நோக்கா ய்- கடாக்ஷித்தருளவேணும். ||உ||

கொடிக்கொள்- கொடிகளைக்கொண்டிருக்கிற, கொடி- த்வஜம், த்வஜங்களையுடைத்தான வென்றபடி. பொ ன்மதிள்- கநகமய ப்ராகாரத்தாலே, சூழ்- வரிவ்ருதமான, இதுபுளிங்குடிக்கு விஶேஷணம். குளிர்வயல் சோலை- குளிர்ந்தவயல்களையும் உத்யாநங்களையும் உடைத்தான, திருப்புளிங்குடிக்கிடந்தானே- திருப்புளிங் குடி திவ்யதேஶத்திலே ஸ்ரீதநாஹ்வாநமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே, இது ஸம்போதநம். குடி க்கிடந்து- குடியிலேகிடந்து, ஶேஷத்வபாரதந்த்ர்யங்கள் தப்பாதேநின்று என்றபடி. ஆக்கஞ்செய்து- ஸம்ருத் தியைப்பண்ணி, ஆக்கம்- வ்ருத்தி, அந்த ஶேஷத்வாநுஸந்தாநமாக பஹுவித கைங்கர்யங்களை ப்பண்ணியென்றபடி. தீர்த்த- நின் அடிமையென்று சுவைப்பது. தீர்த்த- நிஷ்கர்ஷமான, பாவநமானவென் றபடி. தன்னுடைய ஸ்வரூபத்தையாலே உதாரவாஸநாத்மகமான ஸாமதிவசமான வென்றபடி. நின்னடிமை- உன்னுடைய கைங்கர்யங்களிலே, குற்றேவல்செய்து- அந்தரங்க கைங்கர்யங்களைச்செய்து, உன்பொன் னடி- உன்னுடைய ஸ்ப்ருஹணீயமானதிருவடிகளை, கடவாதே- அதிக்ரமியாமல், உன்திருவடிகளல்லது வே றொருவாஸநாத்மகத்தை அறியாதேயென்றபடி. வழிவருகின்ற- அடிமைமுறைதப்பாதேநடக்கிற, வழுவு

மூ—வடியரோர்க்கருளிநீயொருநாட்* படிக்களவாகநிமிர்த்தநின்பாதபங்கயமேதலைக்கணியாய்* கொடிக்கொள் பொன்மதிள்சூழ்குளிர்வயற்சோலைத்திருப்புளிங்குடிக்கிடந்தானே* ॥௨॥
கிடந்தநாள்கிடந்தாயெத்தனைகாலங்கிடத்தியுன்திருவுடம்பசையத்* தொடர்ந்துகுற்றேவல்செய்துதொல்லடிமைவழிவருந்தொண்டரோர்க்கருளித்* தடங்கொடாமரைக்கண்விழித்துநீயெழுந்துன்றாமரைமங்கையுநீ பு*

---

ஆ—வடிகளல்லதறியாதே ஸர்வஶேஷபூதராயிருக்கிற அடியோமுக்குக்ருபைபண்ணி ஸம்ஸாரிகளுக்கும் ஸாதாரணமான நின்பாதபங்கயமே ஒருநாள் தலைக்கணியாய், கொடிக்கொள்பொன்மதிள்சூழ் குளிர்வயல்சேர் சோலைத் திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளினவனே யென்கிறார். ॥௨॥
(கிடந்தநாள்) இங்ஙனே ஒருபடியே கண்வளர்ந்தருளுகிறபிரானே உன் திருவுடம்புநோவாதோ, உன் திரு

---

இ—ப்கிறார் (ஸம்ஸாரிகள் தொடக்கமாக இத்யாதியால்) தலைக்கணியாயென்கிறவித்தாலே கீழ்ப்பாட்டிலே என்னைக்கடாக்ஷித்தருள வேணுமென்றவர் இப்பாட்டில் உன்திருவடிகளை யென்தலையில் வைத்தருளவேணு மென்கிறாரென்று ஸம்ஶயிக்க ஹேதுவில்லை. ॥௨॥

*மூன்றாம்பாட்டு.*

கிடந்தநாள்கிடந்தாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்ஙனேயித்யாதியால்) பிரானேயென் றுஸம்போதநமாக நிர்தேஶித்ததினாலே திருப்புளிங்குடிக்கிடந்தானே என்றதும் ஸம்போதநம். எத்தனை காலமித்யாதிக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன் திருவுடம்புநோவாதோ என்று) இதற்குள்ளும் திருந்துஐ த்யாதி

---

ஈ__ஸர்வஶேஷமாய்நடக்கிறவென்றபடி. அடியரோர்க்கு- அடியரானவெங்களுக்கு, இப்படி உன் னையொழிய நாயகனில்லாதவெங்களுக்கென்றபடி. அருளி- க்ருபைபண்ணி, நீ- ஸர்வஶக்தியுக்தனானநீ, படிக்கு- பூமிக்கு, படி- பூமி, அளவாக- ஸத்ருஶமாக, நிமிர்த்த- உஜ்ஜ்ரும்பித்த, த்ரிவிக்ரமாவதாரத்திலே பூமியெல்லாம் வ்யாப்தமாகும்படி விஸ்த்ருதமாக்கப்பட்டவென்றபடி. ஸம்ஸாரிகளுக்கும் ஸாதாரணமானவென்கை. நின்பாதபங்கயமே- உன்னுடைய பாதபங்கஜத்தையே, ஒருநாள்- ஒருநாளாகிலும், த்ருஷ்டாந்தத்தால் நாக்குநனைக்கவேணுமென்னுமாப்போலே சொல்லுகிறபடி. தலைக்கு- என்னுடையஶிரஸ்ஸுக்கு, அணியாய்- அலங்காரமாக்கியருளவேணும். ॥௨॥
திருப்புளிங்குடிக்கிடந்தானே- ஆஶ்ரிதர்க்காக திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே, இப் படியே ஆஶ்ரிதர்க்கு மற்றுமுள்ள அபேக்ஷிதங்களைச்செய்தருள வேண்டாவோ என்றுகருத்து. கிடந்தநாள்கிட ந்தாய்- நீகண்வளர்ந்தருளுகிற அழகைக்காண ஆசைப்பட்ட ஆஶ்ரிதர்க்காகக் கண்வளர்ந்தருளுகிறநாளெல்லாம் இங்ஙனேஒருபடியே கண்வளர்ந்தருளினாய், உன்திருவுடம்பு- அதிஸுகுமாரமான உன்திருமேனியானது, அசைய- அசையும்படி, அசைவு- நோவு, ஒருபடியே கண்வளர்ந்தருளுகையாலே வ்யதிதமாம்படியென்கை. எத்தனைகாலங்கிடத்தி- இன்னும் எத்தனைகாலம் கண்வளர்ந்தருளக்கடவை, நீஎல்லாம் ஆஶ்ரிதர்க்காகச்செய் யுமவனாகையாலே இனி கண்வளர்ந்தருளுகையை எனக்காகத் தவிரவேணுமென்றுகருத்து. தொடர்ந்து- அ நுஸரித்து, 'யதா யாவா நராஜாநம் யதாவத்ஸஹஸித்தநம்' என்கிறபடியே தத்வஸரங்களிலே ஸாமநைந தாநுக்ருதாஸக்ய' 'அலங்காரஸநம்ஹஸ்த்யதிஷ்டநிவேத்யாநம்நைவேத்யம் ஸ்வீகர யஶ்ரியஸே வேத" என்னுப்போலே உன்னைப்ரார்த்தித்து அநுபவனுக்கிக்கொண்டென்றபடி. குற்றேவல்செய்து- அந் தரங்கைங்கர்யங்களைப்பண்ணி, தொல்- அநாதியான, அடிமை- ஶேஷத்வத்தினுடைய, வழி- மார்க்கத்திலே, தத்வவிதவ்ருத்தியிலேயென்றபடி. வரும்- வராநிற்கிற, தொண்டரோர்க்கு- உபாஸகரான வெங்களுக்கு, இப்படிஉனக்கே அடிமையாகையாலே அநந்யர்களான வெங்களுக்கென்றபடி. இம்மூன்றுபாட்டிலும் தா மடிமைசெய்கிறோமென்று ஸ்வாபிப்ராயம்சொன்னபடியன்று, ஒருவனுக்கு அடிமையாயிருந்தவனை வேறொரு வர்ரக்ஷியாரென்று தம்முடைய அநந்யார்ஹத்வம் ப்ரகாஶிப்பிக்கைக்காகச்சொன்னபடி. அருளி- க்ருபைபண் ணி, தடங்கொள்- விஸ்தாரத்தைக் ஸ்வீகரித்துக்கொண்டிருக்கிற, தடம்- விஸ்தாரம், கொள்ளுகை- ஸ்வீ கரிக்கை, அதிவிஸ்தாரமானவென்றபடி. தாமரைக்கண்- தாமரைபோலேயிருக்கிற திருக்கண்கள், விழித்து- அவ்வழகுகளையெல்லாம் நாங்கள்கண்டநுபவிக்கும்படி திறந்தருளி, நீ- ஸர்வஸ்வாமியான நீ, எழுந்து- ஶேஷஶயநத்தில்நின்றும் உத்திதனாய், உன்தாமரைமங்கையும்நீயும் உனக்கு அநுரூபையான

மூ—மிடங்கொண்மூவுலகுந்தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக்கிடந்தானே* ॥௩॥
புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து வைகுந்தத்துணின்று* தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே
யென்னையாள்வாயெனக்கருளி* நளிர்ந்தசீருலகமூன்றுடன்வியப்பநாங்கள்கூத்தாடிநின்றார்ப்பப்*

---

ஆ—வுடம்புநோவாதே உன்னடியேனை யெனக்காகநீயொருநாள் தாமரைத்தடாகம்மலர்ந்தாப்போலே திருக்கண்களைவிழித்து எழுந்திருந்து உன் தாமரைமங்கையும் நீயும் இந்தலோகமெல்லாம் வாழும்படி இருந்தருளா யென்கிறார். ॥௩॥

(புளிங்குடி) உன்னுடையகாருண்யத்தினாலே எனக்காகப் புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள்நின்று தெளிந்தவென்சிந்தை யகங்கழியாதே யென்னை யடிமைகொண்டருளினாப்போலே இன்னமும் உன்னுடைய வஶீகாருண்யத்தினாலே சோதிவாய்திறந்து தாமரைக்கண்களாலேநோக்கித் திருவடிகளையென் தலையிலேவைத்தருளிப் பிராட்டியோடேகூட இருந்தருளி ஆழ்வாரபேக்ஷிதத்தைச் செய்தருளினானென்று இந்த கல்யாணகுணத்தைக்கண்டு லோகமெல்லாம் விஸ்மயப்பட நாங்கள்கூத்தாடிநின்றாரவாரப்பட

---

இ— யோடேபகயம். அதீதவாக்யத்தை ஸங்க்ரஹிக்கிறார் (உன்னடியேனித்யாதியால்) தம்மைத்தவம்யுகளையுங்கூட்டி தொண்டரோர்க்குஎன்று பஹுவசநமாயிருந்ததேயாகிலும் தாமேஸாத்யநேருந விவக்ஷிதரென்னும்கருத்தாலே அடியேனை எனக்கென்று ஏகவசநமாக நிர்த்தேசித்தது. யதா— கீழ்ப்பாட்டுக்களிற்போலே இப்பாட்டில் குடியை நிர்த்தேசியாமையாலே தொண்டரோர்க்கென்றது ஸாத்விக பஹுவசநமென்று கருத்தாகவுமாம். ஶேஷம் ஸ்பஷ்டம். (தாமரைமங்கையும்நீயும்) இத்யாதியாலே கீழ்ப்பாட்டிலே உன்திருவடிகளைத் தலைக்கணியாயென்றவர் இப்பாட்டிலே பிராட்டியும்நீயு மிருந்தருளுமழகைக் காணவேணுமென்கிறாரென்று ஸம்மதிஸூசிகை. ௩

✳ நாலாம்பாட்டு. ✳

வாக்யார்த்தத்தில் விஶேஷணங்கள் ஸப்ரயோஜனங்களாகைக்காக இது த்ருஷ்டாந்தமென்கிறார் (அருளினாப்போலேஎன்று) எனக்கருளிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்னமுமித்யாதியால்) நளிர்ந்தசீரென்கிறதற்கு ஸ்வரூபகாதநகுணமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சோதிவாயித்யாதிகுண நளிர்ந்தசீரென்கிறதற்கு) ... (லோகத்தையென்னுமளவாலே) உலகம்மூன்றுடன் வியப்பவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (லோக

---

ப—யான உத்வாஸிநியும்நீயுமாக, மங்கை- யுவதி, கீழே 'நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்' மென்றிருவருக்கும் ஸம்ஶ்லிஷ்டவைஷண உபாயத்வஞ்சொல்லிற்று. இங்கிருவருக்கும் ப்ராப்யத்வஞ்சொல்லுகிறது. இடங்கொள்- இடத்தைக்கொண்டிருக்கிற, விஸ்தீர்ணமானவென்றபடி. மூவுலகும்- த்ரிலோகமும், த்ரைலோக்யஜநங்களெல்லாருமென்றபடி. தொழ- உங்களைஸேவித்துவாழும்படி, இருந்தருளாய்- "தம்வைஶ்ரவண ஸகாஶஸௌவிஷ்டம் ஸம்ஸ்க்ருதம்" என்கிறபடியே திவ்யாஸிகையாக இருந்தருளவேணும். ॥௩॥

புளிங்குடிக்கிடந்து- எனக்காகத் திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளி, வரகுணமங்கை இருந்து- வரகுணமங்கை என்கிற திவ்யதேஶத்திலே திவ்யாஸிகைசெய்தருளி, வைகுந்தத்துள்நின்று- ஸ்ரீவைகுண்டமென்கிற ஸ்தலத்தில் நின்றருளி, தெளிந்த- நான் அநந்யனென்றகலாதே கண்கள்சிவந்திலே ஸாதயயாத்ரத்தைக்கண்டு தேறினவனை, என்சிந்தையகம்- என்னுடைய ஹ்ருதயாகாஶப்ரதேஶத்தை, சிந்தை- ஹ்ருதயம், அகம்- உள், கழியாதே- விட்டுப்போகாதே, என்னையாள்வாய்- என்னையடிமைகொண்டருளுகிறவனே, இது ஸம்போதநம், எனக்கருளி- இப்படிபோலே இன்னமும் எனக்காகக்க்ருபைபண்ணி, நளிர்ந்த- ஶீதமான, ஜநாஶ்ரயித்தார் ஹ்ருதயம்குளிரும்படியான வென்றபடி. சீர்- உன்னுடைய கல்யாணகுணங்களை, என்பக்கல் உனக்குள்ள ஔதார்யஸௌஶீல்யாதிகளை யென்றபடி. உலகம்மூன்று- லோகத்ரயமும், விஶேஷஜ்ஞரோடு விஶேஷஜ்ஞரல்லாதாரோடு வாசியற எல்லாருமென்றபடி. உடன்- கூட, ஏககண்டராயென்றபடி. வியப்ப- விஸ்மயப்படும்படியாக, நாங்கள்- உன்னுடையழகைக்காண ஆசைப்படுகிறநாங்கள், கூத்தாடி- நீநடந்தெழுந்தருளுகிற அழகைக்கண்ட ஹர்ஷப்ரகர்ஷத்தாலே நர்த்தநம்பண்ணி, நின்று- ஸ்திரமாய், ஸவிஸ்மயமாயென்றபடி. ஆர்ப்ப- ஆரவாரம்பண்ணும்படியாக, இதுக்கு வாராயென்கிறதோடே அந்வயம்.

மூ— பளிங்குநீர்முகிலின்பவளம்போற்கனிவாய்சிவப்பநீகாணவாராயே* ||ச||

பவளம்போற்கனிவாய்சிவப்பநீகாணவந்துநின்பன்னிலாமுத்தந்* தவழ்கதிர்முறுவல்செய்துநின்திருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்* பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநற் றண்டிருப்புளிங்குடிக்கிடந்தாய்* கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே* ||ரு||

ஆ— நிறமழகிதான ஜலதத்திலேயுண்டான பவளம்போலே அழகியதிருப்பவளத்தில சிவப்பேறிப்போம்படி காணலாம்படி நீவரவேணுமென்கிறார். (ச)

(பவளம்போல்) வருமிடத்தில் ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்காகப் பெரியதிருவடிமேலேறி வந்தருளினாப்போலே

இ— மித்யாதியால்) காணலாம்படியித்யாதியாலே கீழ்ப்பாட்டிலே திவ்யாவயவசோபையைக் காணவேணுமென்றவரிப்பாட்டிலே 'ஜகாதகமநாதிநா' என்னும்படியான நடையழகைக் காணவேணுமென்கிறாரென்று ஸங்கதி ஸூசிதை. ||ச||

## ஐந்தாம்பாட்டு.

தர்சீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீகஜேந்த்ராதியால்) இத்தால் கீழ்ப்பாட்டில்

ஈ— பளிங்குநீர்- ஸ்படிகம்போலே சுத்தோதகத்தையுடைத்தான, பளிங்கு- ஸ்படிகம், சுத்தோதகத்தைப்பானம்பண்ணி அத்தாலே ஸ்வச்சநீலவர்ணமானவென்றபடி. முகிலின்- ஜலதத்தினுடைய, பவளம்போல்- ப்ரவாளம்போலே, ஸமுத்ரவாஸபத்தில் ஸமுத்ரஜலத்தோடே ஸேவாநிர்விசேஷமாயிருந்து ஜலதத்தின் பஹிர்ப்ரதேசத்திலே படர்ந்ததொரு நவவித்ருமம்போலேயென்றபடி. கனிவாய்- கனிந்தவாயானது, ஸ்நிக்தகோமளமான உன்னுடைய திவ்யாதரமானதென்றபடி. சிவப்ப- சிவக்கும்படி, எங்களுடைய ஸம்ச்லேஷங்களைக்கண்டு ஸ்மயமானமாகையாலே மிகவும் ஆருண்யம்தோற்றும்படியென்கை. காண- நாங்கள்காணும்படி, நீவாராயே- நீநடந்தருளவேணும். [ச]

நன்பவளமென்று அந்வயிப்பது. ச்லாக்யங்களான வித்ருமலதைகளினுடைய, படர்க்கீழ்- தூறுகளின்கீழே, படர்- தூறு, சங்கு- சங்கங்களானவை, உறை- வஸிக்கும்படியான, பொருநல்- தாம்ரபர்ணியையுடைத்தான, நீயிருக்கிறவூரில் சங்குகளெல்லாம் பவளக்கொடிகளைச்சேர்ந்து வாஸியாநிற்க; நான் உன்னுடைய திவ்யாதரமாகிற ப்ரவாளத்தைக்காணவும் பெறுதொழியலாமோ பிரானே? என்றுகருத்து. திருப்புளிங்குடிக்கிடந்தாய்- திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே, கவளமாகளிற்றின்- கபளக்ராஸியான மஹாகஜத்தினுடைய, களிறு- கஜம், கவளமாகளிறென்று த்ருடவதோவிவக்ஷா:. கபளக்ராஸநசீலமென்கையாலே இதற்குமுன் ஒருகாலத்திலும் க்லேசமறியாதே நித்யஸுகோசிதமானவென்றபடி. இடர்- து:க்கமானது, திவ்யவர்ஷஸஹஸ்ரக்ராஹபீடையாலுண்டான து:க்கமானதென்றபடி. கெட- நிவ்ருத்தமாகைக்காக, தடத்து- தடாகத்திலே, தடம்- தடாகம், அத்தயானையானது அகப்பட்டுக்கிடக்கிற மடுதடாகத்திலேயென்றபடி. இதுக்கு ஊர்ந்தானேயென்கிறதோடே அந்வயம். காய்சின- காயாநிற்கிறகோபத்தையுடையவனை, சினம்- கோபம், சத்ருவிஷயஜனிதக்ரோதனையென்றபடி. பறவை- பக்ஷியை, ஸ்ரீவைநதேயனையென்றபடி. ஊர்ந்தானே- நடத்தினவனே, "ஸாங்காரஸாமநாஸேவ்ய ப்ரஹதிஹிர பதிம்தாக்ஷ்யஸ்கந்தஸ்தவஸம்" என்கிறபடியே அவன்வேகம்போராதென்று தள்ளிநடத்திக்கொண்டு வந்தவனையென்றபடி. ஸம்போதனம், பவளம்போல்- ப்ரவாளம்போலே அருணமான, கனி- ஸ்நிக்தகோமளமான, வாய்- திவ்யாதரமானது, சிவப்ப- சிவக்கும்படி, என்னைக்காணப்பெற்றஹர்ஷத்தாலே அதிசயாருண்யமாம்படியென்கை. நீ- நிருபாதிகஸௌலப்யவானநீ, காண- நான் கண்ணாலேகாணும்படியாக, வந்து- என்முன்னே எழுந்தருளி, நின்பல்- உன்னுடையதந்தங்களாகிற, லகாரஸ்யநகாரோவா ணகாரஸ்யடகார:, நிலாமுத்தம்- ஜ்யோத்ஸ்நாஸாராமிகளான ரத்நஸமூஹங்களுடைய, விஸ்ப்ரஸ்ருதயவலகாந்திகளான முத்துக்களுடையவென்றபடி. கதிர்தவிழ்என்று அந்வயிப்பது. கதிர்- கிரணங்களானவை, தவிழ்- உள்ளடங்காமல் வெளியிலேதவிழும்படியாக, ஸ்மிதம் விவக்ஷிதமாகையாலே காந்திப்ரஸரணமும் ஸ்மிதமென்கைக்காக ஓடும்படியென்றாதே தவிழும்படியென்றது, முறுவல்செய்து- ஸ்மிதம்செய்தருளி, நின்திருக்கண்தாமரை- உன்னுடைய ஸ்ரீநயநாரவிந்தங்கள், கண்தாமரையென்கிறவிடத்தில் ணகாரசகாரஸ்ய தகாரஸ்ய டகா

மூ—காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல* மாசினமாலி மாலிமானென்றங்கவர் படக்கனன்று முன்னின்ற* காய்சினவேந்தே கதிர்முடியானே கலிவயல் திருப்புளிங்குடியாய்* காய்சினவாழி சங்குவாள்வில் தண்டேந்தி எம்மிடர்கடிவானே* ॥௯॥

ஆ—கனிவாய்சிவப்ப நீகாணவந்து நின்பன்னிலா முத்தம் தவழ்கதிர் முறுவல்செய்து நின் திருக்கண்தாமரை தயங்கநின்றருளாயென்கிறார். ॥௯॥

(காய்சினப்பறவையூர்ந்து) உம்முடைய இந்த சேஷ்டிதங்களுக்குப் ப்ரதிபந்தகங்களில்லையே, ஸஹஸா முடியுமோவென்னில்? என்னுடைய சேஷ்டிதங்களுக்கு ப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்காகவன்றோ ஶங்கசக்ரகதாஶார்ங்காதி திவ்யாயுதங்களை யேந்தியருளியிருக்கிறது. ஆனபின்பு பொன்மலையின்மீமிசைக்கார் முகில்போலக்காய்சினப்பறவையூர்ந்து மாலிஸுமாலிமால்யவதாதி ப்ரதிகூலநிரஸநம் பண்ணியருளினாப்

இ—நான்காணும்படிவரவேணுமென்றது- ஜ்ஞாநஸங்கோசத்தாலன்றிக்கே ஸ்ரீமத்கஜேந்த்ராழ்வானுக்குப் போலே பாஹ்யசக்ஷுஸ்ஸாலே காணும்படிவரவேணுமென்றபடி. உபாஸ்யஸ்தாவயோகநாதிகளோடேகூட நின்றருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறாரிப்பாட்டிலேயென்று ஸங்க்ஷேபித்தவிதை. ॥௯॥

* ஆறும்பாட்டு. *

அவன்நமக்கு நிருபாதிகபந்துவென்னுமவஸ்தியாலே அவனுடைய ஸௌந்தர்யாதிநாநாவித ஸௌந்தர்யங்களான ஸம்ஶ்லேஷநாவஸ்தாதிகளைப் பெறவேணுமென்றபேக்ஷிக்கிற ப்ரகாரத்திலே இப்பாட்டிலே அவனுடைய ஶௌர்யவீர்யத்தைவர்ணிக்கை ப்ரஸங்கமன்றோவென்ன வசனிப்பிக்கிறார் (உம்முடைய ப்ரதிஜ்ஞாபகாரியால்) முடியுமோ என்றது- சேஷ்டிதங்கள் நிறைவேறுமோ என்றபடி. தாஶீபவாதத்துக்குத் தாத்பர்ய

ஸ—ஸாரதேஶம்: தயங்க- ப்ரஸித்தகடாக்ஷத்தாலே தாக்ஷிண்யங்களாக, தயங்குகை- தாக்ஷிண்யமாகை, நின்றருளாய்- நாலடிநடந்துவந்தருளின நீ ஹர்ஷாதிஶயத்தாலே நடக்கவும்மாட்டாதே ஸ்தப்தனாய் என்முன்னே நின்றருளவேணும். ॥௯॥

காய்சின- காயாநிற்கிற சினத்தையுடையவையான, சினம்- க்ரோதம், ஆஶ்ரிதவிரோதிவிஷயத்தில் ஜ்வலியாநிற்கிற க்ரோதத்தையுடையவையானவென்றபடி. ஆழி சங்கு வாள் வில் தண்டு- ஶங்க சக்ர நந்தகாதிகளை, தண்டு- கதை, ஏந்தி- தரித்துக்கொண்டு, எம்மிடர்- எங்களுடையபாபத்தை, கடிவானே- நிரஸிக்கக்கடவனான, எம்மென்று ஸாத்விகஸமூஹவசநம் என்னுடைய ப்ரதிபந்தகங்களையெல்லாம் நிரஸிக்கக்கடவனானவென்று தாத்பர்யம். இது புளிங்குடியாயென்கிறதற்கு விஶேஷணம். பொன்மலையின்- கநககிரியினுடைய, மீமிசை- மேலேயிருந்ததான, கார்முகில்போல- காளமேகம்போல, காய்சின- ஶத்ருக்களைக்காயாநிற்கிற க்ரோதத்தையுடையவனான, பறவை- பக்ஷியை, வாஹனமென்றபடி. ஊர்ந்து- நடத்திக்கொண்டு, இதற்குக்கனன்றுஎன்கிறத்தோடே அந்வயம். மாசின- மஹாக்ரோதனான, மாலிமான்மாலிஎன்றவர் என்று அந்வயிப்பது. ஸுமாலிமாலீஎன்கிறவர்கள், மான்- மஹான், மஹானான ஸுமாலி என்றது ஸுமாலியென்றபடி. இது மால்யவானுக்கும் உபலக்ஷணம். மாலீ ஸுமாலீ மால்யவாந் என்று ப்ரஸித்தர்களான அந்தராக்ஷஸர்களென்றபடி. அங்கு- அந்தயுத்தபூமியிலே, பட- படும்படி, பராஜிதராம்படியென்கை. படுகை- நஶிக்கை. ஆனாலும் நஶித்தவன் மாலிஒருவனேயொழிய மற்றையிருவரும் அப்போது நஶித்தவரல்லாமையாலே படஎன்றது ஸாமாந்யவ்யாஜம். கனன்று- ப்ரகோபித்தனாய், கனலுகை- ப்ரகோபிக்கை, முன்னின்ற- அவர்கள்முன்னே நின்றருளினவனான, முன்னின்றநிலையினுடைய ஸாம்முக்யத்தைக்கண்டவளவிலே ராக்ஷஸர்களெல்லாம் நடுங்கியோடினார்களென்றுகருத்தாலே முன்னின்றவென்றது. காய்சின- “காமாத்ஸஞ்ஜாயதே க்ரோத:” என்கிறபடியே ஆஶ்ரிதவிரோதிகளைப் ப்ரதிஜ்வலியாநிற்கிற க்ரோதகாரணத்தையுடையவனான, வேந்தே- ஸ்வாமியான, வேந்தன்- ஸ்வாமீ, கதிர்முடியனே- கிரணஶாலியான கிரீடத்தையுடையவனான, கதிர்- கிரணம், ப்ரதிபக்ஷநிரஸநஸஞ்ஜாத வீரஶ்ரீயாலே ஜாஜ்வல்யமாந திவ்யகிரீடஶாலியானவென்றபடி. கலிவயல்- ஸஸ்யஸம்ருத்தமான வயல்களையுடைத்தான, கலியென்று ஸம்ருத்தி. திருப்புளிங்குடியாய்- திருப்புளிங்குடியிலே எழுந்தருளியிருக்குமவனே, நின்திருக்கண்தாமரை தயங்கநின்றருளாயென்று கீழ்ப்பாட்டில் க்ரியையை அநுஷங்கித்துக்கொள்வது. ॥௯॥

மூ—எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானேயிமையவர்தமக்குமாங்கனையாய்* செம்மடல்மலருந்தாமரைப்பழனத்தண்டிருப்புளிங்குடிக்கிடந்தாய்* நம்முடையடியர்கவ்வைகண்டுகந்துநாங்களித்துளநலங்கூர* இம்மடவுலகர்காணநீயொருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே* ॥எ॥

ஆ—போலே இந்தப்ரதிபந்தகத்தையும் நீயேபோக்கி என்னுடையமநோரதத்தையும் முடித்தருளவேணுமென்கிறார். ॥கூ॥

(எம்மிடர்) உத்க்ருஷ்டாபக்ருஷ்டவிபாகமின்றியே ஸர்வாத்மாக்களுக்கும் நீயல்லது வேறுரக்ஷகருண்டோ ஆனபின்புனக்கு நல்லராயிருப்பார், நீயிருந்தருளுமிருப்பைக்கண்டால் படும்பாடுகண்டு நாங்கள்வாழும்படியாக இந்தலோகத்திலுள்ளவர்கள் காணும்படி எங்கள்கண்ணெதிரே நீயொருநாளிருந்திடாயென்கிறார். ॥ஒ॥

(எங்கள்) நீர்சொல்லிற்றெல்லாம் திருநாட்டிலேசெய்கிறோமென்றோ பேசாதிருந்தருளுகிறது, அங்ஙனே செய்தருளவையாது, எங்கள்கண்ணெதிரே லௌகிகரெல்லாரும் உன்திருவடிகளிரண்டையும் ப்ராப்யமாகத்

இ—மருளிச்செய்கிறார் (உன்னுடையவித்யாதியால்) பூர்வார்த்தத்தில் அபிப்ராயமருளிச்செய்கிறார் (பண்ணியருளினாப்போலேஇத்யாதியால்) முடித்தருளவேணும்- நிறைவேற்றியருளவேணும். ॥கூ॥

✳ ஏழாம்பாட்டு. ✳

ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உத்க்ருஷ்டஇத்யாதியால்) ஆனபின்பு என்கிறதற்கு எங்கள்கண்ணெதிரே இத்யாதியோடே அந்வயம். நம்முடையடியர்கவ்வைகண்டு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கு நல்லரித்யாதியால்) உகந்து இத்யாதியை ஸங்க்ரஹிக்கிறார் (நாங்கள்வாழும்படியாகவென்று) இதுக்கு இருந்திடாயென்கிறதோடே அந்வயம். ஐந்தாம்பாட்டில் நீ என்முன்னேவந்து நின்றருளவேணுமென்றவர் ஆறாம்பாட்டில் ப்ரஸக்தமான ஶங்கையைப் பரிஹரித்து அநந்தரம் இப்பாட்டிலே என்முன்னே இருந்தருளவேணுமென்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. மூன்றாம்பாட்டுக்கு நீ ஒருபடியே கண்வளர்ந்தருளுகையைத்தவிர்ந்து எழுந்திருக்கவேணுமென்கையிலே ப்ரதாநதாத்பர்யமாகையாலே இப்பாட்டு பௌநருக்த்யமன்றென்று கருத்து. ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

பூர்வார்த்தத்தில் அபிப்ராயமருளிச்செய்கிறார் (நீர் சொல்லிற்றெல்லா மித்யாதியால்) இத்தால் இப்படி ஸம்ஸாராவிஷயமாக ஶங்கித்து உத்தரமருளிச்செய்கிறாரென்று ஸங்கதி ஸூசிதையாயிற்று. த்ருதீயபாதத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எங்களித்யாதியால்) தங்களன்பாரென்கிறதற்குத்

ப— எம்மிடர்- எங்களுடைய ஸாம்ஸாரிகது:க்கங்களையெல்லாம், கடிந்து- நிரஸித்து, இங்கு- ஸமஸ்தஜநத்திற்கு அநாகதமல்லாத இஹலோகத்திலே, என்னை- அத்யந்தநிக்ருஷ்டனான வென்னை, ஆள்வானே- அடிமைகொண்டு ரக்ஷித்தருளுகிறவனே, இமையவர்தமக்கும்- அநிமிஷர்க்கும், நிக்ருஷ்டனான எனக்குமன்றியே உத்க்ருஷ்டரான ப்ரஹ்மாதிதேவதைகளுக்கு மென்றபடி. ஆங்கனையாய்- அங்ஙனேயாயிருக்கிறவனே, எனக்குப்போலே ஸர்வரக்ஷகனாயிருக்கிறவனே யென்றபடி. செம்மடல்- அருணதளங்கள், மலரும்- விகஸியாநிற்கிற, தாமரைப்பழன- தாமரஸங்களையுடைத்தான நீர்நிலங்களையுடைத்தான, பழனம்- நீர்நிலம். தண்- ஶீதளமான, ஸம்ஸாரஸந்தாபஹரமான என்றபடி. திருப்புளிங்குடிக்கிடந்தாய்- திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளினவனே, நம்முடையடியர்- நம்முடையவரென்னும்படி உனக்கஸாதாரணஶேஷபூதரான நித்யஸூரிகளுடைய, கவ்வைகண்டு- அபிநவஜநித்ர கோலாஹலத்தைக்கண்டு, கவ்வை- கோலாஹலம், நாமுகந்து- நாங்கள் ஹ்ருஷ்டராய், களித்து- உத்தேசாதரநாதிகளாய், உளம்- மநஸிலே, நலம்- ஸந்தோஷமானது, கூர- அதிஶயிக்கும்படியாக, இம்மடவுலகர்- இந்த அஜ்ஞரான லௌகிகர்கள், காண- தங்கள்கண்ணாலேகாணும்படி, ஸம்ஸாரிகளெல்லாரும் கண்டு க்ருதார்த்தராகவேணுமென்று தம் காருண்யத்தாலே யருளிச்செய்தபடி. நீ- நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யனாயிருக்கிற நீ, எங்கள்கண்முகப்பே- எங்களுடைய கண்முன்னே, ஒருநாளிருந்திடாய்- திவ்யாஸிகையாக ஒருநாளிருந்தருளவேணும். ॥எ॥

மூ — எங்கள்கண்முகப்பேயுலகர்களெல்லாமிணையடிதொழுதெழுதிறைஞ்சித்* தங்களன்பாரத்தமதுசொல்வலத் தாற்றலைத்தலைச்சிறந்துபூசிப்பத்* திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா* இங்கண்மாஞாலத்திதனுளுமொருநாளிருந்திடாய்வீற்றிடங்கொண்டே* ॥அ॥

ஆ — தொழுது க்ருதாஞ்ஜலிகளாய்த் தங்களுடைய ஸ்நேஹாநுகுணமாகத் தங்களுடைய ஶக்த்யநுரூப மான சொற்களாலே மிகவும் மேல்விழுந்துகொண்டாட இந்தலோகத்திலே இத்திருப்புளிங்குடியிலே பிராட்டி யும்நீயுங்கூட ஒருநாளிருந்திடாயென்கிறார். ॥அ॥

(வீற்றிடங்கொண்டு) என்னுடைய கண்ணிணையானது விடாய்தீர்ந்துகுளிர உன்னுடைய செவ்விப்பூப் போலேயிருக்கிற திருமேனியைப்போவாதே பருகும்படியாக விஷயநீயமான ஸம்ஸாரத்தில் உன்னுடைய

இ — தாத்பர்யமருளிச்செய்கிறார் (தங்களுடைய வித்யாதியால்) தமதுசொல்வலத்தா லென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தங்களுடைய ஶக்த்யாதியால்) தலைத்தலைச்சிறந்துபூசிப்ப என்கிறதற்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ப்ரஹ்வ்யாதியால்) இங்கண்மாஞாலத்திதனுளும் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்த லோகத்திலேயித்யாதியால்) வீற்று என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிராட்டியும் நீயுமென்று) ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

கண்ணிணை குளிரவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடைய வித்யாதியால்) பாட்டிலே தம் ஸநாதயிகளையும் கூட்டிக்கொண்டு அடியோங்களென்று பஹுவசநமிருந்ததேயாகிலும் இவருக்குப் ப்ராதாந்யவிவக்ஷயா வ்யாக்யாநத்தில் என்னுடையவென்று ஏகவசநமாக நிர்தேஶித்தது. புதுமலராகத் தையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடைய செவ்வியித்யாதியால்) செவ்வி- வெளஶவம். பருகும்படியாகவென்கிறதற்கு இருந்தருளவேணு மென்கிறதோடே அந்வயம். இத்தால் இவ்விருப்பில் வாசிய றியமாட்டாத ஸம்ஸாரத்திலே நாம் இருப்பதெதற்காவென்னில்? அதில்மிகவும் ஆசையுடையவெங்களுக்காக இருந்தருளவேணு மென்கிறாரென்று ஸம்மதிஸூசிதை. வியன்கொள்மாஞாலத் திதனுளுமென்கிறதற்குத்

ஶ — திங்கள்சேர்மாட- சந்த்ரனைக்கிட்டியிருக்கிற க்ருஹங்களையுடைத்தான, அத்யுந்நததவளயஶாலியான வென்றபடி. திருப்புளிங்குடியாய்- திருப்புளிங்குடியிலே யெழுந்தருளியிருக்கிறவனே? திருவைகுந்தத்துள் ளாய்- அவ்வளவன்றிக்கே ஆஶ்ரிதர்க்காக ஸ்ரீவைகுண்டமென்கிற திவ்யதேஶத்திலுமிருந்தருளுகிறவனே? தேவா- தேவ?, பரமபதத்தில்காட்டிலும் ஸௌஶீல்யஸௌலப்யாதி குணங்களையுடையவனே என்றபடி. எங்கள்கண்முகப்பே- எங்களுடைய கண்முன்னே, உலகர்களெல்லாம்- லௌகிகரெல்லாரும், இணையடி- பரஸ்பரம் சேர்த்தியாலே அத்யந்தபோக்யங்களாம்படி அழகமாயிருக்கிற உன்திருவடிகளை, இணை- அழகும். தொழுது- ப்ரணாமம்பண்ணி, எழுது- எழுச்சிபெற்று, எழுச்சி- அதிஶயம். இறைஞ்சி- ஆஶ்ரயித்து, உன்னைத்தங்களுக்கு ரக்ஷகனாக அத்யவஸித்து என்றபடி. தங்கள் அன்பு- உன்பக்கல்தங்களுக்கு ஸ்நேஹ மானது, ஆர- பூர்ணமாகாநிற்க, பூர்ணமாம்படி வர்த்தியாநிற்க வென்றபடி. தமது- தங்களுடைய தான, சொல்வலத்தால்- உக்திபலத்தாலே, தங்களுக்குள்ள உக்திஸாமர்த்யாநுகுணமாகவென்றபடி. இதற் குப்பூசிப்பவென்கிறதோடே அந்வயம். தலைத்தலைச்சிறந்து- ஒருவர்க்கொருவர் அதிஶயிதராய், சிறப்பு- அதிஶயம், அஹமஹமிகயாமேல் விழுந்தென்றபடி. பூசிப்ப- பூஜிக்க, ஸ்தோத்ரம்பண்ணும்படியாக வென் றபடி. இதற்கு இருந்திடாயென்கிறதோடே அந்வயம். இங்கண்மாஞாலத்து- இந்தகண்ணுடைத்தான மஹா ப்ருதிவியிலே, கண் என்று இடம், மாஎன்றுமஹத்த்வம், நல்லஇடங்களையுடைத்தாய் நீ அவதரிக்கும்படி ஶ்லாக்யமான இந்த ப்ருதிவியிலேயென்றபடி. இதனுளும்- இந்த திருப்புளிங்குடியிலும், பரமபதத்தில் போலே இவ்வூரிலுமென்றபடி. இடங்கொண்டு- திவ்யாவஸ்தைக்கு உசிதமான ஒருதிவ்யஸ்தாநத்தை ஸ்வீக ரித்துக்கொண்டு, வீற்று- வீறுபெற்று, வீறு- உத்கர்ஷம், அதாவது:— “தயாஸராஜர்ஷிஸுதஃ, அதீ வ ஶோபாதிஶயத் [illegible]’’ என்கிறபடியே பிராட்டியோடேகூட இருந்தருளி அத்தாலேஉண்டான ஶோபாதிஶயத் தையுடையவனாயென்றபடி. ஒருநாள்- ஒருநாளாகிலும், த்ருஷ்டாந்தமின் ஒருக்கால் நாக்குநனைக்கவேணுமென் னுமாப்போலே சொல்லுகிறார். இருந்திடாய்- திவ்யாவஸ்தையாக இருந்தருளவேணும், இடாயென்றது ஸ்வா ர்த்தகவ்யாபாரம். ॥அ॥

மூ:— வீற்றிடங்கொண்டுவியன்கொண்மாஞாலத் திதனுளுமிருந்திடாயடியோம்* போற்றியோவாதேகண்ணிணைகுளிரப்புதுமலராகத்தைப்பருகச்* சேற்றிளவாளைசெந்நெலூடுகளுஞ் செழும்பணைத்திருப்புளிங்குடியாய்* கூற்றமாயசுரர்குலமுதலரிந்தகொடுவினைப்படைகள்வல்லானே* ||௯||

கொடுவினைப்படைகள்வல்லையாயமரர்க்கிடர்கெடவசுரர்கட்கிடர்செய்* கடுவினைநஞ்சேயென்னுடையமுதே

---

ஆ:— வ்யாவ்ருத்தி தோற்றும்படி ஒருநாளிருந்தருளவேணும், ஆஶ்ரிதருடைய து:க்கத்தைப்போக்கவல்லையாயிருந்து அவைசெய்யாதொழியலாமோவென்கிறார். ||௯||

இ:— தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஸ்மயநீய இத்யாதியால்) வீற்றுக்கொண்டு இருந்திடாயென்றநுவதித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடைய வ்யாவ்ருத்தீத்யாதியால்) ஸமீபவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதருடைய இத்யாதியால்) ||௯||

---

ப:— செந்நெலூடு- சிவந்தநெற்பயிர்களின் மத்யத்திலே, ஊடு- மத்யம், வாகவிஶேஷங்களான ஜலமத்யங்களிலேயென்றபடி. சேறு- நித்யஜலஸம்ருத்தியாலுள்ள கர்த்தமங்களிலே, இளவாளைகள்- பாலமத்ஸ்யங்கள், வாளை- மத்ஸ்யம், வனுவிம்ஶதிவாஷிகரான மாருதியைப்போலே நித்யயௌவநஸ்வபாவங்களான மத்ஸ்யங்களென்றபடி. உகளும்- உல்லாஸத்தாலே துள்ளாநிற்கிற, உகளுதை- தலைக்குமேலேகிளம்புகை, அவ்வூரில் வஸ்துக்களெல்லாம் ஸாமிப்யம்பெற்றுக் களியாநிற்க நானுமென்னமுகம் பெறவேண்டாவோ பிரானேயென்றுகருத்து. செழும்பணை- அழகிய நீர்நிலங்களையுடைத்தான, செழுமென்று அழகியது, திருப்புளிங்குடியாய்- திருப்புளிங்குடியில் எழுந்தருளியிருக்கிறவனே, கூற்றமாய்- ம்ருத்யுவாய், கூற்றம்- ம்ருத்யு, அசுரர்குலம்- அஸுரகுலத்தை, முதலரிந்த- மூலத்திலேசேதித்தவனை, நிஶ்ஶேஷமாக நஶிப்பித்தவனையென்றபடி. இது ஸம்போதனம். கொடுவினை- ஆஶ்ரிதவிரோதிவிஷயத்தில் க்ரூரகர்மங்களான, வினை- கர்மம், படைகள்- ஆயுதங்களை, ஸ்ரீஸுதர்ஶநாதிகளையென்றபடி. வல்லானே- ஆளவல்லவனே, அதுகளை யதாஹிதவிநியோகம் பண்ணவல்ல ஸமர்த்தனானவனேயென்றபடி. அடியோம்- ஶேஷபூதரான நாங்கள், போற்றி- மங்களாஶாஸநம்பண்ணி, கண்ணிணை- உன்னைக்காணவேணுமென்று விடாய்த்த எங்களுடைய நயநயுகமும், குளிர- ஸந்தாபமெல்லாம்போய் ஆஹ்லாதயுக்தங்களாகும்படி, இதுக்குப் பருகவென்கிறதோடே அந்வயம். புதுமலராகத்தை- அபிநவபுஷ்பம்போலே ஸுகுமாரமான உன்திருமேனியை, ஆகம்- ஶரீரம், ஓயாதே- அவிச்சிந்நமாக, பருக- பானம்பண்ணும்படியாக, "பிபந்நேத்ராஞ்ஜலிபி:" என்கிறபடியே அதித்ருஷ்ணையோடே கண்களாலே புஜிக்கும்படியாகவென்றபடி. வியன்கொள்- விஸ்மயத்தைக்கொண்டிருக்கிற, வியன்- விஸ்மயம், விஸ்மயநீயமானவென்றபடி. ஸர்வவியாபகமாய் நிரதிஶயவைலக்ஷண்யயுக்தமுமாயிருக்கிற வுன்னை நினைப்பதும் செய்யாமையாலே விஸ்மயநீயமானவென்றபடி. மாஞாலத்து- மஹாப்ருதிவியிலே, இதனுளும்- இதுக்குள்ளேயும், இந்த திருப்புளிங்குடியிலேயுமென்றபடி. அவ்விருப்பில் வாசியறிவாரில்லாத விடத்திலுமென்று வஶபத தாத்பர்யம். இடங்கொண்டு- ஸ்தானத்தைஸ்வீகரித்து, வீற்று- வீறுபெற்று, வீறு- உத்கர்ஷம், உன்னுடைய உத்கர்ஷம் தோற்றும்படியென்கை. இருந்திடாய்- நீ இருந்தருளவேணும். ||௯||

கொடுவினை- கொடிதானவினைகளையுடையவர்பக்கல, கொடிது- க்ரூரம், வினை- கர்மம், உன்னு ஶ்ரிதவிஷயத்தில் க்ரூரகர்மங்களான அஸுரரிடத்திலென்றபடி. படைகள்வல்லையாய்- ஆயுதமெடுக்க ஸமர்த்தனே, மற்றயிடத்தில் ஆயுதமெடுக்கஸமர்த்தனல்லனிறே, "பலிவாராவணே ஸ்வயம்" "நமேவ ராமை மோக்ஷ" என்று ரக்ஷிக்கநாடாநிற்குமிறே, "ஸேநஸ்து ரக்ஷணே ஸக்தஸ்ஸ ஶிரோஸம்ஜ்ஞம் ஜீவாதமேவ விஸ்ருஜ ஶரம் ... ராமஸ்மாதுமேவிநிர்மலநமம்விஷு வீதாவியாஸந பலேநாகாஶமாநா காந்த வேஷு" என்று அவன்ஸ்வபாவத்தைப் ப்ராக்ருதகவிகளும் சொன்னார்களிறே, அமரர்க்கு- ஆஶ்ரிதரானதேவர்களுக்கு, இடர்கெட- அஸுரப்ரயுக்தமான து:க்கம்நஶிக்கைக்காக, அசுரர்க்கு- அஸுரர்களுக்கு, இடர்செய்- து:க்கங்களைப்பண்ணும்ஸ்வபாவமான, கடுவினைநஞ்சே- ஶீக்ரகாரியானவிஷமே, கடியது- வேகமும், கடியதானவினையையுடையது கடுவினையது, ஶீக்ரகாரியென்றபடி. அஸுரர்க்கு விஷமென்றதால் ஆஶ்ரிதவிரோதிநாஶநமவனுக்கு ஸ்வபாவமென்றதாயிற்று. என்னுடையமுதே- என்னுடையபோக்யமே,

மூ— கலிவயற்றிருப்புளிங்குடியாய்* வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக்*
கொடுவினையேனும் பிடிக்க நீ ஒருநாள் கூவுதல் வருதல் செய்யாயே* ॥௰॥
கூவுதல் வருதல் செய்திடென்று குரைகடல் கடைந்தவன் தன்னை* மேவி நன்கமர்ந்த வியன்புனற்பொருநல்

ஆ— (கொடுவினை) ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸமர்த்தனுமாய், ஆஶ்ரித[illegible]நிரஸநஸ்வபாவனுமாய் எனக்கு நிரதிஶயபோக்யனாய், திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனானவனே வடிவழகுக்கொப்பில்லாத பெரியபிராட்டியாரும் அப்படியேயிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியும் ஸம்வாஹிக்கவேண்டும்படி ஸுகுமாரமான திருவடிகளை அதில் போக்யதையையறிந்துவைத்து இழக்கைக்கீடான பாபத்தைப்பண்ணின நானும் பிடிக்கும்படி என்னையொருநாள் அங்கேயழைத்துக்கொள்ளுதல் இங்கேவருதல் செய்தருளவேணுமென்கிறார். ॥௰॥

* பத்தாம்பாட்டு. *

இ— கொடுவினைப்படைகள் வல்லையாய் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதியால்) அமரர்க்கித்யாதி நஞ்சேஜநத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனுமாயென்று) மெல்லடியையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸுகுமாரமானவித்யாதியால்) கொடுவினையேனும் என்கிறதைவிவரிக்கிறார் (அதில்போக்யதையையித்யாதியால்) பிடிக்கும்படி யித்யாதியாலே கீழ்ப்பாட்டிலே திவ்யாவயவங்களைக் காணவேணுமென்றவர் இப்பாட்டிலே "ஸம்வாஹம்ஸேவாயர்" என்று ஸேவோசிதமான திருவடியைப் பிடிக்கவேணுமென்று ஸேவிக்கிறாரென்று ஸங்கதி விவக்ஷிதை. ॥௰॥

ஈ— நிரதிஶயபோக்யமான உஜ்ஜீவநமேயென்றபடி. அவ்விஷயமே இவருக்கு [illegible]மாயிருக்கிறபடி. கலிவயல்- ஸம்ருத்தஸஸ்யமான க்ஷேத்ரங்களையுடைத்தான, கலி- ஸம்ருத்தம், திருப்புளிங்குடியாய்- திருப்புளிங்குடியிலே இருந்தருளுகிறவனே, இவர் ஆர்த்தத்துக்குக் கடல்கடைதல் ஸமயத்திலேபோதல் செய்யவேண்டா, திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்றிவர்க்கு ஆர்த்தம். வடிவிணையில்லா- ஸௌந்தர்யத்திலே ஸாத்ருஶ்யமில்லாதவளான, வடிவு- ஸௌந்தர்யம், இணை- ஸாத்ருஶ்யம், அவன் ஸௌந்தர்யத்திலே ஸாத்ருஶ்யமுண்டுபோலே இவள்ஸௌந்தர்யத்திலே ஸாத்ருஶ்யமின்றிக்கே, ஸர்வஸௌந்தர்யவிஶிஷ்டனானவனும் ஸௌந்தர்யத்திலிவளுக்கு ஸாத்ருஶ்யமாகமாட்டான், "தத்ருஶஸிதேக்ஷணா" என்றேற்றமாய்நின்றதிறே. மலர்மகள்- பத்மத்தில்பெண்ணானவள், தாமரைப்பத்மத்தினுடைய ஸௌந்தர்யஸௌரப்ய ஸௌகுமார்யங்கள் ஒருபெண்ணாகப் வடிவெடுத்தாப்போலேயிருக்கிற பெரியபிராட்டிக்குமென்றபடி, மற்றைநிலமகள்- மற்றொருபெண்ணான பூமிப்பிராட்டியும், மலர்மகளுக்குப் ஸாத்ருஶ்யமென்று சொல்லலாம்படியான ஸ்ரீபூமிப்பிராட்டியுமென்றபடி. பிடிக்கும- ஸம்வாஹநம்பண்ணுமதான, மெல்லடியை- ஸுகுமாரமானதிருவடியை, மெல்- ஸுகுமாரம், கொடுவினையேனும்- க்ரூரங்களான கர்மங்களையுடையனானும், திருவடிகளினுடைய போக்யதையையறிந்துவைத்தும் காணப்பெறாதபடியான பாபத்தையுடையவனான நானுமென்றபடி. உம்ஶப்தத்தாலே அவர்களைப்போலே நானுமென்றபடி. பிடிக்க- ஸம்வாஹநம்பண்ணும்படி, நீ- எனக்கு ஸர்வவிதபந்துவானநீ, ஒருநாள்- ஒருநாளாகிலும், கூவுதல்- என்னை அங்கேயழைத்துக்கொள்ளுதல், வருதல்- நீஇங்கேயெழுந்தருளுதல், செய்யாய்- செய்தருளவேணும். ॥௰॥

குரைகடல்- த்வநிகோஷத்தையுடைத்தான ஸமுத்ரத்தை, குரை- கோஷம், ஶப்தவாசிவசஸ். கடையவொண்ணாதபடி உத்துங்கதரங்கவிஶிஷ்டமான ஸமுத்ரத்தையென்றபடி. கடைந்தவன்தன்னை- ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காக ஶ்ரமம்பண்ணினவனை, தன்னொன்று ஸ்வாயிக்கப்ரயோஜநம், இப்படி ஆஶ்ரிதரெல்லாருக்கும் ஸுலபனானவனையென்றபடி. மேவி- ஆஶ்ரயித்து, ஸர்வப்ராப்யமாக ஸந்நிஹித்தென்றபடி. கூவுதல்வருதல்செய்திடாயென்று- என்னை அங்கே அழைத்துக்கொண்டருளுதல், நீநான் இருந்தவிடத்திலே எழுந்தருளுதல் செய்யவேணுமென்று, நன்கு- நன்றாக, அநந்யப்ரயோஜநமாகவென்றபடி. அமர்ந்த- கிட்டினவரான, ஸம்ஶ்லேஷித்தவரானவென்றபடி, இது சடகோபனுக்கு விஶேஷணம். வியன்புனல்- விஸ்மயநீயமான ஜலத்தையுடைத்தான, வியன்- விஸ்மயநீயம், பொருநல்- தாம்ரபர்ணியையுடைத்தான

மூ—வழுதிநாடன்சடகோபன்* நாவியல்பாடலாயிரத்துள் இவையுமோர்பத்தும்வல்லார்கள்* ஓவுதலின்றி உலகமூன்றளந்தானடியிணையுள்ளத்தோர்வாரே* ||கக||

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ—(கூவுதல்) குரைகடல்கடைந்தவன்தன்னை ஸாதநமாகப்பற்றி கூவுதல்வருதல் செய்திடாயென்று அபேக்ஷித்த வியன்புனல்பொருநல் வழுதிநாடன்சடகோபன் நாவியல்பாடலாயிரத்தில் இத்திருவாய்மொழியைவல்லார் ஸ்ரீத்ரிவிக்ரமனான எம்பெருமானுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே அநுஸந்திக்கப்பெறுவரென்கிறார். ||கக||

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

✳ நிகமனம். ✳

இ— மேவியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாமீப்யாதிபரல்) நன்கமர்ந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அபேக்ஷிதவென்று) இது சடகோபனுக்குவிசேஷணம். உலகமூன்றளந்தான் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீமதீத்யாதியால்) சேஷம் ஸ்பஷ்டம். ||கக||

ப—வழுதிநாடன்- வழுதிநாட்டையுடையவரான, சடகோபன்- ஆழ்வாருடைய, நாவியல்- ஜிஹ்வாவ்யாபாரப்ரபவமான, நா- ஜிஹ்வை, இயல்- வ்யாபாரம், மநஸ்ஸாஹாய்யமின்றிக்கே கேவலஜிஹ்வாவ்யாபாரப்ரபவமானவென்றபடி. அதாவது:— கவிதாப்ரவர்த்தநத்தில் மநஸ்ஸஹாயமின்றிக்கே இவருக்கவசமாக ஜிஹ்வையிலே ஸ்புரிதமானவென்கை. பாடலாயிரத்துள்- ஸஹஸ்ரத்தில், இவையும்பத்தும்- இந்த பத்துப்பாட்டுக்களையும், முந்தினவசப்தம் கீழ்த்திருவாய்மொழிக்குப்போலே இத்திருவாய்மொழிக்கும் ஸாமஸ்யவிசேஷமுண்டென்று ஸூசிப்பிக்கைக்காக, த்விதீயசப்தம் இப்பாட்டுக்களினுடைய அந்யோந்யஸமுச்சயார்த்தம். வல்லார்கள்- அப்யஸிக்கவஸமர்த்தரானவர்கள், உலகம்மூன்று- லோகத்ரயத்தை, அளந்தான்- த்ரிவிக்ரமதசையிலே அளந்தவனான ஸ்வாமியுடைய, அடியிணை- சரணயுகளத்தை, உள்ளத்து- மநஸ்ஸில், ஓவுதலின்றி- விச்சேதமில்லாமல், ஓவுதல்- விச்சேதம், ஓர்வார்- த்யானிக்கப்பெறுவார், நிரந்தரஸ்மரணாநந்தமும் பெற்று வாழ்வார்களென்றபடி. ||கக||

✳ ஜ்ஞாநவைராக்யநிதயே ஸ்ரீவேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ✳

ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(பண்டைநாளாலே)

அக்ஷீணஸம்பந்தஸித்தே: த்ரிதயபரணிதயா ஸத்மநேத்ராப்ஜயோகாத்
ஸ்நித்தைர்நேத்ரைர்விஸ்ரம்பிதேர்த்தா ஸஹ்ருதயரமணாச் ஸ்ரீகஜேந்த்ராவநாச்ச ।
தார்க்ஷ்யாம்ஸஸ்கந்தாரோஹாத் ஸமதிகரஸநா தைவதாந்த்ராவதாரே
த்ருஷ்டோக்ஷணேர்த்தகாநாத் ஸாவிர்பாவக்ருதேர்மர தர்ஸநத்வேபவஸ் ||கoச||

(அக்ஷீணஸம்பந்தஸித்தே:) நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு- பெரியபிராட்டியாரோ டே ஒருக்காலும் பிரிவற்றவனுகையாலும், (த்ரிதயபரணிதயா) நீ ஒருநாள் படிக்களவாகநிமிர்த்த- த்ரிவிக்ரமரூபத்தைக்கொண்டு ஸ்ருஷ்டியையெல்லாம் அளக்கையாலும், (ஸத்மநேத்ராப்ஜயோகாத்) தடங்கொள் தாமரைக்கண்விழித்து- ஸரஸிஜஸத்ருசநயநனுகையாலும், (ஸ்நித்தைர்நேத்ரை: விஸ்ரம்பிதேர்த்தா: ஸஹ்ருதயரமணாத்) புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று- திருப்புளிக்குடியிலே கண்வளர்ந்தும் வரகுணமங்கையிலே வீற்றிருந்தும் ஸ்ரீவைகுண்டத்திலே நின்றருளியும் ஸ்வஸம்ஸ்ருஷ்டசேஷ்டிதங்களாலே ஆஸ்ரிதருடைய ஹ்ருதயத்தை அபஹரிக்கையாலும், (ஸ்ரீகஜேந்த்ராவநாத்) கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்து- தேஹோபஹிதமாயிருக்கவும் ஸ்வபலமான முதலையின்கையிலே அகப்படுகையாலே மிகவும் இடர்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷிக்கையாலும், (தார்க்ஷ்யாம்ஸஸ்கந்தாரோஹாத் ஸமதிகரஸநாத்) காய்சினப்பறவையூர்ந்தித்யாதி- ஸுதிவக்ஷத்தின்மேலே காயாநிற்கிற பெரியதிருவடிமேலேயேறியருளி

தீ — தா — சேஷிவாத்திலே நீரும் சேஷியிருந்தாப்போலே ஸௌலப்யனுக்கொண்டு ஸ்ரீ ஸாத்வி ஸ்ரீ ப்ருவாஷு முதலான ஸத்ர ஸாத்விகங்களை நிரஸிக்கையாலும், (தேவஸாஹாய்ய காரணே) இமையவர் தமக்கு மாங்களைப்பாய் - தேவர்களுக்கும் ரக்ஷகனுமத்தனை போக்கி அவர்களாலும் ஸபத்தத்தாலே ப்ராவிக்க ஷாலுக்கு ஹனுகையாலும், ஆஶ்ரித ஸௌலப்யத்தாலே மேவிரண்டு பாட்டுக்களின் அர்த்தங்களான தீவிரதர திவ்யாபதானங்கள் ஸம்ருத்திகங்கள். திருப்புளிங்குடியாய்த் திருவைகுந்தத்துள்ளாய் தேவா - பரமபதத்திற்காட்டிலும் இஸ்ஸம்ஸாரத்தில் நிலையாதே மிக்க தேஜஸ்ஸை யுடையவனுகையாலும், கொடுவினைப்படைகள் வல்லானே - விரோதிகளிடத்திலே க்ரூரமான ஸ்வஹிதங்களைப் பண்ணக்கடவ திவ்யாயுதங்களை யுடையவனுகையாலும், (ஊர்த்வதேஹத்ருணம் நாமேத்யாதி) கடுவினை நஞ்சேயித்யாதி - ஆஶ்ரிதருடைய ஊர்த்வதேஹங்களை ஸமாஸநமாகப் போக்குமவனுகையாலும், திருப்புளிக்குடி யெம்பெருமான் இச்சேதநனிடத்திலே நெடுநாளே துடங்கி க்ருபை பண்ணுகின்றானென்று "பண்டைநாள்" என்கிற தசகத்திலே ஆழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார்.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஒன்பதாம்பத்தில் இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

# மூன்றாந்திருவாய்மொழி.

மூ — ஓராயிரமா யுலகேழளிக்கும்* பேராயிரங்கொண்ட

ஆ — (ஓராயிரம்) இப்படி ஆழ்வார் அபேக்ஷிக்க நீரிங்ஙனே ப்ரார்த்திக்கவேணுமோ? நம்மோட்டைக்குடற்றுவக்கறியீரோ? என்றெம்பெருமானருளிச்செய்ய அத்தை யநுஸந்தித்தினியாகிறார். ஓரொருதிருநாமமே ஆயிரம்படியாய் உலகேழளிக்கும் பேராயிரமுடையனாய் ஸர்வஜ்ஞஸர்வஶக்தி ஸத்யஸங்கல்ப காருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்யாத்யஸங்க்யேய கல்யாணகுணவிஶிஷ்டனாய் ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும்

❧ மூன்றாந்திருவாய்மொழி. ❧

இ — கீழ்த்திருவாய்மொழியில் தாம் அபேக்ஷித்த கைங்கர்யங்களிலொன்றும் இன்னும் ஸித்தியாதிருக்க இத்திருவாய்மொழியிலே 'நங்கள்பிரானவனே' 'என்புகழ்கோவுனசீலம்' என்றாப்போலே அவனுடைய குணங்களைக் கொண்டாடுகை அஸங்கதமன்றோ வென்ன ஸங்கதிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) அபேக்ஷிக்களன்றது - அபேக்ஷித்தவாறேயென்றபடி. இதற்கு எம்பெருமான் அருளிச்செய்ய என்கிறதோடே யந்வயம். குடல்துவக்கு - ஒழிக்கவொழியாத அநாதிஸம்பந்தம், நம்மோடு குடல்துவக்குண்டாயிருக்கையாலே நம்மை அநுஸந்திக்கை உமக்கு உபாயமன்றோ வென்றுகருத்து - அத்தையென்கிறது - அந்தகுடல்துவக்கையென்றபடி. இனியராகிறாரென்றது - ப்ரீதராகிறாரென்றபடி. தாம் அபேக்ஷித்த கைங்கர்யங்கள் ஒன்றும் ஸித்திக்கவில்லையாகிலும் இப்போதெம்பெருமான் இவையெல்லாமுமக்கு உபாயமாய் மேல்வரப்புகுகிறது, என்றருளிச்செய்தவாறே அவ்வாக்யத்தாலே ஹ்ருஷ்டராய் அவ்வாக்யத்தினுடைய வாத்ஸல்யாதிகளாலே அவஶ்யம் தருமாய் அந்தஸம்பந்தாதிகளை அநுஸந்தித்து ப்ரீதராகிறார் என்றபடி. *

❧ முதற்பாட்டு. ❧

ஓர்பேருடையனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வஜ்ஞத்வேத்யாதியால்) த்ருதீயபாதத்தில் நன்ஸௌலப்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வதேஶேத்யாதியால்) சதுர்த்தபாதத்துக்குத் தாத்பர்ய

ஸ — ஓர் - ஒருதிருநாமமே, ஆயிரமாய் - ஸஹஸ்ரமாய், "ஸம்ஹிதைகவிஸ்தாரத:" 'வேணுவைஸ்ரவஸ்ய' த்யாதிநிவர்த்தநவிஶேஷத்தாலே அநேகப்ரகாரமாயென்றபடி. உலகு - லோகங்களை, திருநாமங்கள் ரக்ஷிக்கப்புக்கால் ஒரொருத்தராகவன்றிக்கே லோகமாக ரக்ஷிக்குமென்று கருத்து. ஏழ் - ஏழுகளையும், அதிலும் ஒருலோகத்தளவே அன்றிக்கே ஸர்வலோகங்களையும் ரக்ஷிக்குமென்றுகருத்து. அளிக்கும் - ரக்ஷிக்கும் ஸ்வபாவங்களான, வேதநர்பண்ணின பாவங்களைப்பார்த்து 'க்ஷிபாமி' என்கிறதும் ஒருபோது உண்டாயிருக்குமவனுக்கு அங்ஙனன்றிக்கே ரக்ஷிக்கையே ஸ்வபாவமாயிருக்கும் திருநாமங்களுக்கென்று கருத்து. பேராயிரம் கொண்டது - நாமஸஹஸ்ரங்களையுடைத்தான, நாமஸஹஸ்ரங்களோடேகூடின வென்றபடி.

மூ — மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கென்று* பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும்பிரான்* கருந்தேவனெம்மான் கண்ணன் விண்ணுலகம்* தரும்தேவனைச் சோரேற் கண்டாய் மனமே* ௪

ஆ — வேதங்களாலும் வைதிகர்களாலும் அறியவொண்ணாதவனை நான் நிர்ஹேதுகமாக உள்ளபடியே அறியப்பெற்றேனென்றுமாம். ௩

(மருந்தே) உன்னழகாலே எங்கள் போகத்துக்கு ஸாதகனானவனேயென்று பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரானாயிருந்துவைத்து இங்கேவந்துபிறந்தருளி ஸ்ரீவஸுதேவஸுதனைப் தன்னையாஸ்ரயித்த நம்போல்வார்க்கும் நித்யவிபூதியான ஸ்வர்க்கத்தைத்தந்தருளும்ஸ்வபாவனான வெம்பெருமானை ஒருவண்ணம்பெற்றோம் இனியவனைச்சோரவிடாதேகிடாய் என்னெஞ்சேயென்கிறார். ௪

(மனமே) ஸர்வேஸ்வரனைத் தன்னோடொப்பாரின்றிக்கே இருக்கிறவனை விடாதேகிடாய்நெஞ்சமே.

இ— ஸம்ஸாரத்துக்கிந்தயோஜநையிற்சொன்ன ப்ரஸம்ஸையில்காட்டில் அதிகப்ரஸம்ஸை விஷயத்துக்கு மென்றுகருத்தாலே பாட்டுக்கு யோஜநாந்தரமருளிச்செய்கிறார் (வேதங்களாலுமித்யாதியால்) அறியவொண்ணாதவனையென்றது- த்விதீயபாதத்தில் அறிந்தனஸப்தத்தை க்ரியாபதமாக்கி கொள்கவரும்பொருளாதல் என்கிறதை க்ரியாபதத்தோடும் உத்தராயத்தில் அறிந்தனரென்கிறத்தோடும் அந்வயித்துத் தாத்பர்யமருளிச் செய்தபடி. இங்கே அறியவொண்ணாமை அவாப்தவ்யமே. ௩

✳ நாலாம்பாட்டு. ✳

ப்ரதமபாதத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னழகாலே யித்யாதியால்) கண்ணன் என்கிற தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்கேவந் தித்யாதியால்) விண்ணுலகந்தரும்தேவனை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னை யித்யாதியால்) நம்போல்வார்க்கு மென்றது அவதாரப்ரமர்க்கு மென்றபடி. சோரேல் கண்டாயென்கிறவிடத்தி லபிப்ராயமருளிச்செய்கிறார் (ஒருவண்ணம் பெற்றோமென்று) 'இனி அவனை' இத்யாதியால் இப்படி கீழ்ப்பாட்டிலே தமக்குள்ள ஸம்பந்தஜ்ஞாநலாபத்தைக் கொண்டாடினவர் அது நித்யமாகச்செல்லவேணு மென்னுமாகையாலே இப்பாட்டிலே தம்மநஸ்ஸை அதிலே ஸாவதாநமாக்குகிறாரென்று ஸங்கதிஸூசிதை. ௪

✳ ஐந்தாம்பாட்டு. ✳

த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஸ்வரனித்யாதியால்) இனமேதுமிலானை யென்கிற தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னோடொப்பாரித்யாதியால்) இரந்துகனமே சொல்லினேன் என்கிற

---

த்விதீயயோஜநைக்கு ப்ரதிபதம்.

ஸ— அரும்பொருளாதல்- உத்தமோஜ்ஞாநஸாத்யமல்லாத பொருளானமையை, ஆதலென்றது ஸாவதாரணமாய் பொருளாதலென்றது பொருளானமையென்றபடி. அறிந்தன- அறிந்ததுகள், "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்றதிறே; அரியைவணங்கி- ஹரியைஸேவித்து, ஸ்வநிக்ரஹபீதராயென்றபடி. நோய்களுக்குமருந்து- ஸர்வேஸ்வரனையே ஸம்ஸாரதாபஹேதுஜனக, அறிந்தனரெல்லாம். அறிந்தவரான ஸர்வேஸ்வரருகளும், கொள்கவரும் பொருளாதல் அறிந்தனர்- ஸ்வஷ்டம், இப்படி பூர்வபதங்களை வேதங்களாலும் வேதவித்துக்களாலும் அறியப்பட்டவனை நாமறிந்தனமென்று கீழ் க்ரியையோடேயந்வயம். ௩

நங்கள்- எங்களுடைய, போகமகிழ்ச்சிக்கு- ஹேமாநந்தத்திற்கு, மகிழ்ச்சி- ஆநந்தம். ஆநந்தஸ்வரூப ஹேமஜந்யாநந்தத்திற்கென்றபடி. மருந்தேயென்று- ஒஷதிபோலே ஸாதகனானவனே யென்று, பெருந்தேவர்- உத்க்ருஷ்டரான தேவர்களுடைய, நித்யஸூரிகளுடைய என்றபடி. குழாங்கள்- ஸமூஹங் கள், பிதற்றும்பிரான்- அக்ரமமாகச்சொல்லி அநுபவிக்கும்படி உபகாரகனான, பிதற்றுகை- அக்ரமமாகச்சொல்லுகை. கருந்தேவன்- நீலவர்ணனைக்கொண்டு தேஜோதநமான, கண்ணன்- க்ருஷ்ணனாய் அவதரித்தவனான, எம்மான்- அத்தால் நமக்கெல்லாம் ஸ்வாமியான, விண்ணுலகந்தரும்தேவனை- பரமபதத் தைத்தந்தருளும் ஸ்வபாவனானதேவனை, மனமே- என்னுடைய மநஸ்ஸே, சோரேல் கண்டாய்- விடாதே கிடாய், கண்டாயென்றது வாக்யாலங்காரம். ௪

மூ — மனமேயுன்னை வல்வினையேனிரந்து* கனமே சொல்லினேனிது சோரேல்கண்டாய்* புனமேவியபூந்தண்
டுழாயலங்கல்* இனமேதுமிலானை யடைவதுமே* ।௫।।
அடைவதுமணியார்மலர்மங்கைதோள்* மிடைவதுமசுரர்க்குவெம்போர்களே* கடைவதுங்கடலுளமு
தமென்மனம்* முடைவதுமவற்கேயொருங்காகவே* ।௬।।

ஆ — உனக்கடியேனாயிருக்கிறேனென்று பின்னையும் நெஞ்சையிரக்கிறார். ।௫।

(அடைவதும்) ‘அவனைவிடாதேகிடாய்’ என்று நான்சொல்லிமுடிப்பதற்குமுன்னே அவனுடையசெயல்களிலே என்னெஞ்சானது ஒருகடலுடைந்தாப்போலே உடைந்துகிடக்கப்பெற்றேனென்று தம்முடைய

இ — தம்முத் தாதுபரமருளிச்செய்கிறார் (உனக்கித்யாதியால்) “பின்னையு” மித்யாதியால் கீழ்ச்சொன்னதையே ஸுபாஸ்ரயத்தாலே த்ருடீகரிக்கிறாரென்று ஸங்கதிக்ரமிகை. ।௫।

✳ ஆறாம்பாட்டு. ✳

தாதீயவாசத்தில் அபிநிவேசமருளிச்செய்கிறார் (அவனையித்யாதியால்) இத்தால் கீழ்த்தாம் பண்ணின உபதேசம் ஸபலமாயிற்றென்று நெஞ்சையுகக்கிறாரென்று ஸங்கதிஸூசிதமாயிற்று. வாக்யார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார் (அவனுடையவித்யாதியால்) தாதீயவாசத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சானதித்யாதியால்) கடலுடைந்தாப்போலே உடைந்துகிடக்கப்பெற்றேனென்றது- ஸாஹஸமாய்க்கொண்டு வைசித்ர்யமாகப் ப்ரவஸித்துப் பின்பு ஒருவராலும்மீட்கவுமொண்ணாதே தானும்

ப — புனமேவிய- புனத்தில் மேவியிருப்பதான, புனம்- ஸ்வக்ஷேத்ரம். மேவுகை- ஆஸ்ரயிக்கை, ஸ்வக்ஷேத்ரத்திலே நன்றாகவளர்ந்திருப்பதான வென்றபடி. பூம்- தர்சநீயமான, தண்- சீதளமான, துழாயலங்கல்- தாதுவஸ்ரக்ஷ்ணமையை யுடையவனை, அலங்கல்- மாலை, இனமேதுமிலானை- உபமானமொன்று மில்லாதவனை, இனம்- உபமானம், ஸௌந்த்ர்யத்தில் நிஸ்ஸமாதிகனானவனை யென்றபடி. அடைவதும்- அடையவேணும். ஸாவேயிதி. நிரந்தரமாக அநுபவிக்கவேணு மென்றபடி. இவ்விடத்தில் வகாரம் ‘கினு’ அவ்வில’ என்னுமாப்போலே கீழ்ப்பாட்டோடே இப்பாட்டுக்கு ஸமாஸ்வயார்த்தமாயிருக்கிறது. இதைச்சொல்லினேனென்கிறதோடேயாதல் இரந்து என்கிறதோடேயாதல் அந்வயிப்பது. மனமே- என்னுடையமனஸ்ஸே, இது- இந்த அர்த்தத்தை, நிரந்தரமாக அநுபவிக்கையை யென்றபடி. சோரேல்கண்டாய்- விடாதேகிடாய், உன்னை- ஸமவிஷயத்தில் ப்ராவண்யமே ஸ்வபாவமாயிருக்கிற உன்னை, வல்வினையேன்- ஸமவிஷயத்தில் உபயோமான உன்னையும் அநுரைச்சொல்லுமாப்போலே சொல்லும்படியான பாபத்தைப்பண்ணின நான், இரந்து- ப்ரார்த்தித்து, கனமே- த்ருடமாகவே, சொல்லினேன்- சொன்னேன். ।௫।

அடைவதும்- தனக்குப்பாரார்ஷார்த்தமாக ஸம்ஸ்லேஷிப்பதும், பரதேவாபார்ஷணிதிஸேஷ:. அணி- ஆபரணங்களாலே, ஆர்- பூர்ணமான, மலர்மங்கைதோள்- ஸாவஸ்ரராஹவாஸிநிபாய் நித்யாநபாயினியான பெரியபிராட்டியார்திருத்தோளே, தோளழகிலே நெஞ்சுறுப் மற்றொருதிவ்யாவயவஸௌந்தர்யமும் காணமாட்டாதே அத்தோளிலே சாய்ந்துகிடக்குமென்றுகருத்து. மிடைவதும்- நிரந்தரமாகச்செய்தருளுவதும், மிடைதல்- நிரந்தரமாகச்செய்கை, அசுரர்க்கு- அஸுரர்களுக்கு, வெம்போர்களே- உக்ரங்களானயுத்தங்களே, வெம்மென்று உக்ரம், போர்- யுத்தம், அவன்செய்தருளுவதும் “ஹதப்ராம்வாரிஷஸ்வஜ” என்கிறபடியே அவள்திருத்தோள்களை உத்ஸோத்ஸாஹ ஸம்ஸ்லேஷம்பண்ணுகைக்கு உபாயமாக ஆஸ்ரிதஜநஹிம்ஸகரான நிசாசரஸஹஸ்ரயுத்தங்களை யென்றபடி. கடைவதும்- மதனம்பண்ணுவதும், கடலுள்- ஸமுத்ரத்தில், அமுதம்- அம்ருதம், அவன்மதனம்பண்ணுவதும் ‘ஸ்வசக்த்யாமத்யமானேது க்ஷீராப்தௌ ஸுராஸுரை: ஸ்திதபவான்ஸ்ஸ்ரீர்ஜாயம்ஜஜ்ஞேத்ரைலோக்யஸ்ரீஸமன்விதா । த்ரைலோக்யமாவதார்த்தஸ்ய பூர்வஸ்மாதபி ஸுந்தரீ ஸாஹிஸ்வர்ணஸீதாம்பரா ச ஸ்ரீமதீ” என்கிறபடியே அவளுடைய கடாக்ஷவிசேஷம்பெறுகைக்கு உபாயமாக க்ஷீராப்திஸமுத்ரமதனகாலத்தில் அம்ருதத்தையென்றபடி. என்மனம்- என்னுடையமனஸ்ஸானது, ஒருங்காக, ஏகாக்ரமாக, அநவரதத்தில் அம்ருதத்தையென்றபடி. உடைவதும்- ஸௌந்தர்யவஸ்யத்தாலே வ்யஸநிமாவதும், அவற்கே- அவிச்சேதமின்றிக்கேயென்றபடி. உடைவதும்- ஸௌந்தர்யவஸ்யத்தாலே ப்ரவணமாவதும், அவற்கே- அந்தவிசித்ரசேஷ்டிதங்களையுடையவனான பரதேவர்ஷணுக்காகவே, அவனை அநுபவிக்கைக்காகவேயென்றபடி. அவன் ஸுகப்படி. ஸ்வபாரணத்தால் மற்றொருவிதேவதாந்தரங்களிலும் கண்ணோட்டமில்லையென்றபடி.

மூ— ஆகஞ்சேர்நரசிங்கமதாகியோர்* ஆகம்வள்ளுகிரால்பிளந்தானுறை* மாகவைகுந்தங்காண்பதற்கென்மனம்* ஏகமெண்ணுமிராப்பகலின்றியே* ||௭||

ஆ— நெஞ்சைப்புகழுகிறார். ||௬||

(ஆகஞ்சேர்) இந்தஸ்வரூபத்தை ஸ்தாபித்துப் பின்னையும் ஸௌலப்யசேஷ்டிதங்களைச் செய்தருளினவன்தன்னை அவனிருக்கிற திருநாட்டிலேசென்று காணவேணுமென்றாசைப்படாநின்றது, அதுவோ ஸதிஸ்திரமாயிராநின்றது, என்னெஞ்சைக்கொண்டென்செய்கேனென்றுநோகுகிறார். ||௭||

இ— மீளமாட்டாதே கிடக்கப்பெற்றேனென்றபடி. ||௬||

✳ ஏழாம்பாட்டு. ✳

ஸங்கதிஸம்ப்ரதாயம் கீழேசொன்னதை ஸ்தாபிக்கிறார் (இந்தஸ்வரூபத்தைஸ்தாபித்தென்று) இதுக்கு ஆசைப்படாநின்றது என்கிறத்தோடே ஸம்பந்தம். இத்தால் தம்முடைய நெஞ்சுக்குக் கீழ்ப்பாட்டில்பிறந்த ஆஸக்திமுதிர்ந்ததென்கிறாரிப்பாட்டிலென்று ஸங்கதியோஜநை. பூர்வார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனிருக்கிறவித்யாதியால்) அதில் மாகவென்கிறவிடத்தில் மாஶப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுவோஸதித்யாதியால்) பாட்டுக்குப் ஸங்க்ஷிப்தார்த்தமருளிச்செய்கிறார் (என்னெஞ்சைக்கொண்டித்யாதியால்) ||௭||

✳ எட்டாம்பாட்டு. ✳

தம்முடையமனஸ்ஸுக்கு பகவத்விஷயத்தில்பிறந்த ப்ராவண்யாதிசயத்தை அருளிச்செய்யாநின்றவரிப்பாட்டிலே திருமலையை தேவர்கள் தொழுவார்களென்றுசொல்லுகை ப்ரஸங்ககமன்றோவென்ன வவதரிப்.

ஸ— ஸ்ரீகாரத்தாலு மாஸக்திபண்ணுவதும் பெரியபிராட்டியார் பக்கலிலேயே என்மனஸ்ஸுமிகவும் ஆஸக்திபண்ணுமதும் அந்தபரமபுருஷன் பக்கலிலேயே, இவைஇரண்டும் மற்றொருவிஷயத்தில் இல்லையென்று நாலுவகாரங்களாலும் ஸூசிதமாகிறது, அவன்பிராட்டிபக்கல் எப்படி ஆஸக்தனாயிருக்கும் அப்படி என்மனம் பரமபுருஷன்பக்கல் ஆஸக்தமாகிறதென்று தாத்பர்யம். ||௬||

ஆகம்சேர்- ஒருசரீரத்திலேசேர்ந்திருக்கிற, ஆகம்- சரீரம், நரசிங்கம்- நரத்தையும்ஸிம்ஹத்தையும் உடைத்தான, ஸாவயவ்யாநோநிர்தேசஃ. நரஸிம்ஹங்களையுடைத்தான வென்றபடி. அதாகி- அந்தஸ்வபாவாய், நரனென்றுதல் ஸிம்ஹமென்றுதல் சொல்லவொண்ணாதபடி விலக்ஷணஸ்வபாவாகையாலே அதாகியென்று ஸாமாந்யநிர்தேசித்தது. ஓராகம்- ஒருசரீரத்தை, பாஹ்யமோவகாரிணியான ஹிரண்யாஸுரதேஹத்தையென்றபடி. வள்ளுகிரால்- வளர்ந்தஉகிராலே, வஜ்ரஸமாநமாயாஸத்தாலே யென்றபடி. பிளந்தான்- விதாரணம்பண்ணினவன்; காணவேணுமென்றெல்லாருக்கும் ஆசைபிறக்கும்படி ஸௌலப்யசேஷ்டிதமுடையவனான ஸர்வேச்வரனென்றபடி. உறை- வஸியாநிற்கிறவிடமான, மாகம்- உத்க்ருஷ்டமான, மா- மஹத்து, கம்- ஆகாசம், பரமவ்யோமசப்தவாச்யமாய் பரமபதமென்று ச்ருதிகளாலே ஓதப்பட்டதானவென்றபடி. வைகுந்தம்- ஸ்ரீவைகுண்டத்தை, காண்பதற்கு- காண்கைக்கு, என்மனம்- என்னுடையமனஸ்ஸானது, இராப்பகலின்றி- அஹோராத்ரவிபாகமின்றிக்கே, ஏகம்- ஏகாகாரமாக, ராத்ரிஒருகாலமும் பகலொருகாலமுமாயிருக்குமிறே நாட்டார்க்கு, என்னெஞ்சுக்கெப்போதும் ஒருவேகாலமாயிற்றென்று கருத்து. எண்ணும்- சிந்தியாநிற்கும், இத்தனைப்ரவணமான நெஞ்சைக்கொண்டு நானென்னசெய்யக்கடவேனென்று நோகுறபடி. ||௭||

இருவினையும், புண்யபாபரூபங்களான ப்ரதிபந்தகங்களையும், இன்றிப்போக- இல்லாமல்போக, நிச்சேஷமாய்ப்போம்படியென்கை. கெடுத்து - நசிப்பித்து, இதற்கு உய்யக்கொள்வானென்கிறத்தோடே அந்வயம். ஒன்றி- ஸந்நிதித்து, திவ்யசேஷ்டிதார்த்தவஹுவஸ ஊர்வியேவஸர்வமாயென்றபடி. ஆக்கை- சரீரங்களிலே ப்ரவேசியாதபடி, இந்தசேதநர் புநர்ஜந்மங்களை யடையாதபடியென்கை, உய்யக்கொள்வான்- உஜ்ஜீவிப்பிக்கைக்கீடுடையவனான ஸர்வேச்வரன், நின்ற- ஸர்வஸுலபதையைக்கொண்டு நின்றருளுகிறவூரான; வேங்கடம்- ஸ்ரீவேங்கடகிரியானது, நீணிலத்துள்ளது- பூமியானா

மூ—இன்றிப்போகவிருவினையுங்கெடுத்* தொன்றியாக்கைபுகாமையுய்யக்கொள்வா* னின்றவேங்கடநீணிலத் துள்ளது* சென்றுதேவர்கள்கைதொழுவார்களே* ‖௮‖

தொழுதுமாமலர்நீர்சுடர்தூபங்கொண்* டெழுதுமென்னுமிதுமிகையாதலிற்* பழுதிறொல்புகழ்பாம்பணைப்பள்ளியாய்த்* தழுவுமாறறியேனுனதாள்களே* ‖௯‖

ஆ—(இன்றிப்போக) அவனைக்காண்கைக்குத் திருநாட்டிலேபோகவேணுமோ, இங்கே அணித்தாகத்திருமலையிலேயன்றோ அவன்நின்றருளுகிறதென்னில்? அத்தால் என்னெனக்கு, அங்குச்சென்றடிமைசெய்வார் அயர்வறுமமரர்களல்லரோவென்கிறார். ‖௮‖

(தொழுது) உமக்குத்தானங்கேசென்றடிமைசெய்கைக்குத் தட்டென்னென்னில், ஹேயப்ரத்யநீககல்யாணகுணவிசிஷ்ட ஶேஷிஶேஷாஸநஶாஸ்வத்ஸ்வதிவ்யஸூரிகளாலே பரிசரணீயனான உன்திருவடிமலர்களிலே ஸ்வரூபஜ்ஞானமில்லாத நானடிமைசெய்கைக்கு அர்ஹனல்லேனென்கிறார். ‖௯‖

(தாளதாமரையான்) தம்முடைய அநர்ஹாநுஸந்தானத்தாலே அவன் திருவடிகளிலடிமைசெய்கையில்

இ—பிக்கிறார் (அவனையித்யாதியால்) அணித்தாக- ஸமீபமாக, நீணிலத்தென்கிறவிடத்தில் உபலக்ஷணமருளிச்செய்கிறார் (அத்தாலென்னெனக்கென்று) த்ருதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அங்குச்சென்றித்யாதியால்). ‖௮‖

## ✳ஒன்பதாம்பாட்டு.✳

நித்யஸூரிகளடிமைசெய்கிற இடமாகையாலே நாமவ்விடத்துக்கர்ஹரன்றென்று கீழ்ச்சொன்ன அர்த்தத்தையே தழுவுமாறித்யாதியாலே சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு வ்யாக்யானமன்றோவென்ன அவதாரிப்பிக்கிறார் (உமக்குத்தானித்யாதியால்) தாம் அநர்ஹரென்னுமிடம் கீழ்ப்பாட்டிலே மறைந்திருக்கையாலே அத்தை இப்பாட்டிலே வெளியிடுகிறாரென்றதாயிற்று. த்ருதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஹேயேத்யாதியால்) ஶேஷியைச்சொன்னது உபலக்ஷணமென்றுகருத்தாலே ஶேஷாஸநாதிக்ரஹணம். பஞ்சமவாக்யத்தினர்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார் (பரிசரணேத்யாதியால்) த்ருதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வரூபமித்யாதியால்) ‖௯‖

## ✳பத்தாம்பாட்டு.✳

இப்படிதாம் அநர்ஹரென்றநுஸந்தித்தால் வாசிககைங்கர்யம்பண்ணுகை யுசிதமல்லாமையாலே இப்பாட்டில் அவனைஸ்துதிக்கை அஸம்பாவிதமன்றோவென்ன அவதாரிப்பிக்கிறார் (தம்முடையவித்யாதியால்)

ம—ஸந்நிதியிலே இராநின்றது, நீட்சி- உத்கர்ஷமாய் ஸௌலப்யத்தைக்காட்டுகிறது, திருமலையையுடைத்தாகையாலே ஸௌலப்யமானஸந்நிதியிலே யிராநின்றதென்றபடி. ஆனால்தானெனக்கென்ன ப்ரயோஜநமென்றுகருத்து. சென்று- அத்திருமலையிலேபோய், கைதொழுவார்கள்- கைங்கர்யஞ்செய்தருளுவார், தேவர்கள்- நித்யஸூரிகளன்றோ, ஆதலாலவ்விடத்துக்கு நாமாரென்றபடி. ‖௮‖

பழுதில்- பழுதில்லாத, பழுது- ஹேயம், ஹேயப்ரத்யநீகமானவென்றபடி. தொல்- அநாதியான, புகழ்- கல்யாணகுணங்களையுடையவனான, பாம்பு- ஶேஷனாகிற, அணை- ஶய்யையில், பள்ளியாய், கண்வளர்த்தியையுடையவனே? பள்ளி- ஶயநக்ரியை, பள்ளியையுடையவன் பள்ளியான், பள்ளியாயென்று ஸம்போதநம், மாமலர்- ஶ்ரேஷ்டபுஷ்பங்களையும், ஸௌரப்யமான ஸ்தவகாதிபுஷ்பங்களையுமென்றபடி, நீர்- அர்க்யபாத்யாதிஜலங்களையும், சுடர்- தீபாதிதேஜஸ்ஸுக்களையும், தூபம்- தூபத்தையும், கொண்டு- எடுத்துக்கொண்டு, தொழுது- ஸேவித்து, கைங்கர்யங்களைப்பண்ணியென்றபடி. எழுதுமென்னுமிது- எழுவோமென்கிறவிது, கைங்கர்யோத்ஸாஹநிர்பந்தத்தாலே உஜ்ஜீவிப்போமென்கிறவிதுவென்றபடி. மிகை- ப்ரகாரம், இப்படி கைங்கர்யத்தில் அதிகாரிகள் ஶேஷஶேஷாஸநாதிகளாக அவஸ்யரருளரென்றபடி. ஆதலில்- இப்படி ஸர்வோத்க்ருஷ்டதிவ்யஸூரிகள் உனக்கடிமைசெய்கையாலே, உனதாள்கள்- உன்னுடையதிருவடிகளை, தழுவுமாறு- பரிஷ்வங்கம்பண்ணும்ப்ரகாரத்தை, ஆறு- ப்ரகாரம், கைங்கர்யம்பண்ணும்ப்ரகாரத்தையென்றபடி. அறியேன்- அறியமாட்டுகிறிலேன், நானுனக்கடிமைசெய்கைக் கர்ஹனல்லேனென்றபடி. ‖௯‖

மூ— தாளதாமரையானுனதுந்தியான்* வாள்கொணீண்மழுவாளியுன்னாகத்தான்* ஆளராய்த்தொழுவாருமமர்க* நாளுமென்புகழ்கோவுனசீலமே* ॥௰॥
சீலமெல்லையிலானடிமேலணி* கோலநீள்குருகூர்ச் சடகோபன்சொன்* மாலையாயிரத்துள்ளிவைபத்தினின்* பாலர்வைகுந்தமேறுதல்பான்மையே* ஆழ்வார் திருவடிகளே சரணம். ॥௧௧॥

---

ஆ—நமக்குப்பிறந்த கூச்சமெல்லாம்போம்படியாகத் திருவேங்கடமுடையானுடைய நிரவதிகஸௌசீல்யகுணத்தைக்கண்டு ப்ரீதியாலே அக்குணத்தைப் புகழுகிறார். ॥௰॥

(சீலம்) சீலமெல்லையிலானாயிருந்த திருவேங்கடமுடையான் திருவடிகளுக்குத் திருவணிகலமாயிருந்த இத்திருவாய்மொழியோடே ஒருஸம்பந்தமுடையார் வைகுந்தமேறுகை ஸ்வபாவமென்றென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

---

இ— இப்படி ஸௌசீல்யகுணத்தை வர்ணித்து உபஸம்ஹரிக்கையாலே இத்திருவாய்மொழிக்கு அக்குணம் ப்ரதிபாத்யமென்றதாயிற்று, ॥௰॥

✳ நிகமனம். ✳

திருவணிகலம்- திருவாபரணம், பத்தினின்பாலர் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இத்திருவாய்மொழியோடி த்ருஷ்டியால்) பான்மையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வபாவமென்றென்று) ॥௧௧॥

---

ஈ— தாளதாமரையான்- தாளையுடைத்தான தாமரையிலிருக்குமவன், தாள்- நாளம், அப்போது ஸ்ருஷ்டிஸ்ருஷ்டியில்லாமையாலே தான்பிறக்கைக்கு ஒருஸ்ரஸ்ரம் ஒருகிழங்குமின்றிக்கே நாலமாத்ரஸாரியான நாபீபத்மத்தை ஆஸநமாகவுடைய ப்ரஹ்மாவானவனென்றபடி. இப்படி ஸ்வயம்ஜனுப் ஸ்ருஷ்ட்யதிகாரம்பெற்ற ப்ரஹ்மாவானவனென்கை. உனதுந்தியான்- உன்னுடைய நாபியிலேயிருக்கிறவன், வாள்கொள்- காந்தியையுடைத்தான, வாள்- காந்தி, தேஜிஷ்டமானவென்றபடி. நீள்- தீர்க்கத்தான, மழுவாளி- மழுவை ஆளுமவன், மழு- பரசு, ஸம்ஹாராதிகாரம்தோற்றும்படி பரசுபாணியாயிருக்கிற ருத்ரனென்றபடி. உன்னாகத்தான்- உன்னுடைய திருமேனியிலேயிருக்கிறவன், ஆகம்- ஶரீரம், "பஶ்யைகாதஶருத்ராந் தக்ஷிணம் பார்ஶ்வமாஶ்ரிதாந்" என்கிறபடியே உன் திருமேனியில் தக்ஷிணபார்ஶ்வஸ்தனென்றபடி. ஆளராய்- தாஸபூதராய், தொழுவாரும்- ஸேவிக்கிறவர்களும், அடிமைசெய்கிறவர்களுமென்றபடி. ஸர்வம் நாபியிலும் திருமேனியிலும் இருக்கிறவர்கள்மாத்ரமன்றிக்கே அடிமைசெய்வாரும் ப்ரயோஜநாந்தரபரர் என்கைக்காக. அமரர்கள்- அமரத்வமாகப்பெற்றிருக்கிற இந்த்ராதிதேவர்கள், உனசீலம்- இப்படி ப்ரயோஜநாந்தரபர அதிகாரிகளான ப்ரஹ்மாதிகளோடும் நீரந்த்ரஸம்ஶ்லேஷஸீலனான உன்னுடைய ஸௌசீல்யத்தை, நாளும்- ஸர்வகாலமும்கூடினாலும், என்புகழ்கோ- எதுவாக ஸ்தோத்ரிக்கக்கடவேன், காலமெல்லாம்கூடினாலு மின்னபடியென்று என்னால் சொல்லமுடியாதென்றபடி. ॥௰॥

சீலம்- ஸௌசீல்யகுணம், எல்லையிலான்- அவதியில்லாமலிருக்கிறவனுடைய, அடிமேல்- திருவடிகளிலே, அணி- அலங்காரமாயிருக்கிற, இது பத்துக்குவிசேஷணம், கோலநீள்- ஸௌந்தர்யவிஸ்தாரமாயிருக்கிற, கோலம்- ஸௌந்தர்யம், அதிரமணீயமானவென்றபடி. குருகூர்ச்சடகோபன்- திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய, சொன்மாலை- ஸூக்திஸந்தர்ப்பரூபமான, ஆயிரத்துள்- ஸஹஸ்ரத்திலே, இவைபத்தினின்பாலர்- இந்தபத்துப்பாட்டுக்களின் ஸம்பந்திகள், பால்- ஸம்பந்தம், பாலிலேயிருக்குமவர் பாலர், 'தெரித்தெழுதிவாசித்துங்கேட்டும்' என்கிறபடியே இத்திருவாய்மொழியோடே ஶ்ரவணபடனாதிகளாக ஏதேனுமொரு ஸம்பந்தமுடையவர்களென்றபடி. வைகுந்தமேறுதல்- ஸ்ரீவைகுண்டத்தை ப்ராப்திவாவது, பான்மை- ஸ்வபாவம், ஆத்மாவுக்கு நித்யத்வம்போலே இவர்களுக்கிது ஸ்வதஸ்ஸித்தமத்தனைபோக்கி ஸ்வபாவமென்றென்றபடி. 'மாகவைகுந்தம்காண்பதற்கென்மனமேகமெண்ணும்' மென்று தாம் ப்ரார்த்தித்தவை யித்திருவாய்மொழிபாடத்தாலேதம்முடைய அநுபந்திகளாகப்பெற்றவர்களெல்லாருக்கும் ஸ்வபாவமாய் வருமென்றுகருத்து. ॥௧௧॥

✳ ஜ்ஞாநவைராக்யநிஷ்டாநஶேவதயே ஶ்ரீவேதாந்தாசார்யராமாநுஜமஹாதேஶிகாய நம:. ✳

ஸ்ரீ:

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(ஓராயிரம்.)

நேதா ஸ்ரீநாதவத்த்வாஜ்ஜகதுதயலயஸ்தாபநாத் ஸம்ஸ்ரிதாநாம்
ஸ்தாநார்த்தாக்ஷஸ்ய தாத்ருத்வ ப்ரியவ்ருதி ஸ்ரியாவுக்தத:
ஸ்வாதூத்தேஸ்யத்வ மோக்ஷ ப்ரதத்வ ஸ்வஸ்தி ஸாஸ்த்ரநிஷ்டைஸ்
ஸர்வாதேசு ஸ்வாராந ஸ்ரீ ஹூத ஸ்ருத்தாந்த ரா ஜநா ॥கூ௦௩॥

(நேதா ஸ்ரீநாதவத்த்வாத்) பேராயிரம்கொண்டதோர் பீடையன் - ஸகல பரமார்த்தங்களாய் ஓரொன்றுதானே ஸஹஸ்ராக்ஷரமாக ரக்ஷிக்கக்கடவதான அநேகம் திருநாமங்களையுடையவனாகையாலும், (ஜகதுதயலயஸ்தாபநாத்) அவனை அகல்ஞாலம் படைத்திடந்தான் - லோகங்களுடைய ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களைப் பண்ணுமவனாகையாலும், (ஸம்ஸ்ரிதாநாம்) அரியைவணங்கிப்பற்றினார் - ஆஸ்ரிதருடைய அநிஷ்டங்களை ஹரிக்குமவனாகையாலும், (ஸ்தாநார்த்தாக்ஷஸ்ய) விண்ணுலகம்தரும் தேவனை - பரமபதத்தைக் கொடுக்குமவனாகையாலும், (X ஸ்வாதூத்தேஸ்ய) புனமேவியபூந்தண்டுழாயலங்கலிந்யாதி - துளஸீ ஸீதள தாள ஸீதள ஸௌகந்த்ய மிரவுஜுளியிருக்கையாலும், (ஸ்வாதூத்தேஸ்யத்வ ப்ரியவ்ருதி ஸ்ரியாவுக்தத:) அடைவதுமணிபார் மலர்மங்கைதோள் - தன்னோடேபிரிவற்ற பெரியபிராட்டியையும் ஸ்ரீநீளைகளையும் வாராஷிகாரமாக வுடையவனாகையாலும், மலர்மங்கையென்று பெரியபிராட்டியைச்சொன்னது உபலக்ஷணமென்று திருவுள்ளம். (ஸ்வாதூத்தேஸ்யத்வாத்) ஆளுந்சேர்நரசிங்கமதாகியித்யாதி - நரஸிம்ஹரூபத்தைக்கொண்டு விரோதியான ஹிரண்யனை ஸம்ஹரித்து ஸத்ருரான ப்ரஹ்லாதனிடத்தில் அநுக்ரஹத்தைப்பண்ணுமவனாகையாலும், (மோக்ஷப்ரதத்வ ஸ்வஸ்திஸாஸ்த்ரநிஷ்டை:) உய்யக்கொள்வான்நின்ற வேங்கடம் - ஸம்ஸாரிஜீவநார்த்தமாகத் திருமலையிலே நின்றருளுகையாலும், ஸூரிஸேவ்யத்தாலே மேலிற்பாட்டில் பழுதில்தொல்புகழ் பாம்பணையென்றுசொன்ன ஸேஷஸாயித்வம் ஸம்ப்ருஹீதம். (ஸர்வாதேசு ஸ்வாராந) தாளதாமரையானதுந்தியாணித்யாதி - ப்ரஹ்மாதிகளுக்குந் தன்திருமேனியிலே இடங்கொடுக்கையாலும், எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன் "ஓராயிரம்" என்கிற ஸூக்தத்திலே ஆழ்வாராலே உபபாதிக்கப்பட்டானென்கிறார். ॥கூ௦௩॥

*"வடிகாலஸ்ஸம்வந்திதாஸ" என்று பதினெண்ணாயிரத்தில் வரும்.

X இனமேதுமிலானை - ஈனமென்றது இனமென்று குறுகியிருக்கிறது, ஈனம் - குறைவு, என்று ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம்.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஸிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

✤✤✤ * ✤✤✤

# நாலாந்திருவாய்மொழி.

ஆ— (மைபார்கருங்கண்ணி) இப்படிஎம்பெருமானுடைய ஸௌஸீல்யாநுஸந்தாநத்தாலே சிதிலராய்

---

✤✤✤ நாலாந்திருவாய்மொழி. ✤✤✤

இ— இப்படியவனுடைய ஸௌஸீல்ய ப்ரணாநுஸந்தாநத்தாலே ஸக்தராயிருக்கிற ஆழ்வார் தாமே முன்பு "காணக்கருதுமென் கண்ணே" "கண்ணேஉன்னைக்காணக்கருதி யென்னெஞ்சு" மித்யாதியாலே கண்ணோடே தம்முடையநெஞ்சு மவனையாசைப்படாநிற்கிறதென்று அலற்றுகையாலே ஸாபிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) ஸகலஸவஸ்தகரணராகையாலே ஞாநஸம்பந்தமன்றோவென்ன ஸ்வகாரிப்பிக்கிறார் *
ஸாதனமும் கலங்கிப்போயிற்றென்றுகருத்து.

மூ— மறைந்தன்று குன்றமெடுத்தாநிரைகாத்தாய்* பிழைக்கின்றது அருளென்று பேதுறுவனே* ||௩||
உறுவதிதுவென்றுனக்காட்பட்டு நின்கட்* பெறுவதுதேதுகொலென்று பேதையேன்னெஞ்சம்* மறுகல்செய்யும்வானவர்தானவர்க்கென்றும்* அறிவதரிய அரியாயவம்மானே* ||௪||
அரியாயவம்மானை அமரர்பிரானைப்* பெரியானைப் பிரமனைமுன்படைத்தானை*

---

ஆ— நுப்பாந்ர ரக்ஷிக்கக்கடவதான உன்னுடைய நிரவதிககாருண்யவெள்ளத்திலும் காணகப்படாதோ வென்றஞ்சாநின்றேனென்கிறார். ||௩||

(உறுவது) நீ ஆஸ்ரிதஸௌலப்யமுடையனாயிருக்கச்செய்தே சிலருக்கரியையாயிருக்கையாலே எனக்குமரியையா யிருக்கில் செய்வதென்னென்று என்னெஞ்சு நடுங்காநின்றதென்கிறார். ||௪||

(அரியாய) உம்முடைய அபேக்ஷிதந்தானேதென்னில்? ஸம்ஸாரிகளான ப்ரஹ்மாதிகளுக்குங்காரணபூத

---

இ— மாயிறு. த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உபாயத்ருஷ்டியால) த்விதீயபாதத்துக் குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடையதிருஷ்டியால்) ||௩||

* நாலாம்பாட்டு. *

அரியாயவம்மானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சிலருக்கிதருஷ்டியால்) இத்தால் நாமாஸ்ரித ஸுலபனாயிருக்க நீரிப்படி பயத்தாலே கலங்குவானேனென்ன அதுக்குத்தரமருளிச்செய்கிறாரென்று பாவம் ஸித்தமிறே. இனிக்கட் பெறுவதுதிருஷ்டிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்குதிருஷ்டியால்) ||௪||

* ஐந்தாம்பாட்டு. *

இரண்டாம்பாட்டில் அபிதாநத்திலேசொன்ன அர்த்தத்தையே சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு பௌநருக்த்யமன்றோவென்ன அதனிப்பிக்கிறார் (உம்முடைய திருஷ்டியால்) கீழ்ப்பாட்டிலே பெறுவதேது கொலென்று ஸாமாந்யேந சொன்னவாறே, உம்முடைய அபேக்ஷிதந்தானேதென்று ஸங்கைபிறக்கவதுக்

---

ஶ— அன்று- அந்தகாலத்திலே, இந்த்ரன் க்ரோதத்தாலே ஸப்தமேகங்களை யேவினகாலத்திலே, மறைக்கு- அந்த வர்ஷத்துக்காக, குன்றமெடுத்து- பர்வதத்தையெடுத்து, ஆநிரை- கோபஜிகளை, ஆவென்று மோவு க்குப்போ, ரக்ஷாபேக்ஷைபண்ணவுமறியாத பசுக்களையென்றபடி. காத்தாய்- ரக்ஷித்தருளினவனே, அருள்- ஸர்வவிஷயமான உன்னுடைய க்ருபையானது, பிழைக்கின்றதென்று- தப்பாநின்றதென்று, இப்படி ஸர்வப்ராணிஸம்ரக்ஷணப்ரவீணமான உன்னுடைய க்ருபையானதென்னை கைக்கொள்ளாதே விடப்பா ராநின்றதென்று என்றபடி. பேதுறுவன்- கலங்காநின்றேன், பேது- சோகம், உறுகை- அடைகை, பயத் தாலே கலங்காநின்றேனென்றபடி. ||௩||

வானவர்தானவர்க்கு- தேவதாநவர்களுக்கு, என்றும்- ஸர்வகாலமும், அறிவது- உள்ளபடியறிகைக்கு, அரிய- அஸக்யனை, அரியாய- ஹரியாய, ஹரி- ஸிம்ஹம், நரஸிம்ஹரூபனாய் ப்ரஹ்லாதாழ்வானுக்கு ஸுலபனனென்றபடி. அம்மானே- ஸ்வாமீ, இது உறுவதென்று- இந்த கைங்கர்யமே நம்ஸ்வரூபத் துக்குசிதமென்று. உறுவது- உசிதம், உனக்காட்பட்டு- உனக்குதாஸனாயிருக்கையை அங்கீகரித்து, நின் கண்- உன்பக்கல், கண்ணென்று ஸப்தம்யர்த்தம். கண் பெறுவதென்கிறவிடத்தில் ஐகாரலோபகாரே ஹாரடகாரரேசம். பெறுவது- நானடையப்புகுகிறது, எதுகொலென்று- எதுவோவென்று, உன்னைக்க ண்டுஸேவிக்கையோ காணாதே கேவலம் ஸம்ஸாரத்தில் ஸ்திதியோவென்று என்றபடி. பேதை- அவி வேகரூபமான, நாமதிஸங்கிபண்ணினபடியே ஹிதகுமென்னுமறிவில்லாததான என்றபடி. என்னெ ஞ்சம்- என்னுடையமநஸ்ஸானது, மறுகல்செய்யும் சோகம்செய்யாநிற்கும், மறுகல்- சோகம், மலங்கா நிற்குமென்றபடி இந்த ப்ரஹ்மாதிகோடியிலே கூடுகிறேனோ, தேவதாநவகோடியிலே கூடுகிறேனோவென் றஞ்சிக் கலங்காநின்றதென்கை. ||௪||

பிரமனை- ப்ரஹ்மாவை, முன்- "யோ ப்ரஹ்மாணம்விததாதி பூர்வம்" மென்கிறபடியே வ்யஷ்டிஸ்ருஷ்டிக்கு முன்னே, படைத்தானை- ஸ்ருஷ்டித்தவனை, பெரியானை- ஸர்வேஸ்வரனை, அமரர்பிரானை- நித்யஸூரி களுக்கு ஸத்தாதிநிர்வாஹனென உபகாரகனை, அரியாய- அநிஷ்டமான, "நாரஸிம்ஹவபுஸ்ஸ்ரீமான்" என்கிறபடியே ஆஸ்ரிதர்க்காக அழகியசிங்கமான, அம்மானே- இந்த ஆஸ்ரிதஸௌலப்யத்தாலேயென்னை வசீகரித்

மூ— வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற* கரியான்கழல்காணக் கருதுங்கருத்தே* ॥௫॥
கருத்தேயுன்னைக் காணக்கருதி யென்னெஞ்சத்* திருத்தாகவிருத்தினேன் தேவர்கட்கெல்லாம்* விருத்தா
விளங்குஞ் சுடர்ச்சோதியுயரத்* தொருத்தா வுன்னை யுள்ளுமென்னுள்ள முகந்தே* ॥௬॥

ஆ— னைகயாலே ஸர்வேஶ்வரனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், ஸகலமநுஜநயநவிஷய ஶரீரவிஶிஷ்டனாய், ஆஶ்ரிதர்க்கு ஸந்தர்ஶநம் பண்ணுகைக்காகத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளுகிற கரியான்கழல்காண ஆசைப்படாநின்றது என்னெஞ்சமென்கிறார். ॥௫॥

(கருத்தே) இப்படி நானுன்னைக்காண விழிக்குமளவில் திருநாட்டிலிருக்கும்படியே வந்தென்னெஞ்சிலே புகுந்தருளின வுன்னையென்னெஞ்சுகந்து ஸ்வீகரியாநின்றதென்கிறார். ॥௬॥

இ—குத்தரமருளிச்செய்கிறாரென்றுகருத்து. பெரியானை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனையென்று) அமரர்பிரானை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அயர்வறு மித்யாதியால்) அரியாயவம்மானை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலேத்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதர்க்கித்யாதியால்) ॥௫॥

✷ ஆறும்பாட்டு. ✷

உன்னைக்காணக்கருதி யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) விளங்குமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாட்டி லித்யாதியால்) என்னெஞ்சத்திருத்தாக விருத்தினேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சிலே யித்யாதியால்) இத்தால் தா மிழிக்குமளவில் தம்முடைய திருவுள்ளத்திலேயவன் ப்ரத்யக்ஷீக்ருதனைப்போலே வந்து ப்ரகாஶிக்க அவனை யநுபவிக்கிறாரென்று ஸம்பதி ஸூசிதை. உன்னையுள்ளுமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சுகந்தித்யாதியால்) ॥௬॥

ஈ—தெனக்கு ஸ்வாமியான, வரிவாளரவின்- வரியையும் வாளையுமுடைத்தான நாகத்தினுடைய, வரி- அழகு, வாள்- காந்தி, அணை- ஶய்யையிலே, நாகத்தினுடைய ஶய்யையாவது- ஶேஷனுடைய ஶரீரமாகிற ஶய்யையென்றபடி. பள்ளிகொள்கின்ற- ஶயநக்ரியையைக் கொள்ளாநிற்கிற, கண்வளர்ந்தருளாநிற்கிற வென்றபடி. கரியான்- நீலவர்ணனை, இங்கு த்விதீயாவிபக்தி ஷஷ்ட்யர்த்தேயாயிருக்கிறது. 'கரியான்கழல் காண' என்கிற பாடமன்றிக்கே 'கரியான் தனைக்காண' என்றும் பாடமுமுண்டு. அப்போது த்விதீயாவிபக்தி ஸாது. இதெல்லாமுரையிற்சொன்ன வ்யாக்யானம். ரஜதகிரியின்மேலேயொரு காளமேகம் சாய்ந்தாப்போலே திருவனந்தாழ்வான் திருமேனிக்குப் பரபாகமாம்படி நீலவர்ணனான ஸ்வாமியை யென்றபடி. கழல்- திருவடிகளிலே, காண- ப்ரத்யக்ஷமாக வநுபவிக்கைக்கு, அவனைத்திருவடிகளிலே யநுபவிக்கையாவது அவனுடையதிருவடிகளை யநுபவிக்கையென்றபடி. கரியான்தனைக்காணவென்று பாடமானபோது தனை யென்றது ஸ்வார்த்திகம். கரியானை யநுபவிக்கைக்கென்றபடி. கருத்து- ஆஶயமானது, என்னுடைய மநஸ்ஸானதென்றபடி. கருதும்- அபிஸந்தி பண்ணாநிற்கிறது, ஆசைப்படாநிற்கிறதென்றபடி, ॥௫॥

கருத்தே- எனக்குக் கருத்தானவனே, நானவஸந்நனாகாதபடி எனக்கு ஜீவநமானவனே என்றபடி. எனக்கு அநுபவாதிஶக்திப்ரதனே என்கை. தேவர்கட்கெல்லாம்- நித்யஸூரிகளுக்கெல்லாம், விருத்தா- வ்ருத்த:, அநாதிஶேஷியானவனே யென்றபடி. விளங்குஞ்சுடர்- ஜாஜ்வல்யமான ப்ரகாஶரூபியான, சோதி- ஸ்வப்ரகாஶமயமா ஜ்யோதீரூபமான, உயரத்து- உன்னதமான லோகத்தில், "விஶ்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷ்வநுத்தமேஷூத்தமேஷு லோகேஷு" என்றுசொல்லப்பட்ட பரமபதத்திலிருக்கிற வென்றபடி. ஒருத்தா- அத்விதீயனே, உன்னை- ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ரஸிகனானவுன்னை, காண- ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கைக்கு, கருதி- இச்சித்து, என்னெஞ்சத்து- என்னெஞ்சிலே, இருத்தாக- ஸ்திரப்ரதிஷ்டமாம்படியாக, இருத்தினேன்- வைத்துக்கொண்டேன், ஒரு இச்சாமாத்ரத்திலே உன்னை யென்னெஞ்சுக்குள்ளே பெற்றேனென்று பதார்த்தம். நானிச்சித்தமாத்ரத்திலே நீயென்னெஞ்சிலே ஸ்திரனாகப்புகுந்தருளினையென்று தாத்பர்யம். என்னுள்ளம்- என்னுடைய மநஸ்ஸானது, உகந்து- ஸந்துஷ்டமாய், உன்னை- இப்படி ஸந்நிஹிதனான ॥௬॥
வுன்னை, உள்ளும்- உள்ளாநிற்கும், உள்ளுகை- சிந்திக்கை, அநுபவியாநிற்கிறதென்றபடி.

மூ—உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத்தகம்பா* லகந்தானமர்ந்தேயிடங்கொண்டவமலா?* மிகுந்தானவன் மார்பகலமிருகூறு* நகந்தாய்நரசிங்கமதாயவுருவே* ‖எ‖
உருவாகியவாறுசமயங்கட்கெல்லாம்*

ஆ—(உகந்தே) என்னுள்ளேபுகுந்தருளின வுன்னழகையும் செயலையுமென்னெஞ்சுகந்துகொண்டநுஸந்திக்க; இதுகாரணமாக நீ மிகவும் ப்ரீதனாய் உன்னைக்காணப்பெறாமையாலே கலங்கினவென்னெஞ்சு தெளியும்படி யென்னெஞ்சை யெற்றைக்குமிடமாகக்கொண்டருளினாயென்கிறார். ‖எ‖

(உருவாகிய) வேதபாஹ்யமான ஷட்ஸமயங்களில் நான்புகாதபடி உபஹஸித்து ஸர்வாந்தர்யாமியான தன்னைத்தன்னை

✳ ஏழாம்பாட்டு. ✳

இ— நரசிங்கமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னழகையுமென்று) என்னுள்ளேபுகுந்தருளின வென்றது- கீழ்ச்சொன்னத்தை யநுவதித்தபடி. மிகுந்தானவனித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (செயலையுமென்று) உகந்தேயுள்ளுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சித்யாதியால்) இவ்வநுவாதத்துக் கபிப்ராயமருளிச்செய்கிறார் (இதுகாரணமித்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டிலே யவனைக்காணப்பெற்றவ ரிப்பாட்டிலே யவன் தன்பக்கல் மிகவும்ப்ரீதனாயிருக்கும்படியைக் கொண்டாடுகிறாரென்று ஸங்கதிஸூசிதை. அமலாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னைக்காணவித்யாதியால்) என்னுள்ளத்தகமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சையெற்றைக்குமித்யாதியால்) ‖

✳ எட்டாம்பாட்டு. ✳

அவனித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதேத்யாதியால்) எல்லாப்பொருட்க்கு மருவாகியவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதியால்) கண்ணனையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னையித்யாதியால்) காணவுமென்கிறவிடத்தில் உம்மைத்தாலேகீழ்ச்சொன்ன ஜ்ஞாநஸாத

பத— நரசிங்கமதாய- நரரூபமும்ஸிம்ஹரூபமுமாய் கலந்துவந்தவிலக்ஷணமான, உருவே- ரூபத்தையுடையவனே; மிகுந்தானவன்- மிகாநின்றுள்ள ஜ்ஞாநவனுடைய, ஆதிக்யத்திலே யாசகனாயிருந்துள்ள ஹிரண்யாஸுரனையென்றபடி. தன்பக்கல் த்ரோஹமாத்ரமன்றிக்கே 'ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்' என்கிறபடியே தனக்குமஹாத்மாவான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானையிறே அவன்விரோதித்தது, மார்பகலம்- வக்ஷஸ்ஸினுடைய குமாரமானது. அதிவிஸ்தீர்ணமான வக்ஷஸ்ஸானதென்றபடி. இருகூறுநகந்தாய்- இரண்டுகூறாம்படியான நகத்தையுடையவனே. கூறுமென்கிறவிடத்தில் மகாரம் ஸம்ஹிதயாலோபமாயிருக்கிறது. நகத்தையுடையவன் நகத்தான், இச்சப்தத்தாலே ஸம்போதனச்சொல்லும்போது நகத்தாயென்றுரூபம், நகத்த:யென்கிற ரூபம் நகந்தாயென்று சேதர்ஷ்ணமாயிருக்கிறது, இத்தைத்தமிழர் வலிலொற்றுமெல்லொற்றாயிருக்கிறதென்பர்கள், ஹிரண்யவக்ஷஸ்ஸானது அநாயாஸமாம்படி பண்ணவல்ல நகங்களையுடையவனேயென்று வசனம். உகந்தே- ஸந்தோஷித்துக்கொண்டே, ஏவகாரம் அயோகவ்யவச்சேதவாரம், ஸர்வகாலமும் ஸந்தோஷயுக்தமாயென்றபடி. உன்னை- நிரதிசயபோக்யனானவுன்னை, உள்ளும்- உள்ளாநிற்கிற, அநுஸந்தியாநிற்கிறவென்றபடி. என்னுள்ளத்து- என்மனஸ்ஸினுடைய, அகம்பாலகம்- அந்த:ப்ரதேசத்தினுள்ளே அகம்- உள்ளு, பால்- ஸ்தலம், ப்ரதேசமென்றபடி. இதுக்கு இடங்கொண்டவென்கிறத்தோடே யந்வயம். தான்- ஸர்வேச்வரனாயென்று தாத்பர்யம். அமர்ந்தே- ப்ரீதியுடனாகக்கொண்டே, அவதாரணத் தாலினியொருநாளும் விடாதவனாய்க்கொண்டென்றபடி. இடங்கொண்ட- இருந்தருளினவனான, அமலா- நிர்மலனே, கலங்கினவென்னெஞ்சு தெளியும்படியாக விருந்தருளினவனேயென்றபடி. இப்பாட்டிலவனுடைய கல்யாணகுணங்களைச் சொல்லியேத்துகிற ஜாதமாயிருக்கையாலே 'ப்ரஹ்மண்யதேவ' ஸ்ரீதவத்ஸ' வாஸுதேவாபராஜித' என்னுமாப்போலே கேவலஸம்போதநமாய் முடிந்திருக்கிறது. ‖எ‖

உருவாகிய- சிலசேதநங்களான, உரு- சேதநம், ஸ்வாதந்த்ரீதியிலேவையுமொருசேதநமென்று தோற்றுநிற்கிறவையானவென்றபடி. ஆறுசமயங்கட்கெல்லாம்- ஷட்ஸமயங்கட்கெல்லாம், பாஹ்யகுத்ஸிதரூபதேசிக வாஸநாவதாவ்ய ஷட்ஸமயங்களெல்லாவற்றிற்குமென்றபடி. அவன்- அந்த ஸர்வேச்வரன், பொருவாகின்றான்- துடையாய்நின்றான், அவைற்றில் நான்புகாதபடி உபஹஸித்து

ஸ்ரீ:

[illegible]

(மையார்கருங்கண்ணி.)

[illegible]

[illegible]

[illegible]

[illegible] ॥கoகூ॥

([illegible]) கமலமலர்மேற் செய்யாள் திருமார்பினிற்சேர் திருமாலே- பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே யுடையவனாகையாலும், ([illegible]) கண்ணேயுன்னை...நண்ணுதொழியேன்- [illegible] மானைப்போலே ஆஸ்ரிதருக்கு [illegible]னாகையாலும், ([illegible]) மழைக்கன்று குன்றமெடுத்தாநிரைகாத்தாய்- இந்த்ரன் பசிக்கோபத்தாலே வர்ஷிக்க மலையையெடுத்துப் பசுக்களையு மிடையரையும் ரக்ஷிக்கையாலும், ([illegible]) வானவர் தானவர்க்கென்று மறிவரிய- தேவதைகளுக்கும் அஸுரர்களுக்குமென்று மொக்க வறிய வரியனாயிருக்கையாலும், ([illegible]) அரியாயவம்மானே யித்யாதி- [illegible]யாகையாலும், ([illegible]) தேவர்கட்கெல்லாம் விருத்தா- அயர்வறுமமரர்களுக்குத் தலைவனாயிருக்கையாலும், ([illegible]) உன்னுமென்னுள்ளத் தகம்பொருகந்தானமர்ந்தே யிடங்கொண்ட- ஆஸ்ரிதருடைய ஹ்ருதயத்திலே வஸிக்கையாலும், ([illegible]) கண்ணனைக் கண்டுகொண்டேனே- அவர்களுக்கு [illegible]னாகையாலும், ([illegible]) கண்டுகொண்டித்யாதி- அடியானிவனித்யாதி- அதிலு மவர்களிடமத்யந்தம் [illegible]யாலே யவர்களபேக்ஷித்தபடியே க்ருபைபண்ணி க்ருதார்த்தராக்க வல்லனாகையாலும், எம்பெருமான் உடையவனாயாலும், லோகமெல்லா முடைமையாகையாலும் இத்தை [illegible] [illegible]த்தாலே ரக்ஷித்தருளுகிறானென்று 'மையார் கருங்கண்ணி' யிலே மாறனருளிச்செய்தாரென்கிறார். ॥கoகூ॥

[illegible]

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் நாலாந்திருவாய்மொழிமுற்றிற்று.



# ஐந்தாந்திருவாய்மொழி.

ஆ— (இன்னுயிர்ச்சேவலும்) இப்படியெம்பெருமானைப் ப்ரத்யக்ஷித்தாப்போலே திருவுள்ளத்தாலே [illegible] [illegible] பாஹ்யஸம்ஸ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய், அது கைவாராமையாலே எம்பெருமானோடு கலந்துபிரிந்தாளொருபிராட்டியைப்போலே [illegible]ராய், அவளுடைய பாசுரத்தாலே தம்முடைய [illegible]த்தைப்பேசுகிறார். இப்பிராட்டி தான் எம்பெருமானைப் பிரிந்திருக்கிற [illegible]த்திலே சிலகுயில்களுடைய கூக்

ஐந்தாந்திருவாய்மொழி.

இ— இப்படி [illegible]ராயிருக்கிறவாழ்வா ரித்திருவாய்மொழியிலே விரஹிணியினுடைய பேச்சுக்களைப் பேசுகை [illegible]மன்றோவென்ன வதரிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) ப்ரத்யக்ஷித்தாப்போலே [illegible] [illegible] [illegible]வித்தவாறே பாஹ்யஸம்ஸ்லேஷத்திலே [illegible] பிறந்ததென்று கருத்து. இப்பிராட்டி தான் [illegible]களான கோகிலஸாரஸாதிகளை க்குறித்து 'என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்கு மித்தனை வேண்டுமோ' 'என்னுயிரவன் கையதே' இத்யாதியாலே- என்னுயிரைவாங்கி யவனுக்குக்கொடுக்கைக்கு மும்களுக்கித்தனை யத்நம் வேணுமோவென்னும், என்னுயிரவன்கையி லகப்பட்டதானபின்பு நீங்களெதுக்கு யத்நம்பண்ணுகிறீர்களென்னும், இப்படிகளிலே சில [illegible]ங்களைப்பேசுகை [illegible]மன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (இப்பிராட்டிதா னித்யாதியால்) இங்கு குயில்களைச்சொன்னது அன்றில் முத

மூ—வித்தகன்கோவிந்தன்மெய்யனல்லனொருவர்க்கு* மத்தனையாமினியென்னுயிரவன்கையதே* ||௨||
அவன்கையதேயெனதாருயிரன்றிற்பெடைகா* ளெவஞ்சொல்லிநீர்குடைந்தாடுதிர்புடைசூழவே* தவஞ்
செய்திலாவினையாட்டியேனுயிரிங்குண்டோ*

ஆ—மித்தனைவேண்டுவதில்லையென்றுசொல்ல, அவையும் உன்னோடுள்ளகலவியே யாலம்பமாயிருக்கிறவனொருக்ஷணமுன்னைப் பிரியுமளவிலவனையிங்ஙனேகொடுமைசொல்லவேணுமோ தானேவருகிறானிறேயென்ன, அவனங்ஙனே ப்ரணயஸாக்ஷனைப்போலே யிருக்குமத்தனைகாண், அவனொருவர்க்கும் மெய்யாகவெண்ணியல்லன் ஆனபின்பு அவன்வருகையென்றொரு பொருளுண்டோ, ஆனபின்பு யென்னுயிரானது முடிந்ததிறே யென்கிறாள். ||௨||

(அவன்கையதே) எம்பெருமானோடுகலந்து பரிமாறுகைக்கு ஸாத்யஸீமையான வென்னுயிர் நும்மெங்கு

இ— (அவையுமித்யாதியால்) அவையிப்படி தடஸ்தமாகச்சொல்லுகிறனவாக ஶங்கித்து அதுக்குத்தரம் சொல்லுகிறாளென்றுகருத்து. வித்தகன் கோவிந்தனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனங்ஙனேயித்யாதியால்) மெய்யனல்லனொருவர்க்குமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனொருவர்க்குமித்யாதியால்) இதுக்கு ஹேதுமருளிச்செய்கிறார் (ஆனபின்பித்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆனபின்பித்யாதியால்) ||௨||

*மூன்றாம்பாட்டு.*

தவஞ்செய்திலாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானோடித்யாதியால்) இந்த

ஸ—கிவையெல்லாம் த்ருஷ்டாந்தரவஸ்துக்களன்றோவென்று கருத்து. இத்தனை வேண்டுவதன்று. என் ப்ராணனை யபஹரித்து அவனுக்குக் கொடுக்கைக்கு மித்தனை யாயாஸ வ்யாபாரங்களபேக்ஷிதங்களன்று, நீங்களிது செய்யத்தொழியவேணுமென்று உபாலம்பமாக பாவிக்கிறபடி. அந்தோ- அய்யோ! தானிப்படி யாவித்துக்கொண்டு நிற்கசெய்தேயும் ஜீவிக்கத்துடங்கினவாறே ஶரணமென்ற வாயை யம்புகளாலே நிறைப்பாரைப்போலே நீங்களித்தனை க்ரூரக்ருத்யக்களாகவேணுமோ என்று கருத்தாலே அய்யோவென்று சொல்லுகிறாள். க்ஷணிகஜீவிதனானவன் ஸம்ஶ்லேஷம் விஶ்லேஷித்தவாறே அவனை எங்களைக்கொண்டுன்னை நலிகிறானாகச்சொல்லுகை யுசிதமோவென்ன சொல்லுகிறாள். வித்தகன்- விஸ்மயநீயனான, ஆஶ்ரிதர்க்கு ஸாமஹனைப் போலேயிருந்து தாஸேஷணைகத்தக்க வாத்ஸல்யஸேதனான வென்றபடி. பிறர்களுக்கறிய வித்தகனாயிருந்தவனிப்போ தாஶ்ரிதர்க்கறிய வித்தகனானனென்றுகருத்து. கோவிந்தன்- கோக்களைக்காத்துரக்ஷித்த க்ருஷ்ணனானவன், இது உபலக்ஷணம், ரக்ஷகன்போலேயிருந்து பாதகனுமவனென்றபடி. ஒருவர்க்கும்- ஸநகாதிகளோடு ப்ரஹ்மாதிகளோடு வாசியற வொருஜனங்களுக்கும், மெய்யனல்லன்- ஸத்யஸந்தனல்லன், ஸத்யமானஸங்கல்பத்தை யுடையவனல்லனென்றபடி. 'ஸாஜோஸிந்தோமிஹாஸேதே' 'நத்யஜேயம் கதஞ்சந' என்ற ராமாவதாரம்போலே நினைத்திராதேகொள்ளுங்கோளித்தை, பகலையிரவாக்குவது க்ருஷ்ணாவதாரமென்றேனென்ருயவம்மெடுப்பதாகையிறே யிவ்வவதாரத்துக்கு க்ருத்யம், இனி- இப்படியிவன் ஸங்கமொழிந்த பின்பு, என்னுயிர்- சக்ஷுஶ்ரவணமான வென்னுடையப்ராணனானது, அவன்கையதே- அவனுக்குக்கரஸ்தமாயே, ஆமத்தனையென்று மாறியவைப்பது, ஆய்விடுமத்தனை. அத்தனையென்றது உதாஸீனவாசகம், ப்ராணனுக்கிதுவொழிய வேறுகதியில்லையென்றபடி. ||௨||

அன்றிற்பெடைகாள்- ஸாரஸஸ்த்ரீகாள், எனது- ஜீயமான, ஆருயிர்- ஸர்வப்ராணனானது, என்னுடைய ஸ்வஸ்ரூப்ராணனுமென்றபடி. அவன்கையதே- அவனுக்கு கரஸ்தமாயேயிருக்கிறது, ஏகாரம் ப்ரஸித்திஸம்ப்ரத்யாதகம். காகுதிதியென்று லவனுடையப்ராணன் காகுனுடையகையிலேயிறே யிருப்பது. இவ்வவஸ்தைகளுக்கு ஸ்வாதீனமன்றேவென்றபடி. தவம்- தபஸ்ஸை, செய்திலா- செய்ததில்லாதவளான, அவனோடு நிரந்தரஸம்ஶ்லேஷம்பண்ணுகைக்கு ஸாத்யம்பண்ணாதவளான வென்றபடி. வினையாட்டியேன்- கருமங்களையுடையவளான வென்னுடைய, உங்களாலேயிப்படி நலிவுபடும்படிக்கீடான தோஷகருமங்களையுடையவளான வென்னுடையவென்றபடி. உயிர்- ப்ராணனானது, நும்- உங்களுடைய, ஏங்குகூக்குரல்- ஏங்காநின்றுள்ளகூக்குரலே- கூக்குரல்- ஆஹ்வானகண்டநி, ப்ராணபாரவஶ்யத்தாலே மதீயஸத்தாய் ஸம்ருத்

மூ— ஏவஞ்சொல்லிநிற்றும் நும்மேல்குகூக்குரல்கேட்டுமே*
கூக்குரல்கேட்டு நங்கண்ணன் மாயன் வெளிப்படான்* மேற்கிளைக்கொள்ளேன்மின் நீரும் நுஞ்சேவலும் ‖ ரு ‖

ஆ— கூக்குரல்கேட்டு மயங்கிக்கிடக்கச்செய்தே அதின்மேலே ஏதேனுஞ்சொல்லிக்கொண்டு என்குடைந்தாடுகிறீகோளென்னருகே நின்றென்கிறாள். ‖ ரு ‖

(கூக்குரல்) கோழிகாள் நீரும் நுஞ்சேவலும் மேன்மேலுமவனை யென்செய்யக் கூவுகிறீகோளென்ன? நாங்களவனை வரக்கூவுகிறோம் என்று அவைசொல்ல, அவன்வருகைக்குக் கூவுகிறீகோளாகில் அவன்வாரா

இ— ண்டோவெவஞ் சொல்லிநிற்றுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மயங்கியித்யாதியால்) இத்தால் மிகவும் நோவுபட்ட வென்னைப் பீடிபாதேகொள்ளுங்கோளென் றவ்வன்றில்களோமிளவும் பாவிக்கிறதென்று ஸம்க்ஷிப்தமிதித. த்வீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஏதேனுமித்யாதியால்) ‖ ரு ‖

✳ நாலாம்பாட்டு. ✳

உங்களுடையகூக்குரல் எனக்கு பாதகமாகாநிற்கிறதென்கை ப்ரகாரணத்துக்குசிதமாயிருக்க வப்படிச்சொல்லாதே யித்தைக்கேட்டவன்வருகிறிலனென் றிப்படிச்சொல்லுகை யஸம்கதமன்றோவென்ன; இதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (கோழிகாளித்யாதியால்) இத்தாலன்றிலோடு பேசாநிற்கச்செய்தே நடுவே மயூரங்கள் கேகாரவம்பண்ணினவாறே யவற்றைநோக்கி வார்த்தைசொல்லுகிறாளென்று ஸம்க்ஷிப்தமிதித. மேன்மேலுமென்றது- உத்தரோத்தரமாகவென்றபடி. இதுக்கு கூவுகிறீகோளென்கிறத்தோடே யந்வயம். த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன்வருகைக்கித்யாதியால்)

மூ— ந்யாஹாராவ்யமான கண்டத்வநியையென்றபடி. கேட்டும்- ச்ரவணம்பண்ணியும், சவிஶேஷம்ப்ராணேநிதியினுடைய வத்யந்தாஸம்பாவிதகத்வம் த்யோதகம். இருந்தோட- என்பக்கலிருக்குமோ, சவஶமாய்விட்டதிறேயென்றபடி. எவம்சொல்லி- எத்தைச்சொல்லி, நிற்றும்- நிற்போம், எந்தவவலம்பநத்தைச் சொல்லிக்கொண்டு யரிக்கப்புகுகிறோமென்றபடி. வாஞ்மாத்ரத்தாலே சொல்லுகைக்குமொரு அவலம்பநமில்லையென்றுகருத்து. நீர்- நீங்கள், எவம்சொல்லி- ஏதேனுமொரு ப்ரணயஸரஸோக்திகளைச் சொல்லிக்கொண்டு, குடைந்து- ஸுஸக்ருதிஶபத்தாலே வரஸாம் ஶரீரத்துக்குள்ளே ப்ரவேஶிப்பாரைப்போலே சநேத்ரசேதநங்களை ஸநேத்ரநேத்ராவேக்ஷாத்யவயவங்களுக்குள்ளே நுழைத்துக்கொண்டு ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணியென்றபடி, புடைசூழவே- பரிஸரமெல்லாம் வ்யாப்தமாம்படியாகவே, புடை- பரிஸரம், என்னுடைய பரிஸரத்தைச் சுற்றிலுமென்றபடி. ஆடுதிர்- ஸஞ்சரியாநின்றீகோள், உங்களுடைய ப்ரணயகாரித்ரிதாகரணநாதத்திலே நான் விஹ்வலப்ராணையாயிருக்க; அதின்மேலே யித்தனைஶ்ரம்மாரவேஷ்டநங்களையு மென்கண்ணெதிரே செய்யவேணுமோ, நீதியானவென்பக்கல் தயைபண்ணி யித்தைத்தவிரலாகாதோவென்றுகருத்து. ‖ ரு ‖

கோழிகாள்- மயில்காள், கோழியென்று மயிலுக்குப்பேர். மயூரஸ்த்ரீகாளென்றபடி. கீழெல்லாம் ஸ்த்ரீவக்ஷிகளையிறே ஸம்போதித்தது. இப்பாட்டிலேயும் மேல் நீரும்நுஞ்சேவலும் என்று நிர்தேசித்ததிறே. கூக்குரல் கேட்டு- கூவுகிற த்வநியைக்கேட்டு, இதுக்கு வெளிப்படானென்கிறதோடே யந்வயம். மாயன்- ஆஶ்சர்யசேஷ்டிதனான, ஸம்ஶ்லேஷிக்கும் ஸமயத்தில் மெய்போலேயிருக்கவல்ல வாஶ்சர்யசேஷ்டிதனானவென்றபடி. நம்கண்ணன்- ப்ரவிஶனான க்ருஷ்ணன், நமமென்று ப்ரவிஶி. வடபக்ஷப்ரவிஶிபோலே ஆச்ரிதர்க்கெல்லாம் ஸாதாரணமென்று ப்ரவிஶியைபுடையவனான க்ருஷ்ணனென்றபடி. வெளிப்படான்- ஆவிர்பவியான், 'தாஸாமாவிரபூச்சௌரி' என்று ப்ரகாஶித்தாப்போலே ப்ரகாஶியாநிற்கிறானில்லையென்றபடி. இத்தால் கோபிகளுக்குப்போலே யெனக்கு ஸந்நிதானம்பண்ணிக்கொண்டே திரோஹிதனாயிருக்கிறானென்று ஸம்க்ஷிப்தம். நீரும் நுஞ்சேவலும்- நீங்களுமுங்களுடைய பர்த்ருபக்ஷிகளும், மேல்கிளை- மேலானகிளையை, உத்தமாநதியை யென்றபடி. கிளையென்று வக்ஷிஸமூஹத்துக்குப்பேர். ஆந்தை கிளைக்கூடிற்றென்னக் கடவதிறே. கொள்ளேல்மின்- கொள்ளாதொழியுங்கோள், செய்யாதொழியுங்கோளென்றபடி. உன்ப்ராணனைப ரக்ஷிக்கைக்கு வந்த நாங்கள் கூவாதிருப்போமோ வென்றவற்றுக்குக் கருத்தாகநினைத்து அதுக்குத்தரம் சொல்லுகிறாள்.

மூ— கோழிகாள்* வாக்குமனமுங்கருமமுநமக்காங்கதே* யாக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே* ॥சு।
அந்தரநின்றுழல்கின்றயானுடைப்பூவைகா*ளுநதிறத்தேதுமிடையிலலேகுழறேன்மினோ* விந்திரஞாலங்கள்

ஆ— தொழிகிறதென்? ஆதலால் அவன்வரக்கூவுகிறீரல்லீர் என்னை முடிக்கைக்காகக் கூவுகிறீர்தாமோ,. முன்னமேயென்னுடைய ஸர்வகரணங்களும்முடிந்தன, இனியென்செப்ப வருந்துகிறீகோள் என்ன, கரணங்கள்முடிந்தனவாகி லுன்னுடையபேச்சு மிச்சவெஷிதங்களுங் கூடுகிறபடி யெங்ஙனேயென்னில், முடியச்செய்தே யென்னுடையவாக்கையுமாவியும் நடுவே நின்று பழையவ்யஸநவாஸநையாலே யுழைக்கிறனவத்தனை யென்கிறள். ॥சு॥

(அந்தரநின்று) உங்களுக்குநானென்னவநிஷ்டம்பண்ணினேன் நீங்கள்நடுவேநின்று அவன்திருநாமங்களைச்சொல்லி என்னை வாயியாதேகொள்ளுங்கோள் என்று பூவைகளை நோக்கிச்சொல்லி, பண்டிந்தபோகத்தைத் தனக்காக்கிக்கொள்ளுகைக்குச் சிலபொய்செய்தாப்போலே என்னோடேகலந்து பரிமாறுகிறானைத் தோற்

இ— பாட்டுக்குப் வாக்கதாதுபர்யமருளிச்செய்கிறுர் (ஆதலாலி த்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (முன்னமேயித்யாதியால்) வாக்கதாத்பர்யமருளிச்செய்கிறுர் (இனியித்யாதியால்) வருந்துகிறீகோளென்றது- ப்ரயாஸப்படுகிறிகோளென்றபடி. அவற்றினுடைய சேஷ்டிதத்தை ப்ரதிஷேபிக்கைக்கு நாலாம்பாதத்தில் ஸ்ஶரீரப்ராணாநுவ்ருத்திகமந ஓநவெகஷிதமாகையாலே யஸம்கதமன்றோவென்ன? ஸங்கமிப்பிக்கிறுர் (கரணங்கள்முடிந்தனவாகிலித்யாதியால்) சதுர்த்தபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (முடியச்செய்தேயித்யாதியால்) ॥சு॥

**✳ஐந்தாம்பாட்டு.✳**

அந்தரநின்றென்கிறவிடத்து லஹிதப்ரதாயமருளிச்செய்கிறுர் (உங்களுக்கித்யாதியால்) வஞ்சகார்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (நீங்களித்யாதியால்) மயில்களோடே வாசிகச்சொல்லாநிற்கச்செய்தே நடுவே தன்னுடையபூவைகள் தானப்யஸிப்பித்த வவன்திருநாமங்களைச் சொல்லத்துடங்கினவாறே 'நீங்களும்நலியவேணுமோ' என்று அவற்றைநோக்கி வாசிகச்சொல்லுகிறுளென்று ஸங்கதிஸூசிதை, த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (பண்டித்யாதியால்) நபதிநமார்வனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (என்னோடேயித்யாதியால) நம்மாவியித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர்

ஶ— வாக்கும்- வாகிந்த்ரியோபலக்ஷித ஸர்வபாஹ்ய கரணங்களுமென்றபடி. மனமும்- அந்தக்கரணமும், கருமமும்- கர்மமும், க்ரியாஸாதநமான ஶரீரமுமென்றபடி. நமக்கு- விரஹாநலதக்தைகளான நமக்கு, ஆத்மநிவ்ருத்தம். ஆங்கதுவே- அங்கே சேர்ந்ததுவே, அவன் பக்கலிலே சேர்ந்துவிட்டதுவேயென்றபடி. ஆனாலுன்னுடைய விப்பேச்சும் வெஷ்டிதமுமெங்ஙனேயென்ன; சொல்லுகிறுள். ஆக்கையுமாவியும்- ஶரீரமும் ப்ராணனும், ஶரீராபலக்ஷித ஸர்வகரணங்களுமென்றபடி. அந்தரம் நின்று- அந்தரத்திலே நின்று, முடிந்துபோகாநிற்கச்செய்தே நடுவேசிலபோது நின்றென்றபடி. உழலும்- யாதனைப்படாநிற்கிறது. ॥சு॥

அந்தரம் நின்று- அந்தரத்திலே நின்று, உங்களுக்கு நானொரு அநிஷ்டம்செய்யாதிருக்க நடுவே நிஷ்காரணமாக ப்ராதிகூல்யத்தில் ப்ரவர்த்தித்து என்றபடி. உழல்கின்ற- உழலாநிற்கிற, க்லேஶப்படாநிற்கிற வென்றபடி. இத்தனைக்கு ஸாக்ஷியுமில்லாதிருக்கச்செய்தே வ்யர்த்தமே க்லேஶப்படாநிற்கிறவையான வென்கை. யானுடைப் பூவைகாள்- என்னுடைய ஶாரிகைகாள், பூவை- ஶாரிகை, வநஸ்தயா ஸர்வஸாதாரணங்களான கோகிலாதிகளைப் போலன்றிக்கே, எனக்கு ஸ்வம்மாயிருக்கிற நீங்களுமென்னை நலியலாமோ, நானுங்களையெனக்கென் றபிமாநிக்கை வாயகமாயிற்றே. 'ஶ்வேதாச்ச ஶ்ருக்ஷிரோத்ரா' என்னதை யிங்கு ஸ்மரித்துவிட்டதோவென்று கருத்து. நும்திறத்து- உங்கள் ஸம்பந்தத்தில், திறம்- ஸம்பந்தம் ஏதும்- ஸம்க்ஷித்தும், இடையில்லை- அவகாஶமில்லை, இடை- அவகாஶமாய் அந்தராளத்தைக் காட்டுகிறது. உங்கள் ஸம்பந்தவிஷயமாக வென்பக்கலிஷத்து மவகாஶமில்லையென்றபடி. நீங்கள் ஸம்பந்தஸீமசங்களாய்க்கொண்டித்தனை யத்நம்பண்ணுகைக்கிங்கு ஸாக்ஷ்யம்போராதென்கை. குழறேன்மினோ- குழறுதிருங்கோள், ஸக்ருதப்யாஸமாக வவன் திருநாமங்களைச் சொல்லாதிருங்கோ ளென்றபடி. இந்திரஞாலங்கள்- ஐந்த்ரஜா

மூ—கூட்டுண்டுநீங்கியகோலத்தாமரைக்கட்செவ்வாய்* வாட்டமிலென்கருமாணிக்கங்கண்ணன்மாயன்போல்*
கோட்டியவில்லொடுமின்னுமேகக்குழாங்கள்காள்* காட்டேன்மினும்முரு வென்னுயிர்க்கதுகாலனே ॥எ॥
உயிர்க்கதுகாலனென்றும்மையானிரந்தேற்குநீர்* குயிற்பைதல்காள் கண்ணனாமமேகுழறிக்கொண்டீர்*

ஆ—(கூட்டுண்டு) என்னோடுகூட்டுண்டுநீங்கி அதினாலொருவாட்டமின்றியே ஆஶ்சர்யமான வழகையுடையவனாய் ஸௌந்தர்யாதி திவ்யாயுதங்களையுடையவனைப் ஸாரஸ்யப்ராதி திவ்யபூஷணங்களையுடையவனுமிருந்த கண்ணனைப்போலேயிருந்த 'கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள்' இந்தவ்யஸனத்தின்மேலே காட்டேன்மின்றும்முரு என்னுயிர்க்கதுகாலனென்கிறாள். ॥எ॥

(உயிர்க்கது) கண்ணனுடைய திருநாமங்களைச்சொல்லில் நான்முடிவன்; அவற்றைச்சொல்லாதொழிய

✳ ஏழாம்பாட்டு ✳

இ— உபமானஸித்தமான தேவத்திற்கு 'கோட்டியவில்லொடுமின்னு' என்று விசேஷணம்சொன்னதால் உபமேயத்துக்கபேக்ஷிதமான வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யாதியால்) யதா- கோலக்கண்ணனென்றருளித்து கோலஶப்தத்துக்குத் தாத்பர்யஞ்சொன்னதாகவுமாம். ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

உயிர்க்கதுகாலனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கண்ணனுடையவித்யாதியால்) இதில் ஸ்வாரஸ்யமருளிச்செய்கிறார் (அவற்றையித்யாதியால்) என்றும்மையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

ஸ— ஸர்வதாக்ஷவாஸநாஸஹமாகச் சொல்லாதே கிடாயென்றபடி. இது என்காதுக்கித்தசையிலே அஸஹ்யமென்றபடி. ॥கூ॥

கூட்டுண்டு- என்னோடே ஸம்ஶ்லேஷத்தையநுபவித்து, நீங்கிய- நீங்கினவனை, விஶ்லேஷித்துப்போனவனென்றபடி. வாட்டமில்- அத்தாலொருவாட்டமில்லாதவனை, மாயன்- ஆஶ்சர்யசேஷ்டிதனை, வசத்திற்காட்டினு மகிமையிதவளரூபங்களை யுடையவனைவென்றபடி. இதையே விவரிக்கிறார். கோலத்தாமரைக்கண- ரமணீயதாமரஸவிலோசநனை, கோலம்- ரமணீயம், கண்ணென்கிறவிடத்தில் ணகாரலோபம் ஸஹிதாயாம் டகாராதேஶ:. செவ்வாய்- அருணாதரனை, என்கருமாணிக்கம்- விஶ்லேஷத்தாலு மெனக்கு மறக்கவொண்ணாதபடி நீலரத்நம்போலே ஶ்யாமளகாந்திஸாலியான, என்- என்னுடையவனை, ஸம்ஶ்லேஷதசையிலே கையைக்காலைப்பிடித்தெனக்கு மிகவும் ஸுலபனாயிருந்தவனைவென்றபடி. கண்ணன் போல்- க்ருஷ்ணனைப்போலே, கோலக்கண்ணன்போலென்று ரமயித்தபக்ஷத்தில் ஸௌந்தர்யாதி திவ்யாயுத திவ்யபூஷணங்களான அலங்காரங்களையுடைய க்ருஷ்ணனைப்போலேயென்பது, கோலம்- அலங்காரம், கோட்டியவில்லொடு- வளைந்திருக்கிறபநூஸ்ஸோடே, கோட்டியது- வளைந்தது, மின்னு- மின்னுகின்றுள்ள, உதய நூஸ்ஸையும் ஸௌதாமினீசெலுகளையு முடையவனைவென்றபடி மேகக்குழாங்கள்காள்- தேவவ்ருந்தங்காள்?, குழாம்- வ்ருந்தம், நும்முரு- உங்களுடையரூபத்தை, காட்டேன்மின்- எனக்குக் காட்டாதிருங்கோள், ஏனெனில்? அது- அந்தரூபமானது, அஸாதாரணமான வவன்திருமேனிக்கு ஸத்ருஶமான வுங்களுடைய ரூபமானதென்றபடி. தேவங்களுடையவடிவைப் பார்க்கமாட்டாதே பராங்முகியாயிருந்து 'அது' என்று பரோக்ஷமாக நிர்தேஶிக்கிறாள். என்னுயிர்க்கு- விரஹஜ்வரதப்தையான வென்னுடைய ப்ராணனுக்கு, காலன்- ம்ருத்யு. அத்தைக்கண்டா லென்ப்ராணனானது விரஹாக்நியாலே ஸம்பூர்ணமாய்விடுமென்றபடி. ॥எ॥

குயில்பைதல்காள்- கோகிலபோதகங்காள், பைதல்- போதகம், உங்கள்போதத்தை யென்ப்ராணன் விஷயத்திலே காட்டிவிட்டீர்களென்றுகருத்தாலே போதகங்களென்கிறாள். அது- அந்த திருநாமமானது, உயிர்க்கு- என்ப்ராணனுக்கு, காலனென்று- ம்ருத்யுவென்றுசொல்லி, ஜீவிக்கிறதாருமன்றிக்கே ஸம்ஹரித்தேவிடுமென்று சொல்லியென்றபடி. உம்மை- நீங்களாகப்ப்ரார்த்தித்து என்காரியஞ் செய்யக்கடவீர்களான வுங்களை, யானிரந்தேற்கு- நானுகயாசித்தவெனக்கு, யானென்றது ஸாதுஸ்வபாவமான ஸௌஹார்த்தத்தைக் காட்டாநின்றுகொண்டு மறக்கவொண்ணாமையை த்யோதிப்பிக்கிறது. நீங்களாகச்செய்யவேண்டிய

மூ—தண்பெருநீர்தடந் தாமரைமலர்ந்தாலொக்கும்* கண்பெருங்கண்ணனம் மாவியுண்டெழநண்ணினன் ॥௯॥

எழநண்ணிநாமும்வானநாடனோடொன்றினோம்* பழனநன்னாரைக்குழாங்கள்காள் பயின்றென்னினி*
இழைநல்லவாக்கையும்பையவேபுயக்கற்றது* தழைநல்லவின்பந்தலைப்பெய்தெங்குந்தழைக்கவே* ॥௰॥

ஆ—மாய்த்துப் போனான்காண் என்கிறாள். ॥௯॥

(எழநண்ணி) அவன்கருத்துப்படியே நானும்முடிந்தேன், என்னுடையவாக்கையுங்களர்ந்தது, பழனநன்னாரைக்குழாங்கள்காள் பயின்றென்னினி என்றுசொல்லி பின்னையும் நான்பட்டபாடொருவரும் படாதொழிந்திடுக என்றுசொல்லிக்கொண்டு முடிந்தாளென்கிறதிப்பாட்டு. ॥௰॥

இ—றபடி. உத்தரார்த்தத்தில் கண்ணனிக்ருதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன்தன்னழகைக்காட்டியென்று) நம்மாவியிக்ருதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னையிக்ருதியால்) ॥௯॥

✳பத்தாம்பாட்டு.✳

வானநாடனோடொன்றினோமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனிக்ருதியால்) த்ருதீய பாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவிக்ருதியால்) பழனநன்னாரையிக்ருதியாலே ஸஹ்ருதமாயிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னைமுடிக்கைக்கு உத்யோகிக்கிறனவாகவெண்ணி அவற்றைக்குறித்து வார்த்தைசொல்லுகிறாளென்று ஸம்கதிஸித்திகை. சதுர்த்தபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நான்பட்டவிக்ருதியால்) வானநாடனோடொன்றினோமென்கிறவிடத்தில் ஸங்கதிசேர்ஷவர்ணஸ்த்தாலே யிவ்வாக்யார்த்தமே யிவள்முடிந்ததாகத் தோற்றுகையாலே பாவிதனவாக்யங்களைச்சொல்லுகை பதாவலம்பனமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (என்றுசொல்லிக்கொண்டிக்ருதி) ஒன்றினோமென்கிறவிடத்தில் ஸங்கதிசேர்ஷ மிவ்வுபாவிதனவாக்யார்த்தாரண விஷம்வஸமாயமாய்க்கொண்டு அநந்தராவியான முடிவைக் காட்டுகிறதென்றுகருத்து. முடிந்தாளென்கிற திப்பாட்டென்றது—ஸமாப்திச் ப்ரதிபாதியா நிற்கிறதென்றபடி. ॥௰॥

ஶ—ன்றபடி. தண்- ஶீதளமான, பெருநீர்- ஸம்ருத்தமானஸலிலத்தில், தடம்- பெரியதான, தாமரை- பத்மமானது, மலர்ந்தாலொக்கும்- விகஸித்தாலதுக்கு ஸத்ருஶமாயிராநின்றுள்ள, பெருங்கண்ணென்று மாறியமையிப்பது, தீர்க்கவிஶாலலோசநஶாலியான, கண்ணன்- க்ருஷ்ணனவன், நம்மாவி- நம்முடையப்ராணனை, ஸாத்விகஸமவநம், உண்டு- க்ரஸித்து, ஸ்வீகரித்துக்கொண்டென்றபடி. எழ- போகைக்கு, நண்ணினன்- கிட்டினன், ஸகாமனானனென்றபடி. விஶ்லேஷித்துப்போனானென்கை. ॥௯॥

நாமும்- இங்கேயிருந்தவனைபோஜிக்க வாசைப்பட்டிருந்தநாமும், எழ- போகைக்கு, நம்மைமுடிக்கக்கோலியிருக்கிற வவன்ஸங்கல்பத்துக்கநுகுணமாக விந்தஶரீரத்தை விட்டுப்போகைக்கென்றபடி. நண்ணி- கிட்டி, ஸகாமராயென்றபடி. நம்வானநாடனோடு- நமக்கு ப்ராப்யமான பரமபதமாகிற நாட்டையுடையவனோடே, வானம்- பரமபதம், நாட்டையுடையவன் நாடன், ஒன்றினோம்- ஸம்ஶ்லேஷித்தோம் அவனுடைய அபிப்ராயாநுகுண ராயினோமென்றபடி. முடிந்துபோகாநிற்கிறோமென்று வசனதாத்பர்யம். இழைநல்ல- இழைபோலே நல்லதான, இழை- ஆபரணம், அவனுக்காபரணம்போலே ஸ்ப்ருஹணீயமானவென்றபடி. ஆக்கையும்- என்னுடையஶரீரமும், பையவே- க்ரமத்திலே, புய- புயத்தலை, கைவிட்டுப்போகையையென்றபடி. கற்றது- அப்யஸியாநின்றது, ஶரீரம்போகத்துடங்கிற்றென்றபடி. பழன- கேதாரங்களில், பழனம்- கேதாரம், நல்- நல்லவையான, கேதாரங்களிலே உபஜீவங்களாயிருக்குமவையான வென்றபடி. நாரைக்குழாங்கள்காள்- நாரைவர்க்கங்காள், இனி- இப்படிநான்முடிந்தபின்பு. பயின்று- ஸம்ஶ்லேஷித்து, பயிலுகை- கூடுகை, என்- என்னப்ரயோஜநம், நீங்கள் ஸம்ஶ்லேஷித்தராய்க்கொண்டு ஸம்ப்ராப்திபண்ணுகிறதற் கென்னப்ரயோஜநமென்றபடி. என்னை முடிக்கநினைக்கிறவவனபிப்ராயாநுகுணமாக நான்முடியாதபோதன்றோ வுங்களுக்கு விஷ்க்கவேண்டுவதென்றுகருத்து இப்படி வ்யஸநம்பிருத்து முடியாநிற்கிறவள் தன்தாரஸ்வெம்பொறுமையாலே நான்பட்டதார்வெமொருவரும் படாதொழியவேணுமென்கிறாள் மேல். எங்கும்- எல்லாதேஶமும், தழை- தழைத்ததான, பர்ஷமானவென்றபடி, நல்ல- தார்வெதிருமல்லாததான, இன்பம்- ஸுகத்தை, பரஸ்பரநிரபேக்ஷம் பரமபோக்யதாநுபவ ஸுகத்தையென்றபடி. தலைப்பெய்து- அடையப்பெற்று, தழைக்க- ஸம்ருத்தமாகக்கடவது. ॥௰॥

மூ—இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்தபல்லூழிக்குத்* தன்புகழேத்தத்தனக்கருள்செய்தமாயனைத்* தென்குருகூர்ச்சடகோபன்சொல்லாயிரத்துள்ளிவை* யொன்பதோடொன்றுக்குமூவுலகுமுருகுமே* ॥கக॥

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஆ—(இன்பம்) பின்னையும் "விசேஷணஸாஃபல்யம்" என்னும்படியாலே தாமுளராய் பலமருளிச்செய்கிறார். ஸநாமவிதர்க்களுக்கு நிரவதிகஸுகாவஹமாய் லோகமெல்லாம் நிறைந்த தன்புகழை ஸர்வகாலமுமேத்தனும் தனக்கருளிச்செய்தமாயனை தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள் இத்திருவாய்மொழியிற்சொன்னவர்த்தத்தை யநுஸந்திப்பார் என்றுமிவர்களே மேவனென்கிறார். ॥கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

✳ நிகமனம். ✳

இ— இப்படி ஸந்த்ரவஶத்தில்சொன்ன முடிவு ஸர்வஶேஷத்திலும் ஸித்தமாகையாலே மேல்பாடக்கூடுமோவென்ன வவதரிப்பிக்கிறார் (பின்னையுமித்யாதியால்) இன்பந்தலைப்பெய்தென்கிறதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸநாமவிசேஷ்யாதியால்) ஸர்வோபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சொன்னவர்த்தத்தையித்யாதியால்) ॥கக॥

ஸ— இன்பந்தலைப்பெய்து- ஸுகத்தையடைந்து, ஸநாமவிப்பார்க்கு நிரவதிகஸுகஜநகமாயென்றபடி. எங்குந்தழைத்த- லோகமெல்லாம் வ்யாப்தமான, தன்புகழ்- தன்னுடையகல்யாணகுணத்தை, பல்லூழிக்கு- பஹுகல்பங்கள், பல்- பஹு, ஊழி- கல்பம், ஸர்வகாலமுமென்றபடி. ஏத்த- ஸ்துதிக்கும்படி. தனக்கருள்செய்த- இங்கு தனக்கென்றது ஸம்போவனைச்சொல்லும், 'மயர்வறமதிநலமருளினன்' என்கிறபடியே தமக்கு க்ருபைபண்ணினவனை, மாயனை- ஆச்சர்யசேஷ்டிதனை, இதுக்கு சொல்லென்கிறத்தோடே ப்ரயம். தென்- ஸுந்தரமான, குருகூர்ச்சடகோபன்சொல்- திருநகரியையுடையவரான ஆழ்வாரருளிச்செய்ததான, ஆயிரத்துள்- ஸஹஸ்ரத்தில், இவை- இப்படிப்பட்டவையான, ஸந்த்யஜவிரஹவேதனையைச் சொன்னவையான வென்றபடி. ஒன்பதோடொன்றுக்கும்- ஒன்பதுபாட்டோடே கூடின வொருபாட்டுக்கும், ஜீவநத்தில் நசையோடே நோவுபட்ட ஒன்பதுபாட்டுக்கும், ஜீவநத்தில் நசையறுத்து நோவுபட்ட பத்தாம்பாட்டுக்குமென்றபடி. மூவுலகும்- விசேஷஜ்ஞரோடு விசேஷஜ்ஞரல்லாதாரோடு வாசியற ஸர்வலோகஜநமுமென்றபடி. உருகும்- சைத்தாலே த்ரவீபூதமாம். ॥கக॥

✳ ஜ்ஞாநவைராக்யஸந்தாநஶேவதிஶ்ரீமதேஷ்டஜ்ஞாநகாநாம ஶேஷதிகாய நம:. ✳

ஶ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(இன்னுயிர்ச்சேவலும்.)

ப்ராணத்ராணாத் ப்ரதாநாதபிவஸுமதிகத்வேஷணாத் வ்யூஹபோகாத்
லக்ஷ்மீவக்ஷஸ்த்வாத் த்ரிவர்காஜ்ஜநநாந் நீலரத்நாபதேஹாத் ।
க்ருஷ்ணத்வாத் * த்ருக்ஸ்வரூபத்வதிஶய ஸௌந்தர்யஸம்பந்த்ஸ்ரீகா
த்ருஷ்யேவயீதாம்ஸமாராதி: ஸ்வகுணஸமிதஸம்ஸாரகம்ஸர்வலோகே ॥௪௭॥

(ப்ராணத்ராணாத்) என்னுயிர்க்கண்ணபிரானை- ஆஶ்ரிதருக்கு ப்ராணரக்ஷகனாயிருக்கையாலும், (ப்ரதாநாத்) வித்தகன்கோவிந்தன்- விஸ்மயநீயனாயிருக்கையாலும், (அபிவஸுமதிகத்வேஷணாத்) அவன்கையதே- அதிஶயவிஶுஹனாகையாலும், (வ்யூஹபோகாத்) நங்கண்ணன்மாயன்- ஆஶ்ரிதருக்கு ஸுலபனாயிருக்கையாலும், (லக்ஷ்மீவக்ஷஸ்த்வாத்) நம்திருமார்வன்- பெரியபிராட்டியாரைத் திருமார்விலேயுடையவனாகையாலும், (த்ரிவர்காஜ்ஜநநாத்) என்னுருயிர்க்காகுத்தன்- ரகுவம்ஶத்திலே வ்யவஹித்திருமகனாய் யவதரிக்கையாலும், (நீலரத்நாபதேஹாத்) வாட்டமில்லன்கருமாணிக்கம்- ஒளிமாறாத நீலரத்தம்போலேயிருக்கிற திவ்யவிக்ரஹத்தையுடையவனாகையாலும், (க்ருஷ்ணத்வாத்) கண்ணன்நாமமே- க்ருஷ்ணனாய்வந்தவதரிக்கையாலும். (ஸௌந்தர்யாத்) தடந்தாமரைமலர்ந்தாலொக்குங்கண்பெருங்கண்ணன்- ஸர்வஸௌந்தர்யமான திருக்கண்மலர

[* 'ஸுபாவாஸ' நேத்ராவ்யாஜபேயஜலஸாநயஜலக்கஸாதித்யம். என்று பதினெண்ணாயிரம்]

ஈ— ஸ:— புடையவருளைகளாலும் (ஸர்வஶக்திகனாய) நம்மாணைநாடனென்றென்றும் - ஸர்வேஶ்வரன் ஸம்ஸாரி களைக்காப்பாய், நம்பெருமான் ஆஶ்ரிதர்க்கு மறக்கவொண்ணாதபடி ஸ்வகுணங்களை ப்ரகாஶிப்பிக்கிறவனாக "இன்னுயிர்ச்சேவலும்" என்கிற தஶகத்திலே ஆழ்வாரருளிச்செய்தாரென்கிறார். ॥ ௧௦ ॥

ஸ்ரீமச்சடகோபராமாநுஜதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

ஒன்பதாம்பத்தில் ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

* * *

# ஆறாந்திருவாய்மொழி.

மூ— உருகுமால்நெஞ்சமுயிரின் பரமன்றிப்* பெருகுமால்வேட்கையுமென்செய்கேன்றொண்டனேன்*

ஆ— (உருகுமால்) இப்படி யெம்பெருமானைப்பிரிந்த வ்யஸநத்தாலே முடிந்து பின்னையும் நெடும்போது கூட ஜீவியாதிராயிருக்க வாழ்வார், திருக்காட்கரைமருவியமாயன் பண்டென்னோடு கலந்து பரிமாறின பரிமாற்றங்களை நினைக்க நினைக்க ப்ரீதிஸயத்தாலே நன்னெஞ்சழிந்து நீராயுருகாநின்றது. இப்படி படாநின்றால்

ஆறாந்திருவாய்மொழி.

இ— இப்படி வரிதவ்யாயிருக்கிற வாழ்வாரிப்போது தமக்கொருஸம்ஶ்லேஷமும் ஸ்மரணமுன்றிக்கேயிருக்க வித்திருவாய்மொழியிலே சிறியவென்னுயிருண்ட திருவருளென்றும், தாமென்னை முற்றப்பருகினானென்று மிப்புடைகளிலே அவன்குணங்களைச்சொல்லி ஸந்தோஷிக்கை யஸம்மதமன்றோவென்ன வஸ்தரிப்பிக்கிறார் (இப்படியிக்ருதிபால்) திருக்காட்கரையென்று- ஒரு உகந்தருளினதிவ்யதேஶம், பண்டென்றது- இருந்தும்வியந்திலென்றபடி. மற்றுள்ள திருவாய்மொழிகளில ஸம்ஶ்லேஷம்போலன்றிக்கே நிரதிஶயபோக்யமாக ஸம்ஶ்லேஷித்தது இருந்தும்வியந்திலேயாகையாலே அதுவேயிறே "தவ்யஸம்ஸ்ப்ருஷ்ட்யஸம்ஸ்ப்ருஷ்ட" என்கிறகணக்கிலே யாழ்வாருக்கு விஶேஷித்து ஸ்ம்ருதிவிஷயமாகத்தக்கது. அஶோகவநிகையில் பிராட்டி ராகவிஶ்லேஷதஶையிலிருக்கச்செய்தேயும் திருவடியைக்கண்டஸந்தோஷத்தாலே 'ஸமா த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே। புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ' என்று திருவடியோடெஞ்ஞியிலே பெருமாளுந்தானுமொருபடிப்படப் பன்னிரண்டாண்டு கலந்தகலவியை ஸ்மரித்து ப்ரீதையானாப்போலே ஆழ்வாருமிப்போதொருஸம்ஶ்லேஷமும் ஸ்மரணமுன்றிக்கே விஶ்லேஷதஶையாயிருக்கச்செய்தேயும் "ஸத்ருஶாத்ருஷ்ட சிந்தாத்யாஸ்ஸ்ம்ருதிபீஜஸ்ய போதகா:" என்கிறபடியே ஸத்ருஶாத்யாதிகளாலே இருந்தும்வியந்தில் ஸம்ஶ்லேஷத்தை ஸ்மரித்து ப்ரீதியாலே யவனுடைய குணங்களைச்சொல்லி ஸந்தோஷிக்கிறாராகையாலே யிது ஸம்மதமென்றபடி.

*

முதற்பாட்டு.

இவ்வவதாரிகையில் முதற்பாட்டினர்த்தமும் ஸங்க்ருஹீதம். அதில் திருக்காட்கரையிக்ருதியாலே உத்தரார்த்தமும், ப்ரீதிஸயத்தாலே யிக்ருதியாலே பூர்வார்த்தார்த்தமும், இப்படி படாநின்றவிக்ருதியாலே

ஶ— தெருவெல்லாம்- குறுந்தெருவோடு நெடுந்தெருவோடு வாசியற ஸர்வவீதிகளிலும், காவி- செங்கழுநீர் புஷ்பங்கள், காவியென்று கருநெய்தலுக்கும் செங்கழுநீர்க்கும் பெயர், கமழ்- வாஸிக்கிற, நகரத்தைச்சுற்றிலும் திவ்யஸரஸ்ஸுக்கள் வ்யாப்தங்களாயிருக்கையாலேயென்று கருத்து. திருக்காட்கரை- திருக்காட்கரையென்கிற திவ்யதேஶத்திலே, மருவிய- ஸாதரமாக வஸியாநிற்குமவனை, வாஸகம்போலே தேஶவிஶேஷமும் அவதாரங்கள்போலே காலவிஶேஷமுமின்றிக்கே யிருந்தவனையென்றபடி. மாயன்தன்- ஆஶ்சர்யசேஷ்டிதனுடைய, தன்னென்று ஸ்வாதீனம். ஆஶ்சர்யமான ஸௌந்தர்யாதிகளை யுடையவனுடையவென்றபடி. மாயம்- ஆஶ்சர்யங்களை, மானங்களை நிக்ருஷ்டராயிருப்பார் நமக்குமாப்போலே யென்னை யநுபவிக்கப் பண்டென்னோடு ஸம்ஶ்லேஷித்த வாஶ்சர்யங்களை யென்றபடி. நினைதொறே- ஸ்மரிக்கிற க்ஷணங்தோறும், நெஞ்சம்- ஸந்தோஷத்துக்கு ஆஶ்ரயபூதமான நெஞ்சானது, உருகும்-

மூ— தெருவெல்லாங்காவிகமழ் திருக்கார்க்கரை* மருவியமாயன் றன் மாய நினைதோறே* ‖க‖

நினைதொறுஞ்சொல்லுந்தொறு நெஞ்சிடிந்துகும்* வினைகொள்சீர்பாடிலும் வேமெனதாருயிர்* சுனைகொள் பூஞ்சோலைத் தென்கார்க்கரையென்னப்பா*

---

ஆ— மாயங்களை நினைக்கை தவிரலாமிறே; என்னுடைய நிரவதிகமான பக்திபாரவஶ்யமானது தவிர வொட்டுகிறதில்லை. நானென் செய்கேனென்கிறார். ‖க‖

(நினைதொறும்) எல்லாருடைய து:க்கங்களையும் போக்கக்கடவதான வுன்னுடைய விக்ரஹகுணங்களை நினைத்தல் சொல்லுதல் பாடுதல்செய்யில் என்னெஞ்சு மிவ்வாத்மாவும் மாயாநின்றன, நீர்க்கனேயிடுபடுகைக்கு உம்மு

---

இ— த்விதீயவாக்யதாத்பர்யமும் சொல்லிற்றாயிற்று. தவிரவொட்டுகிறதில்லையென்றிவ்வுபக்ரமத்தில் சொன்னவித்தாலே இத்திருவாய்மொழிக்கு விஶ்லேஷாஸஹத்வமென்கிற ஸமக்ரலக்ஷணம் ப்ரதிபாத்யமென்று ஸூசிதமாயிற்று. ‖க‖

✳ இரண்டாம்பாட்டு. ✳

வினைகொள்சீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எல்லாருடையவித்யாதியால்) இனி வரும் வாக்யத்திலுள்ள பதங்களுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நினைத்தலித்யாதியால்) நினைவுசொல்லுக்களிலே நெஞ்சுக்கும் பாடலிலே ஆத்மாவுக்கும் விகாரம் பாட்டில்தோற்றுகிறதேயாகிலும் ஸமபிவ்யாஹாரத்தாலே இவையிரண்டுக்கும் மூன்றுக்ரியைகளிலும் ஸர்வதேவிகாரம் விவக்ஷிதமென்றுகருத்து. மாயாநின்றனவென்றது- மிகவும் வ்யாகுலப்படாநின்றனவென்றபடி. அவன்குணங்களைக் கொண்டாடினப்போலே நினைகிலேனித்யாதியாலே தாம் ஸங்கல்பம்பண்ணினதைக் கொண்டாடுகை பராதீனமன்றோவென்ன வி துக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (நீர்க்கனேயித்யாதியால்) திறத்தில்- விஷயத்தில்,

---

ஸ— வ்யதிரேகத்தாலே ப்ரவிஷ்டியாநின்றது. ஆல்- விஷாதத்யோதகம். நெஞ்சைநிறுத்தியநுபவிக்க முடிகிறதில்லையென்று விஷாதப்படுகிறபடி. ஆனால் ஸ்மரணத்தைத் தவிர்ந்தாலோவென்றில்? வேட்கையும்- ஆஸக்தியும், அநுபவஸாபேக்ஷத்தாலே பிறந்த வுத்ரோத்தராஸக்திவைஶம்ய மென்றபடி. உயிரின் பரமன்றி- ஆத்மாவின் ஸீமன்றிக்கே, ஆத்மாவுக்குப் பொறுக்குமளவன்றிக்கே பரிச்சேத்யமாயென்றபடி. பெருகும்- ப்ரவ்ருத்தியாநிற்கிறது, வேட்கையுமென்கிறவிடத்தில் ஸமுச்சயத்தால் அநுபவிக்க வொண்ணாதபடி நெஞ்சுருகி வாயிக்கிற ஶாத்ருமன்றிக்கே ஆஸக்திவைஶம்ய மபரிச்சேத்யமாய் மறந்தருக்கவொட்டாதபடி வாயிக்கிறதென்றபடி. ஆல்- விஷாதாதிஶயத்யோதகம். தொண்டனேன்- ஸமக்ரகுணவிஷயத்தில் பக்தனான நான் தொண்டன்- பக்தன், இச்ஶப்தத்தாலே தன்னைச்சொல்லிக்கொள்ளும்போது தொண்டனேனென்று ஸ்வபாவம். என்செய்கேன்- எத்தைச்செய்யக்கடவேன். நெஞ்சையுருகாமல் நிறுத்தவோ, ஆஸக்திவைஶ ப்ரவாஹத்தைமட்டுப்படுத்தவோ, அவன் குணங்களை அநுபவவிஷயமாகாதபடி விலக்கவோ, என் பாவத்தைத்தவிரவோ வென்றபடி. இவையொன்றும் ஶக்யமன்றென்று கருத்து. ‖க‖

சுனைகொள்- ஸரஸ்ஸுக்களைக்கொண்டிருக்கிற, சுனை- ஸரஸ்ஸு, ஸரஸ்ஸுக்களையுடைத்தானவென்றபடி பூஞ்சோலை- தர்ஶநீயமான வுத்யாநத்தையுடைத்தான, பூம்- தர்ஶநீயம், தென்- ஸுந்தரமான, கார்க்கரை- திருக்கார்க்கரையென்கிற திவ்யநகரத்தையுடையவனான, என்னப்பா- என்னுடையஸ்வாமியே, வினை- எல்லாருடைய து:க்கங்களையும், வினைஶப்தமிங்கே லக்ஷணயாது:க்கபரம். கொள்- கொள்ளுமவையான, கொள்ளுகை- அபஹரிக்கை, நஶிப்பிக்கத்தக்கவையான வென்றபடி. எல்லார்க்கும் து:க்கங்களைப்போக்குமவை யென்னையொருவனையும் வ்யாகுலப்படுத்துகிறன வென்றுகருத்து. சீர்- ஸௌஶீல்யாதிகுணங்களை நினைதொறும்- ஸ்மரிக்குங்காலமெல்லாம், நெஞ்சு- என்மநஸ்ஸானது, இடிந்து- ப்ரஶிதிலமாய், சொல்லுந்தொறும்- சொல்லுங்காலமெல்லாம், உகும்- உருகும், நீராயுருகாநிற்கும், பாடிலும்- அந்தகுணங்களைகானம்பண்ணிலும், எனது- ஶேஷபமான, ராகஸம்பிரோவஸ்தேஷ்டிரு°. ஆர்- ஸ்வபாவமான, ஆர்தல்- ஆயிக்யமாய்ஸ்வபாவமெகையைக்காட்டுகிறது, உனக்கு ப்ரியதமமானவென்றபடி. உயிர்- ஆத்மாவானது, வேம்- ஸந்தாபி

மூ— நினைகிலேனுனக்காட்செய்யுநீர்மையே* ॥௨॥

நீர்மையால்நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்தென்னை* யீர்மைசெய்தென்னுயிராயென்னுயிருண்டான்* சீர்மல்கு

சோலைத்தென்காற்கரையென்னப்பன்* கார்முகில்வண்ணன்றன்கள்வமறிகிலேன்* ॥௩॥

ஆ—டையதிறத்தில் நான்செய்ததென்னென்னில்? நான் உன்னையடிமைகொள்ளுகின்றேம என்றுகொண்டுவந்து நீயென்திறத்துச்செய்தருளின செயல்களை நினைக்கலாமோவென்கிறார். ॥௨॥

(நீர்மையால்) உம்மையடிமைகொள்கைக்கு மேற்படச்செய்ததுண்டோவென்னில்? அடிமைகொள்வாரைப்போலே யென்னெஞ்சை வஞ்சித்துப்புகுந்து தன்குணங்களாலும் செயல்களாலுமென்னைமாய்த்து என்னுயிராய் என்னுயிரை ஸ்வீகரித்தருளினன், முந்தறமெய்யரைப்போலேவந்து புகுந்தபடியும், பின்னைச்செய்த

இ— அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானுன்னையடிமையித்யாதியால்) காமுகன் காமிநீவிஷயத்தில்போலே எம்பெருமான்தம்பக்கல் ஸ்நேஹத்தைக்கொண்டு உபாயமெதுவுமின்றி ஸம்ஸ்லேஷித்தபடியைத் தாமதற்கிசைந்திருந்தவளவைக்கண்டு தாமாள்செய்ததென்று விநயோக்தியாலேசொல்லி யதைக்கொண்டாடுகிறாரென்றுகருத்து. நினைக்கலாமோவென்றது- நினைக்கசக்யமோவென்றபடி. யத்வா:— ஸ்வஸங்கல்பத்தாலே நீ ஸ்வைரமாகச்செய்தாலும் நானதைநினைக்கை யுசிதமோவென்றபடி. ஆதலாலதை யென்வாயால் சொல்லமாட்டேனென்கிறாரென்றுகருத்து. இத்தால் கீழ்ப்பாட்டில் தாமநுபவித்த வைலக்ஷண்யத்தை ஸ்வீக்ருதிரூபத்தாலே அவனைக்குறித்துச்சொல்லுகிறாரென்று ஸங்கதியும்ஸூசிதை. ॥௨॥

✳ மூன்றாம்பாட்டு. ✳

அவன்குணங்களைச்சொல்லி ஸந்தோஷிக்கிற ப்ரகரணத்திலே யிப்பாட்டிலேயவனை வஞ்சகனாகச் சொல்லுகை யஸங்கதமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (உம்மையித்யாதியால்) நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அடிமைகொள்வாரையித்யாதியால்) என்னைநீர்மையா லீர்மைசெய்தென்றதையித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்குணங்

மூ—ரூபமாற்றமாட்டாமையாலே தத்வமாகாநிற்கிறது, அப்படிநாமுமக்குச் செய்வதென்னென்னில்? நான்— உனக்கத்யந்தசேஷபூதனானநான், உனக்காட்செய்யும்நீர்மை- உனக்கடிமைசெய்யும்ப்ரகாரத்தை, நீர்மை- ப்ரகாரம், பண்டுநீ ஸ்வைரமாக ஸம்ஸ்லேஷிக்கும்பொழுதில் உனக்கிஷ்டவிநியோகார்ஹனாயிருந்தபடியையென்றபடி. நினைகிலேன்- நினைக்கமாட்டேன், நீசெய்தது கரைகடந்ததாகையாலே யதை நினைக்கமாட்டுகிறிலேனென்றுகருத்து. ॥௨॥

நெஞ்சம்- என்னுடையமநஸ்ஸை, வஞ்சித்துப்புகுந்து- நம்மை யடிமைகொள்ளவருகிறானென்று ஸ்ரத்தையீகரிக்கும்படி பண்ணிக்கொண்டுவந்துபுகுந்து, என்னை- சேஷசேஷிபாவமுறை தப்பாமே யடிமைசெய்வித்துக்கொள்ள வந்தானென்றிருக்கிறவென்னை, நீர்மையால்- நல்லஸ்வபாவத்தால், தன்னுடைய ஸௌசீல்யத்தாலும் தத்காலமாய் சேஷசேஷிபாவமுறையழியும்படி யத்யந்தஸ்நேஹமான வேஷத்தாலுமென்றபடி. ஈர்மைசெய்து- த்ரவ்யப்படுத்தி, ஈர்மை- ஆர்த்ரதை, இங்கு த்ரவ்யப்படுத்துகிறதைச் சொல்லுகிறது. அந்த குணாநுபவரஸாதிஸயம் பொறுக்கமாட்டாதே த்ரவ்யப்படும்படி பண்ணியென்றபடி. என்னுயிராய்- எனக்குப்ராணனாய், எனக்குத்தன்னைப்பிரியில் ஜீவிக்கவொண்ணாதபடியாயென்றபடி. என்னுயிர், என்னாத்மாவை, உண்டான்- ஸ்வீகரித்தவனை, மநோரதவசஸாதுர்லபவிபவமாகப்பெற்றாப்போலே யநுபவித்தவனையென்றபடி. சீர்மல்கு- ஸ்ரீப்ருவஹியாநிற்கிற, மல்குகை- ப்ருவஹிக்கை, வாஸபாவஸம்பத்ஸமஸ்தமாகாநின்றுள்ள வென்றபடி. என்னை யநுபவிக்கப்பெற்றவனுடைய ஹர்ஷத்தாலே யவனூருக்குங்கூட ஸௌந்தர்யமுண்டாயிற்றென்றுகருத்து. சோலை— உத்யாநங்களையுடைத்தான, தென்— அழகியதான, கார்க்கரை- அந்ததிவ்யநகரத்தையுடையவனை, என்னப்பன்- எனக்கு நிராவாயிகவைபவமான, கார்முகில்வண்ணன்தன்- காளமேகவர்ணனுடைய, என்னையநுபவித்து திருமேனியும் ஸௌந்தர்யம்பெற்றதென்றுகருத்து. கள்வம்- க்ருத்ரிமங்களை, முந்தறசேஷிபாவமுறை தப்பாமல்வருவானைப்போலே வந்து நான் ஸ்வீக்ருதனானபின்பு சேஷசேஷிபாவமுறை மாறுடி யதாரமாக வென்னைஸ்வீகரித்தவிந்த க்ருத்ரிமங்களையென்றபடி. அறிகிலேன்— அறியமாட்டுகிறிலேன், யதாவத்ஜ்ஞாதமோ. ஸர்வதா ஜ்ஞேயமோவென்று

மூ— அறிகிலேன்றன்னுள்ளனைத்துலகுநிற்க* நெறிமையாற்றானுமவற்றுணிற்கும்பிரான்* வெறிகமழ்சோலைத் தென்காட்கரையென்னப்பன்* சிறியவென்னுயிருண்டதிருவருளே* ௧௪௧

---

ஆ— பதியும், ஒருவன்வஞ்சித்தபடி யொன்றுமறிகிலேனென்கிறார். ௧௩௦

(அறிகிலேன்) உம்முடையதிறத்தில் அவனந்தனை ஸ்ரீநிவிஷ்டனானால் செய்யுண்டோவென்னில், ஸந்நிவிஷ்டனானல்தான் மற்றுள்ளவரோடு நெறிகெடாமை கலந்துபரிமாறுமாப்போலே பரிமாறவையாதோ, தானென்னைஸ்வீகரித்தருளி நெறிகெடும்படி பரிமாறவேணுமோ, இவ்வஸந்நிவேஸத்துக் கொருமுடிவு காண்கிறிலேனென்கிறார். ௧௪௫

(திருவருள்) திருவருள்செய்பவன்போலே யென்னுள்ளேபுகுந்து என்னை ஸ்வீகரித்தருளுகையன்றியே என்னுருவமுங்கூட ஸ்வீகரித்தருளினான், ஒருவனஸந்நிவேஸமிருக்கும்படியே இது முந்துறவந்துபுகுந்தருளினபடி,

---

இ— களாலுமித்யாதியால்) கள்வமறிகிலேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (முந்துறவித்யாதியால்) ௧௩௫

✳ நாலாம்பாட்டு. ✳

கீழ்ப்பாட்டிற்சொன்னவர்த்தத்தையே ‘என்னுயிருண்டதிருவருளறிகிலேன்’ என்று சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு ஸ்வநஸ்ரார்த்தமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக ஸங்கதிப்பிக்கிறார் (உம்முடையவித்யாதியால்) செய்யுண்டோவென்றது- செய்யலாவதுண்டோவென்றபடி. அதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸந்நிவிஷ்டனானல்தானித்யாதியால்) நெறிகெடாமேயென்றது- தான்ஸேஷியான முறைதப்பாமேயென்றபடி. அதீயவாக்யஸமுதிவ்யாஹாரத்தால் த்ருதீயவாக்யத்துக்கு ஸித்தவர்த்தத்தையருளிச்செய்கிறார் (தானென்னையித்யாதியால்) அறிகிலேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவ்வஸந்நிவேஸத்துக்கித்யாதியால்) ௧௪௦

✳ ஐந்தாம்பாட்டு. ✳

அதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைஸ்வீகரித்தருளுகையித்யாதியால்) இதுவேயிப்பாட்டுக்கு ஸாமக்ர்யமாயிற்று. கண்ணன்கள்வங்களென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதுமுந்த

---

ஸ— நிஸ்ரயிக்கமாட்டுகிறிலேனென்றபடி. ஸர்வேஸ்வரனைவனிப்படியென்பக்கல் வ்யாமோஹம்பண்ணக்கூடாது; ஸர்வஜ்ஞனான ஸ்வஹவம் ப்ரத்யக்ஷமாயிருக்கையாலே யிதுபொய்யென்னவுங்கூடாது, ஆதலால் நான் ஸந்தேஹித்தேனென்றபடி. இருத்தும்வியந்தில் ‘மருள்தானீதோ யாயமபக்குமயக்கே’ என்கிறதையிங்குஞ்சொல்லுகிறார். ௧௩௫

தன்னுள்- தன் ஸங்கல்பத்திலே, அனைத்துலகம்- ஸர்வலோகங்களும், நிற்க- ப்ரதிஷ்டிதமாயிருக்க, ஸங்கல்பாயீநமாய்க்கொண்டு ஸேஷஸேஷிபாவ ஸம்பந்தத்தில் முறைதப்பாமலிருக்க வென்றபடி. தானும்- ஸேஷியான தானும். ஸ்வரூபம் அவை முறைதப்பாதிருக்குமாப்போலே தானும்முறைதப்பாதிருக்கிறானென்கைக்காக. நெறிமையால்- மர்யாதையால், நெறி வழியாய் மர்யாதையைக் காட்டுகிறது. ஸேஷித்வ மர்யாதை தப்பாமலென்றபடி. அவற்றுள்- அந்த லோகங்களுக்குள்ளே, நிற்கும்- வர்த்திக்குமவனை, பிரான்- உபகாரகனை, வெறி- பரிமளமானது, கமழ்- வாஸிபாநிற்கிற, ஓதநவாகம வைதீகவஸ் ப்ரஸாதேஃ: சோலை- உத்யாநங்களை யுடைத்தான, தென்காட்கரை- அழகியகாட்கரையை யுடையவனை, என்னப்பன்- என் ஸ்வாமியானவன், சிறிய- க்ஷுத்ரனான, என்- என்னுடைய, ஆர்- அவன் பாஹ்யஸ்ராவ்யமான, ஆர்தலாயிக்யமாய் ஸ்ராவ்யதையைக்காட்டுகிறது. இவர் தாம் தம்மை யக்ஷுத்ரவஸ்துமாக நினைத்திருக்கச்செய்தே அவன் தனக்கு ஸ்ராவ்யமான ஸ்ராவ்யவஸ்துவாக நினைத்திருக்கிறானென்று கருத்து. உயிரை- ஆத்மாவை, உண்ட திருவருள்- ஸ்வீகரித்தருளின விந்த ஸ்ராவ்யமான ஸாஸ்ரீதஸம்ஸ்லேஷஸந்நிவேஸ மஹாகுணத்தை, அருள்- க்ருபை, இங்கு லக்ஷணயா ஆஸ்ரித ஸம்ஸ்லேஷஸந்நிவேஸத்தைக்காட்டுகிறது. அறிகிலேன்- அறியமாட்டுகிறிலேன், பரிச்சேதிக்க முடிகிறதில்லை யென்றபடி. இப்பாட்டில் ‘சிறியேனுடைச்சிந்தையுண் மூவுலகுந்தன்னெறி யாவற்றிற்கொண்டு நின்றொழிந்தாரே’ என்று இருத்தும் வியப்பிலே சொன்ன வர்த்தத்தை யிங்கு மநுபாஷித்தபடி. ௧௪௫

மூ—திருவருள்செய்பவன்போலவென்னுட்புகுந்* துருவமுமாருயிருமுடனேயுண்டான்* திருவளர்சோலைத்
தென்காட்கரையென்னப்பன்* கருவளர்மேனியென்கண்ணன்கள்வங்களே* ॥௫॥
என்கண்ணன்கள்வமெனக்குச்செம்மாய்நிற்கு* மங்கண்ணனுண்டவாருயிர்க்கோதிது*

ஆ—அது பின்னைநின்றுசெய்தருளினபடி; இதுஒருவன் கள்வங்களேயென்கிறார். ॥௫॥

(என்கண்ணன்) ஒருநாளிங்ஙனே யவன்கையிலகப்பட்டால் பின்னையதில் அகப்படாதே பரிஹரிக்கவொண்ணாதோ என்னில்? நாடோறுமிஎன்மெய்யேயென்னை யடிமைகொண்டருள வருகிறானென்றெனக்குத்தோற்றும்படிவந்து சுதிவஞ்சம் என்னுதூவை யறிவழியும்படி ஸாஜித்துப்போம். போனவாறே பின்னையு

இ—றவிதூழியால்) இதுஎன்றது- ஶேஷிகூடாமெடுகுலையாதே யடிமைகொள்வாரைப்போலே வந்ததென்றபடி. அதுஎன்றது- ஹேயமானவென்னுடைய தேஹத்தையுங்கூடத் தனக்கு பாராஷாஸ்யமாக வநாஹவித்ததென்றபடி. ॥௫॥

✻ஆறாம்பாட்டு.✻

அவன்செய்வது க்ருத்ரிமமென்று தாமறிந்துசொல்லாநிற்கச்செய்தே அவன்க்ருத்ரிமமெனக்குச் செவ்வையாய்த்தோற்றுமென்றுசொல்லுகை யஸம்மதமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (ஒருநாளி த்யாதியால்) இப்போது க்ருத்ரிமமென்று தோற்றுகிறதேயாகிலும் அவன்முகத்தைக்கண்டவாறே மெய்யென்று தோற்றுகிறதென்கிறாராகையாலே ஸம்மதமென்றதாயிற்று. ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நாடோறுமி த்யாதியால்) த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சுதிவஞ்சமி த்யாதியால்) சுதிவஞ்சமென்றது- க்ரியாவிஶேஷணம். இது தேவகஷோஷமாய் சுதிவஞ

ஈ—திருவருள்- ஶ்ரீக்ருபையை, ‘வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்’ என்று நானசைப்பட்டபடியே அடிமைகொள்ளுகையாகிற மஹோபகாரத்தையென்றபடி. செய்பவன்போல- செய்யப்புகுகிறவன்போலே, தனக்கொன்று மபேக்ஷிதமன்றிக்கே யெனக்கேயுபகாரமாக வெழுந்தருளுகிறவன்போலே யென்றபடி. என்னுள்- என்நெஞ்சிலே, புகுந்து- ப்ரவேஶித்து, உருவமும்- ரூபத்தையும், என்ஶரீரத்தைய மென்றபடி. ஆர்- சுபிகமான, தனக்கு ஸ்வாப்யமானவென்றபடி. உயிரும்- ஆத்மாவையும், உடனே- கூடவே, ஹேயோபாதேயவிபாகமின்றியேயென்றபடி. உண்டான்- ஸாஜித்தவனை, மஹாபோகம்பெற்றதாக வநாஹவித்தவனையென்றபடி. திருவளர்- ஶ்ரீவஸ்யாநின்றுள்ள, என்னை யநாஹவிக்கப்பெற்ற ஸந்தோஷத்தாலே அவ்வூர்ச்சோலையும் தழைத்ததென்றுகருத்து. சோலை- உத்யாநங்களையுடைத்தான, தென்- ஸுந்தரமான, காட்கரையென்னப்பன்- திருக்காட்கரையென்கிற திவ்யநகரத்தையுடைய வென்ஸ்வாமியான, கருவளர்- கறுப்புவள்ராநின்றுள்ள, என்னோடு ஸம்ஶ்லேஷத்தாலே காந்திவஸ்யாநின்றுள்ளவென்றபடி. மேனி- திருமேனியையுடையவனை, என்கண்ணன்- எனக்குஸுலபனான க்ருஷ்ணனுடைய, கள்வங்களே- க்ருத்ரிமங்களென்ன வாஶ்சர்யங்கள், கள்வங்களேயென்கிறவிடத்தில் ஸ்வரத்தாலே விஸ்மயம்விவக்ஷிதம். வரும்போதொருபடியும் பின்பொருபடியுமான க்ருத்ரிமவ்ருத்திகளென்ன வாஶ்சர்யங்களென்றபடி. மஹாபவநத்தால் அடிமைகொள்வானைப்போலேவந்து தானென்பக்கல் நிரபேக்ஷஸ்வரூபனாயிருக்கையும் விரோதியான ஶரீரத்தை நிவர்த்திப்பானைப்போலேவந்து அதைத்தனக்கு பாராஷாஸ்யமாக ஸாஜிக்கையும் தானெனக்கு போக்யமாக வருவானைப்போலே வந்து என்னைத்தனக்கு போக்யமாக ஸாஜிக்கையும் என்பேறாக வருவானைப்போலே வந்து தன்பேறாகத்தலைக்கட்டிக்கொள்ளுகையுமாகிற க்ருத்ரிமவ்யாபாரவிஶேஷங்கள் விவக்ஷிதங்கள். ॥௫॥

என்கண்ணன்கள்வம்- என்பக்கல் த்ருஷ்யமானமான க்ருஷ்ணனுடைய வ்யாபாரங்கள், எனக்கு- அவன்பாவத்தைக்கண்டவாறே பரவஶனாயிருக்கும் ஸ்வபாவனானவெனக்கு, செம்மாய்நிற்கும்- ருஜுவாயிருக்கும், செம்மென்றுருஜு, க்ருத்ரிமமென்றுதோற்றாதே மெய்யென்றுதோற்றுமென்றபடி. அங்கண்ணன்- சுதிவஞ்சனானவன், அங்கண்ணனென்று சுதிவஞ்சனுக்குப்பேர். உண்ட- அநாஹவித்ததான, என்- என்னுடைய, ஆர்- அவன்பாஶ்யஸ்வாப்யமான, இதுஉயிர்கோது- இந்தஉயிர்க்கோதானது, கோது- நிஷ்ஷம், நிஸ்ஸாரமாய்விட்ட விஸ்வாஸ்தாவானதென்றபடி. அவனிதை யநாஹவிக்கும்போது ரஸாதிஶயத்தாலே யறிவழிந்த விஸ்வாஸ்தாவானதென்கை. புன்கண்மை- புல்லிதானகண்ணுடைத்தாகுகையை, புல்லியது- சுஷ்ம், கண்-

மூ — புன்கண்மைபெய்திபுலம்பியிராப்பக* லென்கண்ணனென்றவன் கார்க்கரைமேபத்துமே* ॥௬॥
கார்க்கரைமேபத்து மதனுட்கண்ணா வென்றும்* வேட்கைநோய் கூர நினைந்து கரைந்துகு* மாட்கொள்
வானொத்தென் னுயிருண்டமாயனால்* கோட்குறைபட்டதென்னாருயிர் கோளுண்டே* ॥௭॥

ஆ — இவ்வாத்மாவானது நெடும்போதுகூட ஸ்ரவணமாய் அவனையாசைப்பட்டு என்கண்ணா! என்கண்ணா! என்றலற்றி அவனெழுந்தருளியிருந்த திருக்கார்க்கரையை ஏத்தாநிற்குமென்கிறார். ॥௬॥

(கார்க்கரைமேபத்தும்) இப்படி பவனைக்காணவேணுமென்னு மாசையாலே அவனை நினைத்தலற்றி, அவஸரமானவாறே, பின்னையும் பண்டுபோலே யென்னை படிமை கொள்வாரைப்போலே வந்து புகுந்து, என்னுயிரைமாள ஸம்ஜித்துப்பின்னையும் ஸம்ஜியாதானாயிருக்குமென்கிறார். ॥௭॥

இ — ஐறுபென்று வாமொகவுமாம். அறிவழியும்படியென்றது- கோதுலவை காதபமுஞ்சொன்னபடி. ரஸாதிஸபத்தாலே ஜாஷிகமாம்படியென்கை. பாட்டெல்லா மேகவாக்யமாயிருக்க வ்யாவ்யாநத்தில் ஸம்ஜித்துப்போமென்று இங்கேவாக்யஷேதம்பண்ணினது- அவன்க்ருதிமும் அவன்ஸ்வத்தைக்காணும்போது மெய்யாகவேதோற்றுமென்றும் க்ருத்ரிமமென்றறியும்ஷமெமஷிஇம் மவன்பக்கலென்னுத்மாவுக் காசைபோகாதென்று மிவ்வஷயத்திலும் பாட்டுக்குத் தாத்பர்யமென்றுகாட்டுகைக்காக. புன்கண்மையெய்தி யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெடும்போதித்யாதியால்) புலம்பியென்கிறதி லக்ஷ்யவிஸாயத்தை யருளிச்செய்கிறார் (அவனையாசைப்பட்டென்று) மெஷம் ஸ்பஷ்டம். ॥௬॥

✳ ஏழாம்பாட்டு ✳

மேலொரு அர்த்தவிமெஷம் சொல்லுகைக்காக கீழ்ச்சொன்னதை யநுவதிக்கிற திப் ப்ரயம வாக்யமென்று காட்டுகிறார் (இப்படி யித்யாதியால்) இப்படி யென்கிறதற்கு அலற்றி யென்கிறதோடே அந்வயம். யதா:— கீழ்ப்பாட்டில் மொகசார்யமான வவஸாதம் ஸம்மொகமன்றாகிலும் ஸூசிதமாகையாலே யதுவுமிங்கநுவதிக்க யோக்யமாகையால் இப்படி என்கிறத்துக்கு அவஸரமான வென்கிறதோடே அந்வயமாகவுமாம். இவ்வநுவாதத்தாலே யிப்பாட்டுக்கு கீழ்ப்பாட்டோடே யவாந்தரஸங்கதியும் ஸித்தமாயிற்று. த்விதீய வாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவஸரமானவாறே யென்று) என்னுயிரிதிமெஷ:. த்ருதீய வாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) சதுர்த்தவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையும் ஸம்ஜியாதானாயிருக்குமென்று) இத்தால் ஐந்தாம்பாட்டிலே யென்னாத்மாவையும் ஸரீரத்தையும் தனக்கு ஸேஷமாக வநுபவிப்பானென்றவ ரிப்பாட்டிலே அப்படி யநுபவித்தாலும்

ஸ — ஜ்ஞாநம், எய்தி- அடைந்து, இப்படிஜாஷிகமாயிருந்தது அவன்நுபவித்துப்போய் நெடும்போதானபின் புநிஸ்ஸம்ஸ்லேஷயோக்யமாயென்றபடி. இராப்பகல்- நக்தந்திவம், என்கண்ணனென்று- எனக்கு ஸுலபனான க்ருஷ்ணனென்று, புலம்பி- ப்ரலபித்து. அவன்கார்க்கரை- அவனுடைய திருக்கார்க்கரையை, ஏத்தும்- ஸ்துதியாநிற்கும், அவனெழுந்தருளியிருக்கிற திருக்கார்க்கரையை அவனைக்காணவேணுமென்னுமாசையாலே கொண்டாடாநிற்குமென்றபடி. ॥௬॥

என்- என்னுடைய, ஆர்- அவனுக்கு ஸ்வாமியான், உயிர்- ஆத்மாவானது, கார்க்கரை- அவனெழுந்தருளியிருக்கிற திருக்கார்க்கரையை, ஏத்தும்- அவனைக்காணவேணு மென்னுமாசையாலே ஸ்துதியாநிற்கும், அதனுள்- அதுக்குள்ளே நிற்கிற, கண்ணனென்னும்- க்ருஷ்ண? என்றழையாநிற்கும், வேட்கை நோய்- அபிநிவேஸ வ்யாதியானது, நோய்- வ்யாதி, கூர- கூரும்படி, வர்த்திக்கும்படி யென்கை. நினைந்து- அவனை ஸ்மரித்து, கரைந்து- ஸிதிலமாய், உகும்- நீராயுருகாநிற்கும், இப்படி யாசைப்பட்டவாறே பிதுக்குவகாராகநுவதுமாப்போலேவந்து ஸாமீப்யத்திலே வர்த்திக்கிறவனைப் போலவனென்கிறார்மேல். ஆட்கொள்வானொத்து- என்னை படிமைசெய்வித்துக் கொள்ளுகிறவனுக்கு ஸத்ருஸனாய், என்னைக்கொண்டு ஸேஷியான தனக்கடிமை செய்வித்துக் கொள்ளுகிறவனைப்போலே வந்தென்றபடி என்னுயிருண்ட- என்னாத்மாவைத்தனக்கு ஸேஷமாக வநுபவித்தவனான, மாயனால்- ஆஸ்சர்யசேஷ்டிதனாலே, இது க்ருத்ரிமமென்று தோற்றாதபடி யிருக்கிற ஆஸ்சர்யசேஷ்டிதனாலே யென்றபடி, கோளுண்டு- கொள்ளப்படுகையை யநுபவித்து, அநுபவிக்கப்படுகையைப் பெற்றென்றபடி. கோட்குறை பட்டது- கொள்ளுகையிலே குறைப்பட்டது. அபூர்ணமாக ஸம்ஜிக்கப்

மூ—கோளுண்டானன்றிவந்தென்னுயிர்தானுண்டான்* நாளுநாள்வந்தென்னைமுற்றவுந்தானுண்டான்* காள நீர்மேகத்தென்கார்க்கரையென்னப்பற்கு* ஆளன்றேபட்டதென்னாருயிர்பட்டதே* ॥அ॥
ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது* பேரிதழ்தாமரைக்கட்கனிவாயதோர்* காரெழில்மேகத்தென்கார்க்கரைக்

ஆறா—(கோளுண்டான்) இப்படியென்னுயிரை மாளபுஜித்தே பின்னையும்புஜியாதாளுப் வந்துபுஜிக்கும், இப்படி நாளும்நாளும்வந்து என்னைபுஜித்தருளினான், நான்தனக்கடிமையானவித்தனையன்றே, என்னையிங்ஙனே படுத்தவேணுமோவென்கிறார். ॥அ॥

(ஆருயிர்) அவன் உம்முடைய திறத்திலே விசேஷமாகச்செய்ததுண்டோ தன்னோடுபரிமாறுவாரை யெல்லாரையு மப்படியன்றோபடுத்துவதென்னில்; அவனால் நான்பட்டபாடு திருநாட்டிலுள்ளார்தாம்பட்டாரோ;

இ—த்வருகிறில னென்கிறாரென்றிப்பாட்டுக்குப் வ்யாக்யாநஸங்கதியும் ஸித்திக்கையாயிற்று. ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

வ்யாக்யானத்துக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) ஆளன்றேபட்டதென்றகிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நான்தனக்கித்யாதியால்) என்னுயிர்பட்டதென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னையிங்ஙனேயித்யாதியால்) இத்தால், நாள்தோறுமென்னை அநுபவியாநின்றாலும் பெறாப்பேறுபெற்றாப்போலே புஜிக்கிறவிவனுடைய காட்சித்வரையொன்றும் பொறுக்கமாட்டுகிறிலே னென்கிறாரென்று ஸங்கதியுஞ்சொல்லிற்றாயிற்று. ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ஸமவரண ஸ்ராவ நவ்யாகரணத்திலே 'ஆருயிர்ப்பட்டதெனதுயிர்ப்பட்ட' தென்று ஸ்ராவநம்பண்ணுகை யஸங்கதமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதாரிப்பிக்கிறார் (அவனித்யாதியால்) வ்யாக்யானத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனால்நானித்யாதியால்) மேல் வாக்யத்துக்குத்-

ஸ—பட்டதன்றிக்கே யிராநின்ற தென்றபடி. அவனிதையநுபவித்தும் பின்னையும் வர்ணமாக வநுபவியாதாரைப்போலே அத்ருப்தனாயிராநின்றானென்று தாத்பர்யம். ॥எ॥

கோளுண்டானன்றிவந்து- கொள்கையுண்டானன்றியேவந்து, ஸாதநபத்தை யொருங்காலும் பெற்றவனல்லாதவனாய் வந்தென்றபடி. தானென்னையொருக்காலும் அநுபவித்தறியாதே அபூர்வமாகவநுபவிக்கப்பெற்றாப்போலே வந்தென்கை. என்னுயிர்- என்னாத்மாவை, தான்- அத்யந்தாபிநிவிஷ்டனானதான், உண்டான்- அநுபவித்தான், நாளுநாள்வந்து- இதுதானொருநாளன்றியே நாள்தோறும்வந்து, அவனுடைய 'அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதம்' இருக்கும்படி யிதுவென்றுகருத்து. என்னை- நிரதிசயபோக்யனானவென்னை, முற்றவும்- க்ருத்ஸ்நத்தையும், என்ஸ்வரூபத்தோடு குணங்களோடு ஶரீரத்தோடு வாசியற வெல்லாவற்றையுமென்றபடி. தானுண்டான்- ஸ்வயம்புஜித்தான், தன்தேறுகவே யநுபவித்தானென்றபடி. காளநீர்மேக- காலவர்ணமாய் ஜலபூர்ணமான மேகம்போலிருக்கிறவனான, தென்கார்க்கரையென்னப்பற்கு- அழகிய திருக்கார்க்கரையில்வஸிக்கிற வென்னுடைய நிரவதிகவாத்ஸல்யவான ஸ்வாமிக்கு, ஆளன்றேபட்டது- அடிமையன்றேபுக்கது, அன்றேயென்றது- அன்றோவென்றபடி. அடிமைபுகுந்ததத்தனை. போக்கி ராவணாதிகளைப்போலே யெதிரம்புகோத்ததோவென்றபடி. என்னாருயிர்பட்டதே- என்னுடைய ஶாஶ்வதமான வாத்மாபட்டதென்னவாஶ்சர்யம், பட்டதேயென்கிறவிடத்தில் ஸ்வரவிசேஷத்தாலே விஸ்மயம் விவக்ஷிதம், இப்படியடிமைபுக்க விவ்வாத்மாவை யித்தனைபடுத்தவேணுமோ; ஶாஶ்வதம்பொறுக்கலாம் இந்த ஶாஶ்வதமும் படுத்துகிறபாடொன்றும் பொறுக்கமுடிகிறதில்லையென்றுகருத்து. ॥அ॥

பேரிதழ் பெரியவிதழையுடைத்தான, இதழ்- தளம், ஸௌகுமார்யத்தாலே விஸ்தீர்ணமான வென்றபடி, தாமரைக்கண்- தாமரைபோலேயிருக்கிற கண்களையுடைத்தான, கண்ணென்கிறவிடத்தில் ஸந்தியிலே டகாராதேஶம். கனிவாயது- கனிபோலேயிருக்கிற வாயையுடைத்தான, கனி- பழம், பிம்பபலமான வென்றபடி. வாயையுடைத்தானது- வாயது, ஓர்- லோகவிலக்ஷணமான, அத்விதீயமென்று சொல்லுகிறபடி. காரெழில்- கறுத்தவெழிலையுடைத்தான, எழில்- ஔஜ்ஜ்வல்யம், மேகம்- மேகமான, நீலோஜ்ஜ்வலதேஹஸத்ருஶனான வென்றபடி. தென்கார்க்கரை- அழகிய திருக்கார்க்கரையை

மூ— கோயில்கொள்* சீரெழினாற்றடந்தோட் டெய்வவாரிக்கே* ௯௰

வாரிக்கொண்டுன்னைவிழுங்குவன்காணிலென்* றார்வுற்றவென்னையொழியவென்னின்முன்னம்* பாரித்துத் தானென்னை முற்றப்பருகினான்*

ஆ— தனக்கென்னகுறையுண்டா யிப்படிச்செய்தருளினானென்கிறார். ௯௰

(வாரிக்கொண்டு) "நீ ராமவனை ஸாஜிபாதே உம்மை ஸாஜிக்கக்கொடுத்துக்கொண்டிருப்பானேன்" என்னில்? உன்னைக்காணில் வாரிக்கொண்டுவிழுங்குவன் என்று நான்நெநாரயித்துக்கொண்டிருக்க எனக்குத்தன்னை

இ— காருப-மருளிச்செய்கிறார் (தனக்கிகாழிபால்) என்னகுறையென்றது- அழகில்குறையோ வெண ஸூபத்திலகுறையோவென்றபடி. ஸவஸாதிஸயி கமேஹமான வஸ்துவிலேயிறே யெல்லாருமாஸக்தப்பண்ணுவது, ஸவஹகாரஸமஹத்தாலும் தானேயதிஸயிகனுயிருக்க, வெங்கக்கவித்தனை பாஸக்தப்பண்ணுவதென்னவாஸூப-மென்கிறாரென்றுகருத்து. ௯௰

✳ பத்தாம்பாட்டு. ✳

அவனுடைய ஸஹிநிவேஸாதிஸயத்தைச் சொல்லயந்த விஸ்ரகரணத்திலே 'வாரிக்கொண்டு' ஐதாழியாலே தம்முடைய ஸஹிநிவேஸத்தைச்சொல்லுகை யஸமகமன்றோவென்ன ஸமாசிப்பிக்கிறார் (நீர்தாழிதாழியால்) ஆர்வுற்றவென்கிறதற்குத் காருப-மருளிச்செய்கிறார் (நெநாரயித்துக்கொண்டிருக்கவென்று) என்னையொழியவென்கிறதற்குத் காருப-மருளிச்செய்கிறார் (எனக்குத்தன்னையிதாழியால்) காரொக்கு

ப— கோயில்கொள்- கோயிலாகக்கொண்டவனை, தனக்குநித்யவாஸஸ்தானமாகவுடையவனையென்றபடி. சீரெழில்- சீரையுமெழிலையுமுடையவனை, சீர்- ஸ்ரீ, வீரஸ்ரீயையு மௌஜ்ஜ்வல்யத்தையுமுடையவனை வென்றபடி. நால்- ஒருகல்பதருவுக்கு நாலுஸாகைகளிருக்குமாப்போலே நாலாயிருக்கிற, தடம்- பெரியதுகளான, "ஸுபதாஸ்ய ஸாஜ்யாதாஸ் பாஹவ:ஸிகைவாஸ:" என்கிறபடியே ஸூஜாயதராஸகமாகமைஸ்தாஸ்வரூப மஹீரங்களானவென்றபடி. தோள்- ஸாஜங்களையுடையவனை, தெய்வவாரிக்கு- தெய்வஸமுத்ரத்துக்கு, வாரி- ஸமுத்ரம், ஜலாஸயங்களுக்கு ஸமுத்ரம்போலே தேவதைகளுக்கு உபஜீவ்யநாதஸமுத்ரமான ஸாகிக்காயென்றபடி. ஸாகிக்கு ஸௌஹ்ருமாயென்கை. என்னுயிர்பட்டது- என்னாத்மா பட்டபாடுகளை, ஆருயிர்பட்டது- ஆருடையவாத்மாபட்டது, நித்யஸூரிகளுடைய வாத்மாதான் பட்டதோவென்றபடி. என்னாத்மாவானது அவனாலே ஸாஜிக்கப்படுகிறதென்மையிலே யவனுடைய வத்ராநுஷ்டானவ்ருத்திகளைக்கொண்டு ஸுதநாதிஸயத்தாலே ஜொஸமுத்ரசாதிகளையடைந்து வ்யாகூலப்பட்டாப்போலே நித்யஸூரிகளுடையவாத்மாவும் பட்டதில்லையென்றபடி. நவோதையான தருணிக்கு நாயகஸம்ஸர்க்கத்திலே ஸஷ்டிகாரங்கள் ஸ்ரீபநாயகிபிறகாட்டிலும் விஞ்சியிருக்குமாப்போலே அநாதிஸம்ஸாரியாயிருந்த விவருக்கு ஸமஸ்ஸாஷஸம்ஸ்லேஷம் புதியதாய்வந்ததாகையாலே ரஸாதிஸயகரமான போயாகத்தே நித்யஸூரிகளிற்காட்டிலும் விஞ்சியிருக்குமென்று நஞ்சீயாருளிச்செய்தார். ௯௰

காணில்- காணப்பெற்றேனாகில், உன்னை- ஸர்வஸேஷியானவுன்னை, வாரிக்கொண்டு- பிறர்க்கொன்றும் ஸேஷியாதபடி ஸங்க்ரஹித்துக்கொண்டு, விழுங்குவன்என்று- கபளீகரிப்பனென்று, அநந்தவேதைகயாதிகளுக்கவகாஸமில்லையாம்படி 'அஹம்ஸர்வம்கரிஷ்யாமி' என்கிறபடியே நானே ஸர்வவிதகைங்கர்யங்களையும்பண்ணி யநுபவிக்கவேணுமென்றென்றபடி. ஆர்வு- அபிநிவேஸத்தை, உற்ற- அடைந்தவனை, என்னையொழிய- என்னைத்தவிர, எனக்குத்தன்னை ஸாஜிக்கவொண்ணாதபடியாக வென்றபடி. என்னில்முன்னம்- தன்னைஸாஜிக்கவுத்யோகிக்கிற வென்னிலும்முன்னமே, பாரித்து- ஸாபித்து, மனோரதங்களைப்பண்ணியென்றபடி. தான்- விஸாலவாய் ஸுகந்தனானதான், என்னை- அணுவாய் ஸுகந்தனானவென்னை, முற்ற- காகஸ்ப்ஸ்யந, நிஸ்ஸேஷமாகவென்றபடி. ரஸாதிஸயத்தாலே சிந்தாவஸமாகையாலே இவ்வாத்மாவுண்டுபோயிற்றென்னும்படியாக வென்றபடி. பருகினான்- பானம்பண்ணினான், "ஸர்வஸாஸ்தாநிபங்கஜம் ஜநார்த்தநமநஸ்வயம்" என்கிறபடியே தன்ஸௌஸீல்யங்களைக்காட்டி யென்னை நீராயுருக்கிப் பானம்பண்ணினானென்றபடி. என்னைமுற்றவும் தானுண்டானென்று அவனுண்டபடிசொன்னாரிதில், உண்டவனுக்குத் தண்ணீருமவேண்டுமாகையால் தண்ணீர்குடித்தபடி சொன்னாரிதில், இத்தாலவனுடைய உண்ணுஞ்சோறு

மூ—காரொக்கும்கார்க்கரையப்பன் கடியனே* ॥ய॥
கடியனாய்க்கஞ்சனைக்கொன்றபிரான்றன்னைக் கொடிமதிள்தென்குருகூர்ச்சடகோபன்சொல்* வடிவமை
யாயிரத்திப்பத்தினால் சன்மம்* முடிவெய்தி நாசங்கண்டீர்க ளெங்கானலே* ।கக॥

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ஆ—ஸாஜிக்கவொண்ணாதபடி யென்னில் முன்னம்பாரித்துத்தானென்னை மாளஸாஜித்தருளினான், தன்னாலே விளையக்கடவ ஸஸ்யத்தினளவும்பாராதே ஸம்ருத்தமானமேகம் தன்னளவிலேவர்ஷித்தாப்போலே யென்னுடைய சிறுமைபாராதே யென்னளவிலிங்ஙனே க்ருதார்த்தமாகச் செய்தருளவேணுமோவென்கிறார். ।ய।
(கடியனாய்) ஆஸ்ரிதர்க்காக வேதேனுஞ்செய்பினு மிங்ஙனே யதார்த்தமாகச்செய்தருளும் ஸ்வபாவனா யிருந்தவனைச்சொன்னவிப்பத்து, ஸம்ஸாரஸம்பந்தமாயினா நம்முடைய ஸம்ஸாரத்தை ஸகாரணமாகப் போக்குமென்கிறார். ।கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளேசரணம்.

இ—மென்கிற ஸேவ்யஸ்வபாவத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னாலேயித்யாதியால்) ।ய

* நிகமனம். *

ஸ்வபாவத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதர்க்காகவித்யாதியால்) சன்மம்முடிவெய்தி யித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரவித்யாதியால்) ।கக॥

ஈ—பருகுநீர்' இருக்கும்படி சொல்லிற்றாயிற்று. காரொக்கும்— மேகத்துக்கு ஸத்ருசமாகாநின்றுள்ள, காரென்றுமேகம், மேகம்போலே பாத்ராபாத்ரங்களைப்பாராதே க்ருதார்த்தரைப்பண்ணும் ஸ்வபாவனென்றபடி. கார்க்கரையப்பன்- திருக்கார்க்கரையில் நித்யவாஸம்பண்ணுமவன், கடியன்- ஶீக்ரகாரீ. ஸ்வாமித்தில்தாமே முந்திக்கொள்ளுமவனென்றபடி. ॥ய॥
கடியனாய்- ஶீக்ரகாரியாய், கம்ஸனுடைய ப்ரமத்திற்காட்டில் முற்பட ஸம்ரம்பனாயென்றபடி. கஞ்சனை- கம்ஸனை, கொன்ற- ஸம்ஹரித்தவனை, பிரான்றன்னை- அத்தாலே ஆஸ்ரிதருக்கு உபகாரகனானவனை, தன்னையென்று ஸ்வாமித்தம். கொடிமதிள்- த்வஜவிராஜித ப்ராகாரஸாலியான, கொடி- த்வஜம், மதிள்- ப்ராகாரம். தென்குருகூர்ச்சடகோபன்- அழகிய திருநகரியையுடையவரான ஆழ்வார், திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாரென்றபடி. சொல்- சொன்னதான, வடிவமை- அழகுவடிவமாயிருக்கிற, வடிவு- அழகு. அமைவு- பரிசுத்தி, ஸர்வஸ்வரூபஸோபநமான வென்றபடி. ஆயிரத்துள்- ஸஹஸ்ரத்தில், இப்பத்து- இந்தப்ரபந்தத்தினாலே, சன்மம்- ஜந்மமானது, ஜநநமரணபரம்பரையானதென்றபடி. முடிவு- ஸமாப்தியை, எய்தி- அடைந்து, புநஜந்மமில்லாமலென்றபடி. எங்கானல்- நம்முடைய ரூபத்வேஷயான து, கானல்- ரூபத்வேஷ, நம்முடைய ஸாவதாநஸஹ்ய ஆக்கிவிஷயமான ஸம்ஸாரமானதென்றபடி. எம்மென்று ஸ்வஸம்பந்திகளைக்கூட்டிச்சொல்லுகிறது. இத்திருவாய்மொழிகற்பாரை ஸ்வஸம்பந்திகளாக ஸ்வீகரித்துநிர்தேஶித்தபடி. நாசங்கண்டீர்கள்- நாஶமாம்கிடிகோள், நிஶ்ஶேஷமாக நஶிக்கும் கிடிகோளென்றபடி. கண்டீர்களென்றதாலே இதில்ஸம்ஶயமில்லையென்றபடி. ।கக॥

* ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஸேவதிஸ்ரீமதே அஹோபிலராமாநுஜமஹாதேஶிகாய நம꞉. *

ஶ்ரீ꞉.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி꞉.

(உருகுமால்நெஞ்சம்.)

ஆஶ்ரயேஹாநிதக்ஷாதிவைஷம்யாதயாவாஹநாத்தகஸஹேர்நாரz
ஶக்யாஶக்தஸஹேர்நாஜஸ்ர தநுதயாஸ்ராக்ஷர்க்கக்ஷாக ।
ஔதார்யாத்தேவிபூஷிதாதிவிஸஸ்ரோத்ரஸ்த்ரகர்ணத்வஸம்பர
இஷ்டதத்தமெநவஶக்யாஹரிரிதிஸம்ஜிக்கலேஸேதாரதாஹ ॥ய0॥

(ஆஶ்ரயேஹாநிதக்ஷாக) மருவியமாயன்தன்- ஆஶ்ரயமெஷ்டிதங்களை யுடையவனுகையாலும்,

ஞா — தா — (அவிஜ்ஞாதா பாவ) தென்கார்க்கரையென்னப்பா- ஸர்வஜ்ஞனாகையாலும், (சராசராத்மாக க்ஷேத்ர) என்னுயிராயென்னுயிருண்டான்- சராசராத்மாவாயிருக்கையாலும், (ஸமஸ்த க்ஷேத்ர) தன்னுளனைத்துலகும்நிற்கநெறிமையால்தானுமவற்றுள்நிற்கும்பிரான்- ஸகல வஸ்துக்களுக்கும் தான் ஆதாரமாய் அவற்றை யாதாரமுமாகவுடையனாய் இவ்வழி சவ்யாப்தனாகையாலும், (ஜலதாபா) கருவளர்மேனி- கறுப்பு வளராநிற்கைபோலே நீலமேகம்போலேயிருக்கிற திருமேனியை யுடையவனாகையாலும், (லக்ஷ்மீநாத லக்ஷ்மீகாந்த) என்கண்ணன்கள்வம்- கார்க்கரையேத்துமதனுட் கண்ணனென்றும்- ஆச்ரிதர்க்கு ஸுலபனுமாய் இவர்களுடைய ஹ்ருதயத்தை யபஹரிக்குமவனாகையாலும், (ஔதார்ய க்ஷேமி ஸஜ்ஜாதவிவ) காளநீர்மேகத்தென்கார்க்கரையென்னப்பற்கு- காளமேகம்வர்ஷிக்குமாப்போலே எல்லார்க்கும் அபேக்ஷிதங்களைவர்ஷிக்கும் ஔதார்யாதிசயத்தை யுடையவனாகையாலும், ஆச்ரயத்தாலே பேரிழ்த்தாமரைக்கண்” ஐச்வர்ய ஸௌசீல்யாதிகுணங்களையுடைய ஸர்வேச்வரனாகவும் ஸம்பாவிக்கப்படுகிறது. (ஸர்வ ஸத்வஸமாச்ரயணீய ஸம்பாத) என்னில்முன்னம்பாரித்து- ஸம்ஸாரிசேதநரக்ஷணத்திலே யிவர்களைக்காட்டிலும் தானேமுன்னே முயலுமவனாகையாலும், எம்பெருமான் விஸ்மரணத்துக்கசக்யனென்று “உருகுமால்நெஞ்சம்” என்கிற ஶ்லோகத்திலே ஆழ்வார் அநுஸந்தித்தருளினாரென்கிறார். ௧௦அ

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் ஆறாந்திருவாய்மொழிமுற்றிற்று.



# ஏழாந்திருவாய்மொழி.

மூ— எங்கானலகங்கழிவாயிரைதேர்ந்திங்கினிதமரும்*

ஆ— (எங்கானல்) இந்தவஸ்தாவிசேஷமான மாநஸஸம்யோகஜநிதவ்யாக்ஷேபமானது மாறி சர்வஸ்வமுமே தலையெடுத்து அத்யவஸாயத்தாலே தூதுப்ரேஷணம்பண்ணுகிறார்.

ஏழாந்திருவாய்மொழி.

இ— இப்படி ஸம்ச்லேஷார்த்தியாயிருக்கிறவாழ்வார் அநந்யகதித்வப்ரஸங்கமெயில்போலே இத்திருவாய்மொழியிலே தூதுப்ரேஷணம்பண்ணுகை ப்ரஸங்கமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (இந்தவஸ்தாவஸ்த்யாதியால்) கீழ்த்திருவாய்மொழியில் விச்லேஷதசையிலே மாநஸஸாக்ஷாத்காரத்தாலே ஸ்ரீதிடந்தேயாகிலும் அவர் த்ருஷ்ணையும் மஹிதமாய்க்கொண்டு அநவஸ்திதமாயிருந்ததாகையாலே யிப்போதும் ஸம்பஸ்ஸாக்ஷாத்காரமில்லாமையாலே பின்னையும் சர்வஸ்வமே உஜ்ஜ்வலமாய்விட்டதாகையாலே மிகவுமார்த்தராகையாலே தூதுப்ரேஷணம்பண்ணுகை ஸங்கதமென்றதாயிற்று. தூதுப்ரேஷணம்பண்ணுகிறாரென்றது- வ்யாகுலவஸ்தாஸ்யாவஸ்திதத்தை யெம்பெருமானுக்கறிவிக்கிறாரென்றபடி. இத்தாலித்திருவாய்மொழிக்கு வ்யாகுலவிஷயஸம்ஹவிஷயகமென்கிற ஸங்க்ஷேபணம் ஸம்பந்தமென்றதாயிற்று. *

ஶ— எங்கானல்- எங்கள்கானலுடைய, கானல- ஸமுத்ரதீரவநம், இங்கு மணல்வந்த்ரு உத்யானவாசம். உங்களுக்குபயோகமாஹமாயபடி எங்களுக்கொரு உத்யானமுண்டாகப் பெற்றதேயென்றுகருத்து. அகம்- உள்ளில், இப்படியுள்ளே அஸங்கிதராய் வந்திருக்கும்படி யுங்களை அநாயாஸமாகப் பெற்றோமேயென்று கருத்து. கழிவாய்- கழியினிடத்திலே, கழி- ஸமுத்ரநதிகளுடைய ஜலவிவாஹஸந்நிவேசவிசேஷம்- வாயென்று இடம், இரை- ஆஹாரத்தை, தேர்ந்து- தேடி, “ஹ்ருஷ்டஹம்ஸஸமாகுலம்” என்கிறபடியே எங்கள் ஸந்நிஹித விஷயங்களான வஸ்துக்களை நீங்கள் ஸ்வீகரிக்கவும் ஸாத்யம்பெற்றோமேயென்று கருத்து. இங்கு- இந்த ஸமீபப்ரதேசத்திலே, தன் ஸௌஹார்த்தத்தாலே யென் தோஷத்தை அவஹரித்துக்கொண்டு என்னை விச்லேஷித்துப்போய் தூதுவிடவேண்டும்படியாயிருக்கிற வவனைப்போலன்றிக்கே ஸந்நிஹிதராகப்பெற்றோமேயென்று கருத்து. இனிது- போகமாக, அநாயாஸமாகவென்றபடி. க்ரியாவிசேஷணம். அமரும்- ப்ரதிஷ்டிதராகாநிற்கிற, என்பக்கல் ஸௌஹார்த்தத்தாலே இங்கே நித்யவாஸரஸிகராகாநிற்கிற

ஸூ— செங்கால்மடநாராய் திருமூழிக்களத்துறையுஞ்* கொங்கார்பூந்துழாய்முடியெங்குடக் கூத்தர்க்கென் றூதாய்* நுங்கால்களென்றலைமேற் கொழுமீரோ நுமரோடே* ||க||

ஆ—தன்னைப்பிரியில் நான்யாபிக்கமாட்டாததொருபடி, தன்னழகாலும் தன்செயல்களாலும் என்னைத்தோற்பித்து அடிமையாக்கி என்னோடேகலந்தருளிப்போய் திருமூழிக்களத்திலே யிருந்தருளின வெம்பெருமானுக்கென் றிறம் சொல்லவேணும், உங்களுக்கடிமையே நானிருக்கிறேன், என்றுநாரைகளை யிரக்கிறாள் ||கா||

முதற்பாட்டு.

இ— கொங்கார்பூந்துழாய்முடி யென்குடக்கூத்தர்க்கென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னைப்பிரியில் இத்யாதியால்) அதில்தன்னழகாலுமென்றது. கொங்கார்பூந்துழாய்முடியென்கிறதற்குத் தாத்பர்யஞ்சொன்னபடி, தன்செயல்களாலுமென்றது- குடக்கூத்தர்க்கென்கிறதற்குத் தாத்பர்யஞ்சொன்னபடி, என்னைத் தோற்பித்து இத்யாதியாகச்சொன்னது- எம்மென்கிறபதத்தில் விவக்ஷிதார்த்தஞ்சொன்னபடி. என்றூதாயென் கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்திறஞ்சொல்லவேணுமென்று) திறம்- ப்ரகாரம், என்விரஹக்லேசத்தையென்றபடி. தாஸீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களுக்கித்யாதியால்) தன்னழகாலுமென்றதாலும் நாரைகளையென்றதாலும் இப்பிராட்டி எம்பெருமானுடைய வழகிலேயீடுபட்டு அவனோடே ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷித்தவளாய், விரஹவ்யஸநிநியாய், தன்னாற்றாமையாலே க்ருஹத்தில்நின்று உத்யாநப்ரதேஶத்திலேசென்று அங்கேயிருந்த பக்ஷிகளைக்கண்டவளாய், தன்னுடைய ஸகிகளும் தன்னோடு ஸமாநது:கைகளாகையால் அவர்கள் கார்யக்ஷமைகளல்லாமையாலும், தான் வ்யஸநாதிஶயத்தாலே அறிவழிந்திருக்கையாலே 'தான்சொல்லுகிறவார்த்தையை அவையறியா' என்று விவேகிக்கமாட்டாமையாலும்; அவற்றைத்தூதுபோகப் ப்ரார்த்திக்கிறாளென்றுகருத்து. தன்னைப்பிரியிலித்யாதியாலே விஶ்லேஷத்தில் என்னை யாபிக்கவொட்டாத ஸௌந்தர்யத்தையுடையவனென்கையாலே ஸ்வாபதேஶத்தில் அஞ்சிறையமடநாரையில் ஆசார்யஸம்பந்தம் பற்றாசாகவும், வைகல்பூங்கழிவாயில் ஶேஷித்வஸம்பந்தம் பற்றாசாகவும்,

வ்யா— வென்றபடி, செங்கால- சிவந்தகாலை யுடையீர்களான, என்மடியிலிருக்கும் கால்போலே யிராநின்றது நான்தலையிலே வைத்துக்கொள்ளப்புகுகிற காலுமென்று கருத்து. மடநாராய்- முக்தங்களான நாரைகாள்?, நாராயென்று ஜாத்யேகவசநம். திருமூழிக்களத்து- திருமூழிக்களமென்கிற திவ்யநகரத்திலே, உறையும்- வஸியாநிற்கிறவனை, தூதுபோவார்க்கு ஸுலபனென்னும்படி ஸந்நிஹிதனாயிருக்கையாலே, வர்த்தமாநத்திலும் ஏற்றஞ்சொல்லுகிறபடி. கொங்கார்- மகரந்தபூர்ணமான, கொங்கு- மகரந்தம், பூம்- தர்ஶநீயமான. துழாய் முடி- திருத்துழாயைத் திருமுடியிலேயுடையவரான, எங்குடக்கூத்தர்க்கு- என்னுடைய குடக்கூத்தர்க்கு, எம்மென்று பூஜாபஹுவசநம், இங்கு வடிவழகுவிஶேஷண ஸமபிவ்யாஹாரத்தால் தன்னுடைய திவ்யாலங்காராதி ஸௌந்தர்யங்களாலும் விசித்ரசேஷ்டிதங்களாலுமென்னை வஶீகரித்தவனை யென்றபடி. குடக்கூத்தாவது- இடையர் பால்குடத்தைத் தலையிலேவைத்துக்கொண்டு ஆடும் ந்ருத்தவிஶேஷம், குடக் கூத்துடையவர்- குடக்கூத்தர். விசித்ரசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனுக்கென்றபடி.. என்றூதாய்- என்னுடைய தூதிலேயாய், தூது- உக்திகத்யமும், தேஶமான உக்திகத்யத்திலே அதிகரித்தென்றபடி. இதுசெய்கிறேனென் றங்கீகரித்தென்றபடி. இதுக்குக்கொழுமீரோவென்கிறதோடே யந்வயம். ஸாதரமீகாராதித்தாலே நானுங்களுக்கு ஸம்மாகையாலே நீங்களெனக்கு நித்யஸேவ்யங்களென்று கருத்து, நுமரோடே- யுஷ்மதீயர்களோடே, உங்களுடைய ஸப்ரவாதிகளோடேகூடவென்றபடி. இங்கு ஸ்வாபதேஶத்தில் 'ஆசார்யவதாசார்யாஶ்ரயத்வாத்' 'ஆசார்யவதாசார்யவாதி த்வாத்' "ஶாஸ்த்ர ஸமஶ்ருதேஷு வ்ருத்தி:" என்றது விவக்ஷிதம். நுங்கால்கள்- எங்களுக்குவகரிஷ்ணரான வுங்களுடைய திருவடிகளை, என்தலைமேல்- உங்களையாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கவிருக்கிற வென்னுடைய உத்தமாங்கத்திலே, தலையென்று உத்தமாங்கமலங்க்ருதவ்யமாயம், ஸமவஹிதத்தில் வடக்கரானவர்களுடைய வாரணாஸ்மோஜத்தை வஹிக்கப்பெறுகிறதென்னும் ப்ரீதியாலே தன்ஶிரஸ்ஸைக்கொண்டாடுகிறபடி. அழகியமயிரையுடையார் பூச்சூடவாசைப் படுமாப்போலே ப்ரீதியாலேசொல்லுகிறபடி. கொழுமீரோ- சேரீர்களோ, கொழுமை- சேர்க்கை. சேர்த்தருள வேணுமென்றபடி, வையுங்கோளென்னாதே, சேருங்கோளென்றதாலே. யென்தலையும் நுங்கள் திருவடிகளும்

மூ— நுமரோடும்பிரியாதே நீரு நுஞ்சேவலுமாய்* அமர்காதற் குருகினங்காள் அணிமூழிக்களத்துறையும்* எமராலும் பழிப்புண்டிங்கென்றம்மா லிழிப்புண்டு* தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே* ॥௨॥

ஆ—(நுமரோடும்) 'அவருக்குச் சொல்லும் வார்த்தையைக் கேளுங்கோள்' என்று குருகுகளையழைத்துவைத்து நடுவே தன்னுடைவாலே 'தம்மாலுபேக்ஷிதையாய் என்பந்துக்களாலும் கர்ஹிதையாயிங்கேயிருக்கு மிவ்விருப்பென்செய்ய? விவ்விருப்பில் முடிகைபோரும்' என்று தம்மைச்சொல்லி யின்னாதாய்; பின்னையுமவனை விடமாட்டாமையாலே 'தாமும் தம் பரிஜநங்களுமாயிருந்தவிருப்பைக் காண்கைக்கு நானர்ஹையாயிழந்துபோமித்தனையோ' என்று கேளீரென்றுகொண்டு தான்சொல்லப்புக்கவார்த்தையை யவற்றுக்குச் சொல்லி முடிக்கிறாள். ॥௨॥

இ— பொன்னுலகாளீரிலே ஆஶ்ரிதரோடைகரஸ்யம் பற்றாசாகவும், தூதுவிட்டவர் இத்திருவாய்மொழியிலே தன்னழகைக்கண்டநுபவித்தவர்கள் விஶ்லேஷத்தில் தரிக்கமாட்டுவர்களோ' என்று அறிவிக்கவே எழுந்தருளும் என்றிப்படி ஸௌந்தர்யம்பற்றாசாகத் தூதுவிடுகிறாளென்று ஸங்கதிமாயிற்று. இப்படி இந்நாலு திருவாய்மொழிகளுக்குமுள்ள ஸங்கதிவிஶேஷங்களை 'ஐஶ்வர்யஸஹகாரித்வ விஶ்லேஷாஸஹத்வ வைலக்ஷண்ய ஸௌந்தர்ய ஸ்வப்ரகாஶத்வாதிகரூபேண:" என்று உரைக்காரர் ஸங்க்ரஹித்தருளினார். ॥௯॥

✳ இரண்டாம்பாட்டு. ✳

ஸம்போதநத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவருக்கித்யாதியால்) கீழ்நாரைகளைப் ப்ரார்த்தித்தவள் அவற்றுக்குச் சொல்லவேண்டும்வார்த்தையை வ்யஸநாதிஶயத்தாலே வந்தகலக்கத்தாலே குருகுகளைநோக்கிச்சொல்லுகிறாளென்று ஸங்கதியபிப்ராயம். த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நடுவேயித்யாதியால்). தன்னுடைவாலேயென்கிறதற்கு இன்னாதாயென்கிறத்தோடே அந்வயம். என்செய்யவென்கிறதற்குக்கீழோடேயந்வயம். இதென்னப்ரயோஜநத்தை ஸாதிக்கைக்காக விருக்கிறதென்றபடி. இன்னாதாய்நிவ்ருத்தியையாய், சதுர்த்தபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்), மாட்டாமையாலேயென்கிறதற்குச் சொல்லியென்கிறத்தோடே அந்வயம். ॥௨॥

ரா— பிரிந்திருக்கை யிவையிரண்டுக்கும் ஸாமாந்யாதிகரண்யமென்றுகருத்து. ஓகாரத்தால் இதுஶேஷிகளுக்கு ஸ்வாபமன்றோ? இது ப்ரார்த்திக்கவேணுமோ வென்றபடி. ॥௯॥

நுமரோடும் ஸ்வகீயரோடும், உங்கள்பந்துக்களோடுமென்றபடி. ஸர்வம் உத்தரவாக்யார்த்தத்தோடே ஸம்பந்திக்கும். பந்துக்களோடும்பிரியாதே தம்பதிகளாக ஸம்ஶ்லேஷித்துமிருக்கிறவென்று வாக்யார்த்த ஸம்பந்தப்ரகாரம். பிரியாதே- விஶ்லேஷியாதே, நீ நுநும்சேவலுமாய்- ஸதீவ்ருதாநுவர்த்திநிகளான நீரும் ஸ்வோத்ருதாநுவர்த்திகளான பதிகளுமாய், சேவல்- ஸ்வாமிபக்ஷி, அமர்- அமர்ந்திருக்கிறவையான, விஶ்லேஷமின்றிக்கே ஸம்ஶ்லேஷித்திருக்கிறவையான வென்றபடி. இப்படி ஸர்வஸம்ஶ்லேஷஸாக்ஷிகரான நீங்கள் விஶ்லேஷதுஃகிதையான வென்துஃகங்களைப் போக்கவேண்டாவோ வென்றுகருத்து. காதல்குருகினங்காள்- காதலையுடைய குருகின்ஸமூஹங்காள்?, காதல்- ப்ரேமம், காதல்குருகென்று பரஸ்பராபிலக்ஷஸாபேக்ஷம். குருகு- நாரையிலேஜாதிவிஶேஷம், இனம்- ஸமூஹம், ஸர்வஸ்வப்ரதாதிகளான குருகுஸமூஹங்காளென்றபடி. அணி- அழகியதான, மூழிக்களத்து- திருமூழிக்களமென்கிற திவ்யதேஶத்திலே, உறையும்- வஸியாநிற்குமவரான, தம்மால்- அங்குள்ளபரிஜநங்களோடு ஸம்ஶ்லேஷரஸிகரான தம்மாலே, இழிப்புண்டு- உபேக்ஷையநுபவித்து, இழிப்பு- உபேக்ஷை, ஸக்ருத்ஸம்ஶ்லேஷாநந்தரமே உபேக்ஷிக்கப்பட்டென்றபடி. எமராலும்- ஸ்வகீயராலும், என்பந்துக்களாலுமென்றபடி. பழிப்புண்டு- கர்ஹையையநுபவித்து. பழிப்பு- கர்ஹை, இங்கு- இந்தஸம்ஶ்லேஷத்திலே, என்?- என்னப்ரயோஜநம், தமரோடு- ஸ்வகீயரோடு; தமக்கந்தரங்கரான பரிஜநங்களோடே கூடவென்றபடி. அங்கு- அந்ததிருமூழிக்களத்திலே, உறைவார்க்கு- நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு, தக்கிலமே- தக்கவரல்லோமே, யோக்யரல்லோமோவென்றபடி. ஆத்மநிவேதநவசநம், கேளீர்- கேளுங்கோள், தாமும் தம்பரிஜநங்களுமா யெழுந்தருளியிருக்கிறவழகை யநுபவிக்கைக்கு நானர்ஹையல்லேனோவென்று நீங்கள் கேட்க்கவேணுமென்றபடி. ॥௯॥

மூ— தக்கிலமேகேளீர்கடம்புனல்வாயிரைதேருஞ்* கொக்கினங்காள்குருகினங்காள்குளிர்மூழிக்களத்துறை
யுஞ்* செக்கமலத்தலர்போலுங்கண்கைகால்செங்கனிவாய்* அக்கமலத்திலைபோலுந்திருமேனியடிகளுக்கே ‖
திருமேனியடிகளுக்குத்தீவினையேன்விடுதூதாய்த்* திருமூழிக்களமென்னுஞ்செழுநகர்வாயணிமுகில்காள்*
திருமேனியவட்கருளீரென்றக்காலுமைத்தன்*

ஆ—(தக்கிலமே) தன்னைக்காண்கைக்கு நானொப்பில்லையன்றியே அவ்வழகையுங் காணப்பெறாதே யிழந்துபோமித்தனையோவென்று கேளீரென்கிறாள். ‖௩‖

(திருமேனி) திருமூழிக்களமென்னுஞ் செழுநகர்வாயணிமுகில்காள்? 'திருமேனியவட்கருளீர்' என்றித்தனையுஞ்சொன்னாலுமுங்களுக்குப் ஸாத்யமான திருமேனியொளியை யுங்களையிழப்பித்து அவ்வூரில்நின்றும்

✳ மூன்றாம்பாட்டு. ✳

இ— செக்கமலத்தித்யாதி அடிகளுக்குத்தக்கிலமேகேளீர்க ளென்றநுபித்து அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னைபித்யாதியால்) அவ்வழகையுமென்கிறவிடத்தில் ஸமுச்சயத்தால் கீழ்ப்பாட்டிற்சொன்ன ஸர்வஜந ஸௌசீல்யத்தைக் காணப்பெறாதவளவன்றிக்கே அவன்திருமேனியழகையும் காணப்பெறேனென்கிறாளென்று ஸமுச்சயத்துக்கு ஸ்வாரஸ்யம். ‖௩‖

✳ நாலாம்பாட்டு. ✳

என்னக்காலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இத்தனையுஞ்சொன்னாலுமென்று) ஸமுச்சயம்வ்வு க்ரோதத்தாலு முங்களை ஹிம்ஸிக்குமோவென்கைக்காக. திருமேனியொளியகற்றியென்கிறதற்குத் தாத்பர்ய—

ப— தடம்புனல்வாய்- தடாகஜலப்ரதேஶத்திலே, தடம்- தடாகம், புனல்- ஜலம், வாய்- இடம், இரை- ஆஹாரங்களை, தேரும்- தேடாநிற்கிற, நான் உபவாஸக்ருஶையாயிருக்க நீங்களிங்ஙனே யாஹாரபரராயிருக்கை யுசிதமோவென்றுகருத்து. கொக்கினங்காள்- பகஸமூஹங்காள், குருகினங்காள்- நாமபக்ஷிவிஶேஷஸமூஹங்காள், என்னபிநிவேஶாநுகுணமாகத் தூதுபோகைக்குத் திரள்திரளாகக் காணப்பெற்றேனென்றுகருத்து. குளிர்- ஶீதளமான, ஸஞ்சாரார்ஹமானவென்றபடி. என்விரஹதாபம்போகைக்கு அவ்வூரைக் காணப்பெற்றிலேனென்று கருத்து. மூழிக்களத்து- திருமூழிக்களமென்கிற திவ்யநகரத்திலே, உறையும்- வஸியாநிற்கிறவனுடைய, செக்கமலத்து- செந்தாமரையினுடைய, அலர்போலும் விகாஸத்துக்கு ஸத்ருஶமாகாநிற்கிற, கண்கைகால்செங்கனிவாய்- நயநகரசரண பிம்பாதரங்களையுடையவரான, செங்கனி- சிவந்தபழம், பிம்பபலமென்றபடி. வாய்- அதரம், அக்கமலத்து- அந்தசெந்தாமரையினுடைய, இலைபோலும்- இலைக்குஸத்ருஶமாகாநின்றுள்ள, திருமேனி- அத்திவ்யாவயவங்களுக்குப் ஆஶ்ரயமாம்படி ஶ்யாமளமான திருமேனியையுடையவனுடைய, அடிகளுக்கு- ஸ்வாமிக்கு, பூஜாயாம் பஹுவசநம். தக்கிலமே- நாம்தக்கவரல்லோமோ, அவருடையவவ்வழகை நாம் அநுபவிக்கைக்கு யோக்யரல்லோமோவென்றபடி. கேளீர்கள்- நீங்களங்கேசென்று கேட்கவேணும். ‖௩‖

திருமூழிக்களம்என்னும்- திருமூழிக்களமென்றுப்ரஸித்தமான, செழுநகர்வாய்- ரமணீயநகரப்ரதேஶத்திலே, செழு- ரமணீயம், நகரத்துக்குஸந்நிஹிதமான ஆகாஶப்ரதேஶத்திலே ஸஞ்சரிக்கிறவென்றபடி. அணி- ஸுந்தரங்களான, முகில்காள்- மேகங்காள், திருமேனியடிகளுக்கு- திருமேனியாலே ஸ்வாமியாயிருக்கிறவருக்கு, "பயாஹம் கேஶவவ்யக்திரூபஸம்பத்திவேஷிதோ" என்கிறபடியே தன்திருமேனியழகாலே ஸர்வரையும் வஶீகரித்தடிமைகொண்டிருக்கிறவருக்கென்றபடி. இதுக்கு தூதாயென்கிறத்தோடே அந்வயம், தீவினையேன்- அவ்வழகை யநுபவிக்கப்பெறாதே யிழந்து உங்கள்காலிலே விழவேண்டும்படியான க்ரூரகர்மங்களையுடையவளானநான், விடுதூது- விடுகிறதூதிலே, நான்விடுகிற தூதக்ருத்யத்திலேயென்றபடி. ஆய்- ஸ்வீகரித்து, அதிலே ப்ரவ்ருத்தராயென்றபடி. இதுக்கு என்னக்காலென்கிறத்தோடே அந்வயம். திருமேனி- "ஸ்தநாநாம் ஸம்ப்ரகாஶதே" என்கிறபடியே வைவர்ண்யமாயிருக்கிற வும்முடையதிருமேனியை, அவட்கு- இத்தையாசைப்படுகிற அவளுக்கு, அருளீர்- க்ருபையாலே கொடுக்கவேணும், உமக்கவள்பக்கல் ப்ரணயித்வம்போனாலும் ஸாதாரணமான க்ருபையுமில்லையோ வென்றுகருத்து. என்றக்கால். இப்படிநீங்கள்சொன்னக்கால், "ஸாவாயஸ்யோபத்ருஷ்டி" என்கிறபடியே உங்களுக்கொரு உக்ரோத்தமன்றோ வேண்டு

மூ— தூதுரைத்தல்செப்புமின்கடூமொழிவாய்வண்டினங்காள்* போதிரைத்துமதுநுகரும்பொழின்மூழிக்கள
த்துறையு* மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கென்வாய்மாற்றந்* தூதுரைத்தல்செப்புதிரேல்சுடர்வளை
யுங்கலையுமே* ॥௬॥

சுடர்வளையுங்கலையுங்கொண்டருவினையேன்றோடுறந்த* படர்புகழான்

ஆ—சொல்லவேணும், சொல்லுமிடத்தில் அவனுங்கள்வார்த்தையை கடாக்ஷியாமே பிராட்டிஸந்நிதியிலே வைத்துச் சொல்லவேணுமென்கிறாள். ॥௬॥

(சுடர்வளையும்) படர்பொழில்வாய்க்குருகினங்காள், உன்னழகாலே யவளைவசீகரித்து அவளோடே

இ—(விருத்தியால்) என்வாய்மாற்றம் தூதுரைத்தல்செப்புதிரேல் போதிரைத்த்வ்ருத்திமாதரையித்ருஶிசெப்புமின் களென்றநுஷங்கமெனாவயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சொல்லுமிடத்திலித்ருஶியால்) வண்டுகளையேகிழ்ச்சொன்ன விஶேஷங்களாகஹ்ருதித்தாதல் ஜீவங்கள்சொல்லாதொழிந்தவாறேயாதல் வண்டுகளைநோக்கிச்சொல்லுகிறாளென்றுஸங்கதி. இப்படி மேலுங்கண்டுகொள்வது. ॥௬॥

✳ ஏழாம்பாட்டு ✳

பங்கயக்கட்சுடர்பவளவாயனை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னழகாலேயித்ருஶியால்)

ப— தூமொழிவாய்- மநோஜ்ஞங்களான வுக்திகளுடைய வாய்ப்பையுடையவையான, தூ என்றது ஸௌந்தர்ய்யமநோஜ்ஞத்தைவக்ஷிக்கிறது. வாயென்றது வாய்ப்பு, லாபமென்றபடி. "நாஸாமதேவ விஶேஷஶ்ரூகு ஶேஷவ்ரு ஷாஷிதம்" என்கையாலே உக்தனவானுக்கு வாவிஸ்தாரஞ்ஜநங்களான வுக்திகள் ஸ்வாபாவமிறே; அவன் வருவோமல்லோமென்றிருந்தாலு முங்கள் வாக்ஸௌந்தர்யத்தாலே அவனுக்கு வரவேண்டும்படியாமென்று கருத்து. வண்டினங்காள்- ஸ்மரமஸ்ஸங்கங்காள், சுடர்வளையும்- காந்திமத்துக்களான வென்னுடைய வலய ங்களையும், கலையும்- வஸ்த்ரத்தையும், பட்டுடையழகையும், தூதுரைத்தல்- உத்தஸாஷணமாக, செப்புமின்கள்- சொல்லுங்கோள், உத்தஸாஷணமாகச் சொல்லுகையாவது விரஹக்லேஶாபையாலே தன் வலயங்களையும் பட்டுடையழகையு மிழந்தேனென்றுசொல்லுகை, என்- என்னுடைய, வாய்- உக்தியினுடைய, மாற்றம்- ஸ நந்தகாரணமானவமான, மாற்றம்- ஸநந்தகாரகம், தன்வலயங்களையும் பட்டுடையழகையு மிழந்தேனென்றி ப்படி யென்னுடைய வாமமக்ருநகாரணமானவமானவென்றபடி. தூதுரைத்தல்- உத்தஸாஷணத்தை, செ ப்புதிரேல்- சொல்லுகிறீர்களாகில், இதுக்கு செப்புமின்களென்கிறத்தோடே யந்வயம். போது- ஸமயங்க ளிலே, விஶேஷங்கள்விகஸிக்கிற ஸமயங்களிலேயென்றபடி. ஶ்ரீவாமமுதலிகளுக்குப்போலே ஸம்ஸாரம் மீண்டுவருகிறபோதென்கிற நிர்ப்பயமுங்களுக்கில்லை, ஸம்ஸாரிகளைப்போலே விலக்குவாரு முங்களு க்கில்லையென்றுகருத்து. இரைத்து- ஹர்ஷத்தாலே கோலாஹலம்பண்ணிக்கொண்டு, மது- ரஸங்களை நுகரும்பொழில்- உங்களுக்கு வாஸம்பண்ணும்படியான ஸம்ருத்திகளையுடைத்தான, நுகர்கை- வாஸம்ப ண்ணுகை, திருமூழிக்களத்து- அந்தவிஶேஷதமாநத்திலே, உறையும்- வஸிக்குமவரான, இது வாஜிக்குவிஶேஷ ணம். மாதரை- நாரீணாமுத்தமையான பெரியபிராட்டியை, மாதர்- உத்தமஸ்த்ரீ, தம்மார்பகத்தே- தம்மு டைய வக்ஷஸ்ஸுக்குள்ளே, வைத்தார்க்கு- வைத்துக்கொண்டவரான ஸ்வாமிக்கு, செப்புமின்களென்றநுஷங்கிப்பது, பிராட்டி ஸந்நிதியிலே அவருக்குச்சொல்லுங்கோளென்றபடி. ॥௬॥

படர்- விஸ்தீர்ணமான, பொழில்வாய்- உத்யாநப்ரதேஶத்தில், குருகினங்காள்- குருகு ஸங்கங்க ளாள், குருகு- நாரையில் ஜாதிவிஶேஷம். இனம்- ஸங்கம், சுடர்வளையும் காந்திமத்துக்களான வென் வலயங்களையும், கலையும்- பட்டுடையழகையும், கொண்டு- அபஹரித்துக்கொண்டு, இதுக்குத்துறந்தென்கி றதோடே அந்வயம். இவைகளைத்தானிழந்தது தத்விஶ்லேஷநிமித்தமாகையாலே யவனபஹரித்தானென்கிற து. அரு- அருமையான, துஸ்ஸஹமானவென்றபடி. வினையேன்- துக்கங்களையுடையவளான வென்னு டைய, வெகுதத்தோடேவந்து ஸம்ஶ்லேஷித்தவன் விட்டுப்போம்படியான ஸௌபாக்யத்தை யுடையவளான வென்னுடைய வென்றபடி. தோள்துறந்த- தோளைத்யஜித்தவனை, "ஸமேககஸ்நிர்வரஸ்யவ நக்ஷஸ்ஸ ஸுக்ஷ்மம்" என்கிறகணக்கிலே யென்தோளொன்றினுமே யாஸக்தியுக்தனாயிருந்தவன் இப்போதத்தைக் கைவிட்டானென்று கருத்து. படர்புகழான்- படர்ந்தபுகழை யுடையவனை, புகழ்- கீர்த்தி, என்னைக்கைவி

மூ—பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையார்க்* கேந்துநீரிளங்குருகே திருமூழிக்களத்தார்க்* கேந்துபூண் முலைபயந்தென் னிணைமலர்க்கண்ணீர்ததும்பத்* தாந்தம்மைக்கொண்டகறல் தகவன்றென்றுரையீரே* ॥௯॥
தகவன்றென்றுரையீர்கள் தடம்புனல்வாயிரைதேர்ந்து* மிகவின்பப்படமேவும் மென்னடையவன்னங்காள்* மிகமேனிமெலிவெய்தி

ஆ—(பூந்துழாய்) ஏந்துநீரிளங்குருகே, ஏந்துபூண்முலைபயந்து என்னிணைமலர்க்கண்ணீர்ததும்பத் தாம்தம்மைக்கொண்டகலுகை தம்முடையக்ருபைக்குப் போராதென்று சொல்லிகோளென்கிறாள். ॥௯॥

(தகவன்றென்று) மென்னடையவன்னங்காள், தாம் தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்று நீங்கள்சொல்லவேணும்; சொல்லுமிடத்தில் என்னுடையமேனியும் மிகமெலிவெய்தி, மேகலையுமீடழிந்து, என்னாவியும் முடிவதற்கு முன்னே சென்று சொல்லவேணும் என்கிறாள். ॥௰॥

* ஒன்பதாம்பாட்டு. *

இ— தகவன்றென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தம்முடையவித்யாதிகளால்) ॥௯॥

* பத்தாம்பாட்டு. *

கீழ்ப்பாட்டிற் பதங்களை அநுஷங்கிக்கிறார் (தாமித்யாதியால்) பாட்டெல்லாமேகவாக்யமாயிருக்க வ்யாக்யானத்தில் 'சொல்லவேணும்' என்றிங்கு வாக்யஸேஷம்பண்ணி 'மேனிமெலிவெய்தி' இத்யாதியைத் தனித்தொருவாக்யமாகச்சொன்னது ஸ்வதந்த்ரமாகச்சொல்லவேணுமென்கையிலே பாட்டுக்குப் ப்ரதாநதாத்பர்யமென்று காட்டுகைக்காக. அகமேனியொழியாமேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னாவியுமித்யாதியால்)

ஸ— நீ ஏந்து என்றுமாறிப்பரிப்பது. நீராலேஏந்தப்படுகிற, நீருக்கஞ்சவேண்டாதபடி யதுதானேயுன்னை தரிக்கும்படியாயிருக்கிறவென்றபடி. தூதுபோம்போது நடுவே நீர் தடையானாலும் ஸ்ரீவாநராதிகளைப் போலே புணைக்கஞ்சவேண்டாவிறே யென்றுகருத்து. இளங்குருகே- மதநஸாபேக்ஷ்யத்துக்குறுப்பாக தருணவயஸ்கமானகுருகே, பூந்துழாய்முடியார்க்கு- உத்தீபநமான திருத்துழாயை முடியிலேயுடையவரான, பொன்னாழிக்கையார்க்கு- ஸ்ப்ருஹணீயமான திருவாழியை திருக்கையிலேயுடையவரான, பொன்னென்பது ஸ்வர்ணவத்ஸ்ப்ருஹணீயவசநம். திருவாழி ஆயுதமாகையன்றிக்கே திருமுடிக்குத் திருத்துழாய்போலே திருக்கைக்கு ஆபரணமாயிருக்கிறதென்றுகருத்து. திருமூழிக்களத்தார்க்கு- அத்திவ்யநகரத்திலே யெழுந்தருளியிருக்கிறவர்க்கு, விமாநகோபுரங்கள்போலே திவ்யநகரத்துக் கலங்காரங்களான ஸௌந்தர்யலாவண்யாதிகளையுடையவர்க்கென்றபடி. இதுக்கு உரையீரென்கிறதோடே யந்வயம். பூணேந்து என்றுமாறிப்பரிப்பது. ஆபரணங்களைத்தரிக்கக்கடவையான, முலை- என்னுடைய ஸ்தநங்களானவை, பயந்து- விவர்ணங்களாய், பயக்கை- விவர்ணமாகை, என்- என்னுடைய, இணைமலர்க்கண்- ஸாம்யமாயிருக்கிற பத்மங்கள்போலேயிருக்கிறகண்கள், ஸம்ஸ்லேஷதஸையிலிப்படி வர்த்திக்குமென்னுடைய கண்களானவையென்றபடி. நீர்ததும்ப- பாஷ்பஜலங்களாலேபூர்ணமாம்படி, ததும்புகை நிரம்புகை, இதுக்கு அகல்தலென்கிறதோடே யந்வயம். தாம்- கீழ்ச்சொன்ன அலங்காரங்களாலும் ஆபரணங்களாலும் நிரதிஸயஸௌந்தர்யரான தாம், தம்மைக்கொண்டகல்தல்- தம்மைக்கொடு விஸ்லேஷிப்பது, தாம்போம்போது தம்மை வைத்துப்போகாதே தம்மையுங்கூடக்கொண்டு விஸ்லேஷித்துப்போவதென்றபடி. இது விரஹவ்யஸநத்தால் வந்த கலக்கத்தாலேசொல்லுகிறபடி. தகவன்றென்று க்ருபையன்றென்று, தகவு- க்ருபை, ஹ்ருதயத்துக்குச் சேராதபடி நிஷ்டுரரானார் செய்யுங்க்ருத்யமென்று, உரையீர்- நீங்கள்சொல்லவேணும். ॥௯॥

தடம்புனல்வாய்- விஸ்தீர்ணஜலங்களிலே, தடம் விஸ்தீர்ணம் புனல்- ஜலம், தடாகஸரஸ்ஸுக்களிலேயென்றபடி. இரை- ஆஹாரத்தை, தேர்ந்து- தேடிக்கொண்டு, மிக- அதிகமாக, இன்பம்பட- ஆநந்தமுண்டாகும்படி, மேவும் ஆசரித்துவர்த்தியாநிற்கிற, பரஸ்பரம்ஸம்ஸ்லேஷித்து வர்த்தியாநிற்கிறவென்றபடி. நீங்களிப்படி ஸுகிகளாயிருக்கச்செய்தே பரகதோஷாதிகளில் ராகமற்று விரஹார்த்தையாயிருக்கிற வென்னார்த்தியைத்தீர்க்கவேண்டாவோ ஸஹவாஸிகளான நீங்களென்றுகருத்து. மென்னடைய- மெல்லியநடையையுடையவையான. ப்ரியஸம்ஸ்லேஷஜநிததயா மந்தமந்தகமநஸாலிகளானவென்றபடி. அன்னங்காள்- ராஜஹம்ஸங்காள், மேனி- என்ஸரீரமானது, மிக- அத்யந்தம், மெலிவு- கார்ஸ்யத்தை, எய்தி-

மூ—மடித்தேன்மனைவாழ்க்கையுள்நிற்பதோர்மாயைக்* கொடிக்கோபுரமாடங்கள்சூழ்திருப்பேரான்* அடிச்
சேர்வதெனக்கெளிதாயினவாறே* ॥௪॥

எளிதாயினவாறென்றென்

ஆ—(பிடித்தேன்) எம்பெருமானையினியொருநாளும் பிரியாதபடிபற்றினேன், ஸம்ஸாரஸம்பந்தமாகிற நாநாவிதயோநிஸஹஸ்ரஸங்குல ஸம்ஸாரபவஜந்மத்தையும் ஜந்மநிபந்தநதுக்கத்தையும் போக்கினேன், துக்கஹேதுவாயநாளிகாலுந்தொடங்கி யின்னமளவுஞ்செல்லுகிறவிந்த ப்ராக்ருதஸம்பந்தத்தையும் நிவ்ருத்திப்பித்தேன், இப்படி திருப்பேரானடிசேர்வதெனக்கெளிதாவதேயென்று களிக்கிறார். ॥௪॥

(எளிதாயினவாறு) திருப்பேர்நகரானைப் பெற்றேனுடைய ஸகலகரணங்களோடுங்கூட நான்களிக்கின்

## ✳ மூன்றாம்பாட்டு. ✳

இ—பிடித்தேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானையித்யாதியால்) பிறவிகெடுத்தேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரநிரோத்யாதியால்) பிணிசாரேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜந்மநிபந்தநேத்யாதியால்) மனைவாழ்க்கையுள்நிற்பதோரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (துக்கஹேத்வித்யாதியால்) மாயைமடித்தேனென்றநயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்தப்ராக்ருதேத்யாதியால்) உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டுக்களிலே பகவந்நிர்ஹேதுகமாகத் தன்னெஞ்சுநிறையப்புகுந்தபடியைய மத்தையவன்தன்னுடைய வாஸமாகவுகந்திருக்கிறபடியையும் பேசியநுஸந்தித்தவரிப்பாட்டிலே பாதஸ்ரீகமாகவந்து புகுந்தவனாலே தாமனுபாவஸந்தெபெற்ற ஸம்ஸாரநிவ்ருத்திஹேதுவான லாபங்களைப்பேசி யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதியும்ஸூசிதமாகை. ॥௪॥

## ✳ நாலாம்பாட்டு. ✳

எளிதாயினவாறென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்(திருப்பேரித்யாதியால்)என்கண்களித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதியால்) எளிதாயினவென்கிறத்தோடு ஸம்பந்தஹாரத்தால்

ஈ—வைஸாதிஸம்பந்தமான வ்யாதியை யினியடையேன், இதுஉபலக்ஷணம், ஒருதுக்கங்களையுமென்றபடி. 'நவோபஹம்ஸோ துக்கபாக்' மென்றத்தையருளிச்செய்தபடி, மனைவாழ்க்கையுள்- மனையில்வாழ்க்கையிலே, மனை- க்ருஹம், வாழ்க்கை- போகங்களைபுஜிக்கை, ஒருக்ருஹஸம்ஸாரத்திலேகிடந்து ஸுத்துதாரக்ருஹக்ஷேத்ர ஸ்பர்சவிஷயங்களைக்கொண்டு ஜகுப்ஸநீயங்களான ப்ராக்ருதவிஷயங்களை ஸம்ஸாரத்தினாலே யநுபவிக்கையிலே யென்றபடி. நிற்பது- நிற்பதான், அநுவர்த்திக்குமதானவென்றபடி. ஸம்ஸாரஸாரமோஹத்திலே ஹேதுகாரணமாகக்கொண்டு க்ஷேத்ரஜ்ஞரைவிடாதே அநுவர்த்திக்குமதானவென்றபடி. ஓர்- விலக்ஷணமான, ஸம்ஸாரிகளானாதி நித்யஸித்தஹாவரான ப்ரஹ்மாதிகளை யநுபாவிக்கும்படியான விசித்ரஸ்ருஷ்டிசக்தியை யுடைத்தானவென்றபடி. மாயை- ப்ரக்ருதியை, மடித்தேன்- என்னைத்தொடராதபடி திருப்பிவிட்டேன், இவ்வநிஷ்டநிவர்த்தநத்தில் கர்த்ருத்வம் பகவானுபிருக்கக் கெடுத்தேன், மடித்தேனென்று தம்மையே கர்த்தாவாகநிர்தேசித்தது 'அதுனம துவிதிவம்பயே' என்கிறபடியே தாம்ப்ரயோஜநகர்த்தாவாம்படி 'க்ருஷ்ணாச்ரயா க்ருஷ்ணபலா' மென்கிறகணக்கிலே அவன்தமக்கு கிங்கரீகனுமிருக்கிறானென்று ஹர்ஷத்தாலே அருளிச்செய்தபடி, கொடிக்கோபுரமாடங்கள்- த்வஜவிராஜிதங்களான கோபுரங்களாலும் க்ருஹங்களாலும், கொடி- த்வஜம், கொடிக்கோபுரமென்று ஸமாஸவாக்யப்ரயோகம், சூழ்- பரிவ்ருதமான, திருப்பேரான்- திருப்பேரென்கிற திவ்யநகரத்திலிருக்கிற ஸர்வேச்வரனுடைய, அடிச்சேர்வது- திருவடிகளையடைவது, எனக்கு- அநாதிஸம்ஸாரியாய்ப்போந்த வெனக்கு, எளிதாயினவாறே- ஸாக்ஷாத்ப்ரகாரமே, ஆறு- ப்ரகாரம், ஏகாரம் ஆச்சர்யத்யோதகம், இப்படி ஸர்வாநிஷ்டங்களும் நிவ்ருத்தங்களாகையாலே திருப்பேரானடிசேர்வது எனக்குஸாக்ஷாத்காரமாய் விட்டதே இதென்னவாச்சர்யமென்று பரமோதாரத்வங்களுக்கு மநயம். ॥௪॥

எளிதாயினவாறென்று- ஸுலபமானப்ரகாரமென்று, இங்குஎளிது- ஸுலபம், ஸர்வோத்தமமான விஷயமிங்ஙனே நமக்கெளிதாவதேயென்று விஸ்மிதனுயென்றபடி. இதற்குக் களித்தென்கிறத்தோடேயந்வயம்.

மூ—புகுந்தின்று* தானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான்* தேனேய்பொழிற்றென் திருப்பேர்நகரானே.* ||௫||

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலைப்* பொருப்பேயுறைகின்றபிரானின்றுவந்து* இருப்பேனென்றென்

ஆ—ஸம்ஸாரியாகிலும் புகிரக்கடவனையொட்டிக்கொண்ட துஸ்ஸஹமான வென்னுடையவிந்த ப்ரக்ருதி யிலேபுகுந்து, தானேயந்த ப்ரதிபந்தகங்களையும் போக்கியருளினானென்கிறார். ||௫||

(திருப்பேர்நகரான்) திருப்பேரையுந் திருமாலிருஞ்சோலையையுந் தனக்குக்கோயிலாகவுடையவன் தனக் கோரிருப்பிடமில்லாதாரைப்போலே இன்றுவந்திருப்பேனென்றென்னை யிரந்துகொண்டென்னெஞ்சு நிறை யப்புகுந்தான், பின்னையுமொருநாளைக்கொருநாளவனுக்கும் ஸ்ப்ருஹணீயனாய் நானுமவனுடைய குணங்க ளாகிற அம்ருதத்தைஸேவித்து களிக்கப்பெற்றேனென்கிறார். ||௬||

இ—சேஷ்டைபண்ணிக்கொண்டு என்றபடி. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (துஸ்ஸஹமாயபி த்யாதியால்) ப்ரக்ருதியிலேயென்றது- ப்ரக்ருதிபரிணாமமான ஶரீரத்திலேயென்றபடி. த்ருதீயபாதத்துக் குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தானேயந்தவித்யாதியால்) ||௫||

* ஆறும்பாட்டு. *

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலைப்பொருப்பேயுறைகின்றபிரானின்றுவந்து என்கிறபதஸமு தாயஸமபிவ்யாஹாரத்தால் தோற்றுகிறவர்த்தத்தை யருளிச்செய்கிறார் (தனக்கோரிருப்பிடமித்யாதியால்). இத்தால் என்னெஞ்சுநிறையப்புகுந்தானென்று முதற்பாட்டிலநுஸந்தித்தவர்த்தத்தை ஸிம்ஹாவலோகித ந்யாயத்தாலே நினைத்தருளி விஸ்மிதராய் தனக்கிருப்பிடமானகோயில்கள் அநேகங்களுண்டாயிருக்க ஓரிட மில்லாதாரைப்போலே என்னையிரந்துகொண்டு வந்தென்னெஞ்சுநிறையப் புகுந்தானிதென்னவாஶ்சர்யமென் று விஸ்மிதராகிறாரென்று ஸங்கதியும் ஸந்தர்ப்பிதையாயிற்று. இருப்பேயென்கிறவிடத்தி லவதாரணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) விருப்புப்பெற்று என்கிறபதங்களுக்குத் தாத்பர்யமரு ளிச்செய்கிறார் (அவனுக்குமித்யாதியால்) அமுதமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையவி த்யாதியால்) ||௬||

ஶ—குரும்பையென்றது கூண்டு, அதிஹேயமாக ப்ரத்யக்ஷஸித்தமாய்க் கூண்டுபோலேயிருக்கிற வென்னு டைய தேஹத்துக்குள்ளேயென்றபடி. இன்று- அநாதியாக நான் ஸம்ஸரியாநிற்கச்செய்தே நடுவே இன் றைக்கு, அதாவது:— யாத்ருச்சிகஸுக்ருதத்துக்கு இப்பால்பட்டகாலத்திலே என்றபடி. புகுந்து- ப்ரவே ஶித்தருளி, தானே- திருநாட்டத்தரக்கடவனாயிருக்கிற தான்தானே, தடுமாற்றவினைகள்- தன்னைக்காண வொட்டாதே தடுமாறப்பண்ணுவிக்கிற கர்மங்களை, தடுமாறுகை- வ்யாகுலப்படுத்துகை, அவஶ்யாநுபோக்ய ப்ரதிபந்தகங்களாய்க்கொண்டு க்லேஶப்படுத்துகை, பூர்வோத்தரஸகலகர்மங்களையுமென்றபடி, தவிர்த்தான்- நிவர்த்திப்பித்தருளினான், தானேயென்கிறவிடத்தில் அவதாரணத்தால் ஸர்வாபராதங்களையும் க்ஷமித்தருளக்கடவனாயிருக்கிறவன்தானே ஸகலப்ரதிபந்தகங்களையும் நிவர்த்திப்பித்தருளினானாகையாலே நமக் கிதில் விஶநீயமில்லையென்று கருத்து. ||௫||

திருப்பேர்நகரான்- திருப்பேரென்கிற திவ்யதேஶத்தையுடையவனான, திருமாலிருஞ்சோலைப்பொருப்பே- திருமாலிருஞ்சோலையென்கிற திருமலையிலேதானே, பொருப்பு- மலை, ஸப்தம்யர்த்தே ப்ரதமை, உறைகின்ற- வஸியாநிற்கிறவனான, பொருப்பே என்கிறவிடத்தில் அவதாரணத்தாலிதரஸ்தலநிரஸநவ்யவச்சேதம் தோற் றுகையால் திருப்பேர்நகர் திருவயோத்யைபோலேயாய் '[illegible]' என் கிறகணக்கிலே திருப்பேர்நகரில்காட்டிலும் திருமாலிருஞ்சோலையவனுக்குமிகவும் ப்ரியதமமான திவ்யதேஶ மென்று தோற்றுகிறது. பிரான்- உபகாரகனானவன், இன்றுவந்து- தானிப்படி திவ்யங்களான வாஸ ஸ்தானங்களை யநாதியாகவுடையவனாய் அத்தாலே அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கச்செய்தே ஓரிடமில்லாதவனைப் போலேயின்றைக்குவந்து, இருப்பேனென்று- நானிங்கேயிருக்கப்பெறவேணுமென்று, '[illegible]' என்கிறபடியே நம்மய்யர்தாள் நிழலின்கீழே வஸிக்கப்பெறுதவிழவெல் லாம்திரும்படி இனிமேலுள்ளனாள் இவர் சிறகின்கீழேயொதுங்கி வஸிக்கப்பாராநின்றேனென்று பெரியவுடை—

மூ—மனத்துப்புகுந்தான்செறிந்தின்றே* ॥அ॥
இன்றென்னைப்பொருளாக்கித்தன்னையென்னுள்வைத்தான்*

ஆ— இன்னமிவ்வளவன்றவனுடைய பாரிப்பென்கிறார். ॥அ॥
(இன்றெனனை) திருப்பேர்நகரானின்றென்னை ஸவிஷயஜ்ஞாநவானாக்கித் தன்னையென்னுள்ளேவை

இ—த்தானென்று) கருத்தின்கண்பெரியனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்னமித்யாதியால்) பாரிப்பு - ஸம்ரம்பம், இத்தால்கீழ்ப்பாட்டிலே யாத்ருச்சிகமாகத்தாமவனுக்கே பராவஸ்தைபோலேநாராயரானபடியை யநுஸந்தித்தவரிப்பாட்டிலே தாமிப்படி நிரபேக்ஷராயிருக்கச்செய்தேயு மவனுடைய ரக்ஷணஸம்ரம்பங்களநந்தங்களாயிருக்கிறனவென்று ஸ்ரீகராகிறாரென்று ஸங்கதியும்ஸூசிதை. ॥அ॥

* ஒன்பதாம்பாட்டு. *

பொருளாக்கியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸவிஷயேத்யாதியால்) 'அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத, ஸந்தமேநம் ததோ விது:' என்கிறவாக்யார்த்தமிங்கே அபிப்ரேதமென்றுகருத்து. ப்ரதமவாக்யத்தில் இன்றென்கிறபதத்துக்கு நானநாதியாக ஸம்ஸரியாநிற்கச்செய்தே நடுவே நிர்ஹேதுகமாக வின்றைக்கென்றர்த்தமாகையாலே என்னைப்பொருளாக்கி தன்னையென்னுள்வைக்கைக்கு நானொருஹேதுவைக்காணேனென்று ஹேதுவைக்ஷேபிக்கிறதாக ஸூசிதமாகையாலும் ஒன்றெனக்கருள்செய்யவித்யாதியாலே இதுக்கொருத்தரமருளிச்செய்யவேணுமென்றவனை ப்ரச்நம்பண்ணுகிறதாக முடிக்கையாலு மிப்ப்ரதமவாக்யம் ஹேதுவிஷயத்தில் ப்ரச்நகர்ப்பாக்ஷேபவாக்யமென்று நினைத்தந்த ப்ரச்நப்ரகாரத்தைக்காட்டுகிறார் (தன்னை

மா—தன்னாலும் விச்லேஷிக்கமுடியாதபடியாக வென்றபடி. என்மனத்து— என்னுடையமநஸ்ஸிலே, இன்று— அநாதியாகநான் ஸம்ஸரியாநிற்கச்செய்தே நடுவேஇன்றைக்கு, செறிந்துபுகுந்தான்— அபிவ்ருத்தனாய்க்கொண்டு புகுந்தான், செறிவு— அபிவ்ருத்தி, என்மநஸ்ஸில் புகிறத்துடங்கினவாறே அபிவ்ருத்தமான ஸௌந்தர்யலாவண்யவாத்ஸல்யாதிகளையுடையவனாய்க்கொண்டு புகுந்தானென்றபடி. கருத்தின்கண்— அபிஸந்திகளிலே, கண்ணென்று ஸப்தம்யர்த்தாவ்யயம், பெரியன்— அதிகனானவன், என்பக்கலிப்போது செய்தருளினவளவன்றிக்கே இன்னம் பஹுவிதரக்ஷணாபிஸந்திகளையுடையவனாயிராநின்றானென்றபடி. ॥அ॥

குன்றென்ன— உந்நதபர்வதங்களென்றுசொல்லலாம்படி, திகழ்— விளங்காநிற்கிற, மாடங்கள்— திவ்யஹர்ம்யங்களாலே, சூழ்— பரிவ்ருதமான, திருப்பேரான்— திருப்பேரென்கிற திவ்யநகரத்தையுடையவனான பரமபுருஷன், இன்று— அநாதியாகநான் ஸம்ஸரியாநிற்கச்செய்தேநடுவே நிர்ஹேதுகமாகவின்றைக்கு, யாத்ருச்சிகஸாக்ஷாத்கரத்திற்கிப்பாலப்பட்ட காலத்திலென்றபடி. என்னை— 'அஸந்நேவ ஸ பவதி' என்கிறபடியே ஸம்பந்தஜ்ஞாநமுமில்லாமையாலே அஸத்கல்பனாய்க்கிடந்தவென்னை, பொருளாக்கி— வஸ்துவாக்கி, 'ஸந்தமேநம் ததோ விது:' என்கிறபடியே ஸவிஷயஜ்ஞாநப்ரதாநத்தாலே உஜ்ஜீவிப்பித்தென்றபடி. தன்னை— ஸத்தாக்களுக்கும் நிர்வாஹணீயனான தன்னை. என்னுள்— அதிஹேயமான வென்னெஞ்சிலே, உள்— ஸாக்ஷம், வைத்தான், 'யந்தரவிதேதவி நிவேசயதி' என்கிறபடியே யோகிகள் ப்ரத்யாஹாராதி ஸாதநங்கள்பண்ணுகிறாப்போலே நானொன்றும்பண்ணாட்டாதே அஸத்கல்பனாய்க்கிடக்கச்செய்தே தான்தானே கொண்டுவந்துவைத்தருளினான், தான்புகுந்தானென்னாதே தான்வைத்தானென்கிறவித்தால் உபநிதியை நலலவிடந்தேடிவைத்தாப்போலே தானென்னெஞ்சிலேபுகுந்து தனக்குக்ஷேமமாக நினைத்திருந்தானென்றபடி. பொருளாக்கியென்கிறவிடத்தில் ஸம்பந்தஜ்ஞாநோத்பாதநமும் என்னுள்வைத்தானென்கிறவிடத்தில் நிரதிசயபோக்யவஸ்துவான நிரந்தரஸாக்ஷாத்காரமும் விவக்ஷிதமாகையால புநருக்தியில்லை, இன்று என்னுள்வைத்தானென்கிறவித்தாலே இது நிர்ஹேதுகமாகச் செய்தருளினானத்தனைபோக்கி யிதுக்கு நானொருஹேதுவும் காண்கிறிலேனென்று தாத்பர்யம், என்னைப்பொருளாக்கி தன்னையென்னுள்வைத்தானென்கிற உபந்யாஸத்தாலே ஈச்வரனுடைய பரஹிதப்ரவணத்வத்தைச் சொல்லித்தாய்த்தகையாலே அவனுடைய பரஹிதப்ரவணதாரூபமான காருண்யமொழிய வேறொருகாரணங்கண்டிலேனென்று வாக்யத்துக்கு அபிப்ராயம், இங்கு திருமாலிருஞ்சோலைமலையென்

மூ—குன்றென்னத் திகழ்மாடங்கள் சூழ் திருப்பேரான்* ஒன்றெனக்கருள் செய்ய வுணர்த்தலுற்றேனே* ||௯||
உற்றேனுகந்து பணிசெய்துனபாதம்* பெற்றேனீதேயின்னம் வேண்டுவதெந்தாய்*

ஆ— ஸர்வேச்வரனாயிருக்கிற விவனிதுக்கு முன்பநாதியான காலமெல்லாமென்னைவிட்டெங்ஙனே யாறியிருந்தானென்று கேட்கிறாரென்றுமாம். ||௯||

(உற்றேன்) எம்பெருமானொருத்தரங்காணாமை உம்முடைய திறத்தில் நான் செய்த செயலெல்லாம் நீர் சொன்

இ—தீத்யாதியால்) அதில் யாரகனாயிருக்கிறவிவனென்னுமளவாலே ப்ரச்னவாக்யமுமிதுக்கு முன்பித்யாதியாலே த்விதீயவாக்யமும் கேட்கிறேனென்கிறவித்தாலே த்ருதீயவாக்யமும் வ்யாவ்ருத்தம், இந்தயோஜனையில் கீழ்ப் பாட்டுக்களிலே ஸாக்ஷிகமாகவவன் தம்பக்கல் பண்ணின ஸௌசீல்யங்களையநுஸந்தித்து விஸ்மயித்தவர் இப்பாட்டிலே தம்பக்கலித்தனை வாத்ஸல்யனாயிருக்கிறவவன் அநாதிகாலமென்னைவிட்டெங்ஙனே யாறியிருந்தானென்று விஸ்மிதராகிறாரென்று ஸங்கதிகண்டு கொள்வது. ||௯||

✳ பத்தாம்பாட்டு. ✳

இப்படியவனுடைய கைங்கர்யத்தாலே ஸகலஸம்பத்துகளையும் பெற்றேனென்று தாமிப்போது பரிபூர்ணராயிருக்கச்செய்தே 'ஈதேயின்னம் வேண்டுவதெந்தாய்' என்றும் ப்ரார்த்திக்கை ப ஸம்பந்தமன்றோவென்ன வதரிப்பிக்கிறார் (எம்பெருமானித்யாதியால்) காணாமை என்றது- காணாமையாலே

ஈ—வ்ருத்தியாலே யவனுடைய நிரங்குசஸ்வாதந்த்ர்யஞ் சொல்லிற்றாகிறதாகையாலே யவனுடைய ஸ்வாதந்த்ர்ய மொழிய வேறொரு காரணங்கண்டிலேனென்று வாக்யார்த்தம், தடுமாற்றவினைகளென்கிற பூர்வவாக்யத்தாலே யவனுடைய ஸ்வாதந்த்ர்யமொழியவும் தம்பக்கலொரு காரணம் ஸித்தமாகையாலே யவனுடைய ஸ்வாதந்த்ர்யமொழிய வேறொரு ப்ரதாநகாரணம் கண்டிலேனென்றிவ்வாக்யத்துக்குப் பரமார்த்தம், எனக்கு- இப்படிச்சொல்லாநிற்கிறவெனக்கு, ஒன்று அருள் செய்ய- ஒருத்தர மருளிச்செய்கைக்காக, உணர்த்தல்- விஜ்ஞாபநத்தை, உற்றேன்- கிட்டினேன், உறுகை- கிட்டுகை, விஜ்ஞாபநம்பண்ண உத்யோகியாநின்றேனென்றபடி. இதற்கு ஒருத்தரமருளிச்செய்யவேணுமென்றவனைக்கேட்க உத்யோகியாநின்றேனென்கை. விஜ்ஞாபநம்பண்ணுகிறேனென்னாதே விஜ்ஞாபநம்பண்ண உத்யோகியாநின்றேனென்றது இப்ப்ரச்நம் ப்ரத்யுத்தரமருளிச்செய்கைக்கு சக்யமல்லாததாகையாலே யிதையவன் ஸந்நிதியிலே கண்டு வெளிசொல்லுகை யனுசிதமன்றென்று தோற்றுவிக்கைக்காக இப்படி நான் ப்ரச்நம்பண்ணினால் ஸர்வஜ்ஞனானவனும் இதுக்குத்தரமருளிச்செய்ய முடியாதென்றபிப்ராயம். இது ப்ரதமயோஜனை. த்விதீயயோஜனைக்கு ஸ்வாபதேசம், குன்றென்னத் திகழ்மாடங்கள் சூழ் திருப்பேரான்- பூர்வவத், இன்று- ஸாக்ஷிக ஸாக்ஷாத்காரத்துக்கப்பால்பட்ட இக்காலத்திலே, என்னைப்பொருளாக்கி- பூர்வவத், தன்னையென்னுள்வைத்தான்- தானென்னுள்புகுந்தானென்னாதே தன்னையென்னுள் வைத்தானென்று சொன்னத்தால் புறம்போரிடத்திலும் ஸ்திதியற்றுத் தடுமாறுகிற தன்னை யென்னெஞ்சிலே கொண்டுவந்து நிலைநிறுத்தினனென்றபடி. என்னையொரு க்ஷணம் பிரியில் தரிக்கமாட்டாதவனாய் என்னெஞ்சிலே வந்து புகுந்து ஸாத்மீகனானானென்கை, அன்று- முன்புள்ள அநாதிகாலமெல்லாம், இதற்குப் புணர்த்ததென்கிறத்தோடே அந்வயம். என்னை- இப்படித் தனக்கத்யந்தாபிமதனாயிருக்கிற வென்னை, புறம்போகப்புணர்த்தது- தன்னோடு கலவாதே விஷயாந்தரங்களிலே போமபடி பண்ணிவைத்தது. புணருகை- ரக்ஷிக்கை, என்செய்வான்- என்னசெய்யக்கடவானாய், எப்படி ப்ரயோஜனம் பண்ணக்கடவனாயென்றபடி. என்னோடு தான் ஸம்ச்லேஷியாதே என்னை விமுகனாக்கி எங்ஙனே யாறியிருந்தானென்று விஸ்மயிக்கிறபடி, த்ருதீயவாக்யே பூர்வவத். ||௯||

உற்றேன்- கிட்டினேன், உன்திருவடிகளை யநுபவிக்கப்பெற்றேனென்றபடி. உகந்து பணிசெய்து- ப்ரீதியுக்தராய் கைங்கர்யம்பண்ணி, ப்ரீதிபூர்வகமாய்க் கொண்டு திருவாய்மொழி பாடுகையாகிற வாசிக கைங்கர்யம்பண்ணியென்றபடி. உனபாதம்- உன் திருவடிகளை, பெற்றேன்- அடைந்தேன், அநுபவிக்கப்பெற்றேனென்றபடி. எந்தாய்- ஸ்வாமிந், ஈதே- இதுவே, இந்தவுன் திருவடிகளை யநுபவிக்கையேயென்றபடி, இன்னம்- மேல்யாவத்காலமும், வேண்டுவது- எனக்கபேக்ஷிதமானது, ஈதேயென்கிறவிடத்தில் ...

மூ—கற்றார்மறைவாணர்கள் வாழ்திருப்பேரார்க்கு* அற்றாரடியார்தமக்கல்லல்நில்லாவே* ॥ம॥
நில்லாவல்லல்நீள்வயல்சூழ் திருப்பேர்மேல்* நல்லார்பலர்வாழ் குருகூர்ச்சடகோபன்* சொல்லார்தமிழாயிரத்

ஆ—னபடியே நிர்ஹேதுகமாகவே செய்தேன், அதுநிற்க இனிநான்செய்யவேண்டுவதென்னென்ன உன்திருவடிகளைப்பெற்றேன் பெறுகிறேனுகந்துபணிசெய்துகொண்டுன் திருவடிகளைப்பெற்றேன், இன்னமுன்திருவடிகளிலடிமைசெய்யுமிதுவேயெனக்கு வேண்டுவதென்று ஆழ்வார்சொல்ல வெம்பெருமானுமப்படியே செய்கிறோமென்றருளிச்செய்ய ஆழ்வாரும் திருப்பேர்நகரான்திருவடியைப் பற்றினார்க்கொரு து:க்கமில்லையாகாதேயென்கிறார். ॥ம॥

(நில்லாவல்லல) அவன்திருவடிகளை யாச்ரயித்தார்க்கல்லல்நில்லாவே இது நிஸ்சிதமென்றுகொண்டு இத்

இ—என்றபடி. இதற்குவேண்டுவதென்னென்ன என்கிறத்தோடேயந்வயம். நிர்ஹேதுகமாகவென்றது- என்காரணமும் ஸ்வாதந்த்ர்யமொழிய வேறுவ்யாஜகாரணமன்றிக்கேயென்றபடி. உற்றேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்திருவடி இத்யாதியால்) இவ்வர்த்தத்தையே உபாதம்பெற்றேனென்று பின்னையுஞ்சொன்னது உகந்துபணிசெய்தென்கிற ப்ரீதிகார்யகைங்கர்யவைபவ விஸ்ரம்பார்த்தவாதமென்றுகாட்டுகிறார் (பெறுகிறேனித்யாதியால்) பெறுகிறேனென்றது- க்ரியாவசமன்று பெறுகிறநானென்றபடி. எந்தாயென்று ஸம்போதித்து விண்ணப்பஞ்செய்கிறதாயிருக்கையாலே யுனக்குத்தாரடியார் தமக்கென்று நிர்தேசிக்கை யுசிதமாயிருக்க திருப்பேரார்க்கென்று பரோக்ஷமாகநிர்தேசிக்கை யஸங்கதமன்றோவென்ன வஸங்கதிபரிஹரிக்கிறார் (எம்பெருமானுமித்யாதியால்) இப்படிநிர்தேசிக்க அவனப்படிச்செய்கிறோமென்றவாறே மிகவும்ப்ரீதராய் அந்த ப்ரீதிபரவசத்தாலே யவனுடையகுணத்தை ஸ்வகதமாக வநுஸந்தியிக்கிறாராகையாலே பரோக்ஷமாக நிர்தேசிக்கிறாரென்றதாயிற்று. இல்லையாகாதேயென்றது- இல்லையன்றோவென்றபடி. ॥ம॥

✳ நிகமனம். ✳

அநுஸந்தித்துஎன்கிறதற்கு சேஷவாக்யத்தில் க்ரியையோடேயந்வயம் திருப்பேர்மேலென்கிறதற்கு

ப—யாறணதால் மற்றொரு ஸாதநாந்தரமும்வேண்டா என்றபடி. அப்படியே செய்கிறோமென்றெம்பெருமானருளிச்செய்ய ஸ்ரீதராயவனுடைய கல்யாணகுணத்தைத்தாமாக தமக்குள்ளேபேசிய நுஸந்திக்கிறார்மேல், கற்றார்- அப்யஸித்தவர்களான, ஆசார்யோபதேசத்தாலே ஸகலசாஸ்த்ரங்களையு மப்யஸித்தவரானவென்றபடி. மறைவாணர்கள்- வேதநிர்வாஹகர்கள், மறை- வேதம், வாணர்- நிர்வாஹகர், ப்ரஸ்துதங்களான வேதார்த்தங்களையெல்லாம் பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய குதர்க்க தூஷிதங்களாகாதபடி நிர்வஹிக்கவல்ல ஸ்ரீவைஷ்ணவர்களென்றபடி. வாழ்- வாழாநிற்கிற, பகவதநுபவத்தாலே ஆனந்தியாநிற்கிற என்றபடி. திருப்பேரார்க்கு- திருப்பேரென்கிற திவ்யநகரத்திலிருக்கிற ஸர்வேச்வரனுக்கு, அற்றார்- அற்றவர்களான. ஸ்வதேஹ ஸ்வ்ர்க(?) எனகிறவர்த்தத்தையும் தேவதாந்தரசேஷத்வத்தையும் தவிர்ந்து அவனுக்கே சேஷமென்று தீர்ந்திருக்குமவரான என்றபடி. அடியார்தமக்கு- ஆச்ரிதஜநங்களுக்கு, தம்மென்று ஸ்வார்த்தகம். அல்லல்- து:க்கங்கள், பகவதநுபவாலாபது:க்கங்களென்றபடி. நில்லாவே- நிற்கமாட்டாவே, ஆச்ரயணத்தாலிதில ஸம்சயமில்லையென்றபடி. ॥க0॥

அல்லல- து:க்கங்கள், ஸர்வேச்வரனுடைய கடாக்ஷாநுபவாலாபநிமித்த து:க்கங்களென்றபடி. நில்லா- நிற்கமாட்டா, திருப்பேரான்திருவடிகளை யாச்ரயித்தார்க்கிதிலேஷ:, கீழ்ச்சொன்னதை ப்ரீதிபரவசத்தாலே பின்னையுமநுஸந்தித்தபடி. நீள்வயல்- நீண்டவயல்களாலே. அதிவிஸ்தீர்ணங்களான கழனிகளாலேயென்றபடி. சூழ்- வேஷ்டிதமான, திருப்பேர்மேல்- திருப்பேரென்கிற திவ்யநகரத்தைவிஷயமாக, இதற்கு சொல்லென்கிறத்தோடே யந்வயம். நல்லார்- கல்யாணகுணாஸ்ரயரான ஸ்ரீவைஷ்ணவர்கள், பலர்- அநேகம்பேர், வாழ்- வாழாநிற்கிற, திருவாய்மொழியைக் கேட்டநுபவித்தாநந்தியாநிற்கிற என்றபடி. குருகூர்ச்சடகோபன்- திருநகரியையுடையவரான வாழ்வாருடைய, சொல்- உக்தியான, இது பத்துக்குவிசேஷணம். ஆர்- பூர்ணமான, ரஸவத்தையையுடைத்தான என்றபடி. தமிழாயிரத்து- த்ராவிட ரூபமான

மூ — துளிப்பத்தும்* வல்லார்தொண்டராள்வதுசூழ்பொன்விசும்பே* ॥௧௧॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ — தையே பின்னையும் அநுஸந்தித்துத் திருப்பேரை ப்ரதிபாதித்தவித்திருவாய்மொழி வல்லாரிட்டவழக்கு திருநாடென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ — சொல்லென்கிறததோடேயமயமென்று நினைத்தருளுகிறார் (திருப்பேரைப்ரதிபாதித்தவென்று) ததீய வைபவத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வல்லாரித்யாதியால்) ॥௧௧॥

ஈ — ஸங்க்ரஹத்தில், இப்பத்தும் இந்தப்பத்துப்பாட்டுக்களையும், வல்லார்- அப்யஸிக்கவல்லவர்களான, தொண்டர்- ஸாத்விகர்களானவர்கள், ஆள்வது- ப்ரஶாஸநம்பண்ணுமது, சூழ்- வ்யாப்தமான, அபரிச்சின்னமான என்றபடி. பொன்- அப்ராக்ருதமான, பொன்ஸப்தமிங்கு லக்ஷணவ்ருத்த்யா உஜ்ஜ்வலவாசகம். விசும்பு- ஆகாசம், பரமவ்யோமஸப்தவாச்யமான பரமபதமென்றபடி. இந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தை த்ருணீகரித்து பரமபதத்தை ப்ரஶாஸநம்பண்ணும்படி பாகவதசேஷத்துக்கு அர்ஹராய் ஸ்வதந்த்ரராவாரென்று பட்டர் தாத்பர்யம். ॥௧௧॥

ஜ்ஞாநவைராக்யபூஷணஸேவதி ஸ்ரீவேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:.



ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(திருமாலிருஞ்சோலைமலை.)

லக்ஷ்மீகாந்தத்வயோகாத்விபதிஸகிதயா திவ்யதேஶஸ்திதத்வாத்
மோக்ஷோத்யமாத் தத்ஸங்கல்பஸமயதயா ஸர்வதாஸந்நிதாநாத்।
த்ருஷ்ட்யந்தஸ்ஸந்நிவாஸாத் அதிவிதரணத: ஸ்வஸ்வபாவப்ரகாஶாத்
ஸ்வார்த்திகாத் த்ருஷ்டிதீக்ஷம் ஸ்வயமநுபவிதா ஸ்ரீவத்ஸவக்ஷா ॥௧௧௧॥

(லக்ஷ்மீகாந்தத்வயோகாத்) திருமால்வந்து- பெரியபிராட்டியாருக்கு வல்லபனாகையாலும், (விபதிஸகிதயா) காரேழ்கடலேழ்மலையேழுலகுண்டும்- ப்ரளயாபத்ஸகனாகையாலும், (திவ்யதேஶஸ்திதத்வாத்) கொடிக்கோபுரமாடங்கள்சூழ்திருப்பேரான்- கொடிகளாலே யலங்க்ருதங்களான கோபுரப்ராஸாதங்களாலேசூழப்பட்ட திருப்பேரிலே யெழுந்தருளியிருக்கையாலும், (மோக்ஷோத்யமாத்) சேண்விசும்புதருவானே- பரமபதத்தைத்தர வாஞ்ச்யனாயிருக்கையாலும், (தத்ஸங்கல்பஸமயதயா) வானேதருவானெனக்காயென்னோடொட்டி- நிர்ப்பந்தமாக ஸமயம்பண்ணுமவனாகையாலும், (ஸர்வதாஸந்நிதாநாத்) திருப்பேர்நகரானித்யாதி- திருப்பேர் திருமாலிருஞ்சோலை ஸ்ரீவைகுண்டம் இவைகளிலே ஸந்நிஹிதனாயிருக்கையாலும், (த்ருஷ்ட்யந்தஸ்ஸந்நிவாஸாத்) கண்ணுள்நின்றகலானே- அவர்களுடைய கண்வட்டத்திலேநின்றும் பேராமையாலும், (அதிவிதரணத:) நெருந்திங்கட்பெரியன்- அவர்களுக்குபாம்ஹாயிகமாகத்தன்னை ப்ரஸாதிக்கக்கொடுக்குமவனாகையாலும், (ஸ்வஸ்வபாவப்ரகாஶாத்) இன்றென்னைப்பொருளாக்கியித்யாதி- இஸ்ஸம்ஸாரிசேதநனை தானநாதிகாலம் அநாதரித்து இன்று தரிக்கைக்குத் தன்னுடைய ஸ்வாதந்த்ர்யகாருண்யங்களொழிய வேறு ப்ரயோஜநமில்லையென்று தன் ஸ்வபாவத்தை ப்ரகாஶிப்பிக்குமவனாகையாலும், (ஸ்வார்த்திகாத்) ஈதேஇன்னம்வேண்டுவதெந்தாய்- ஸர்வர்க்கும் நிரபாயிகஸ்வார்த்தியாகையாலும், திருப்பேர்நகரானிச் சேதநவிஷயத்திலே ஸ்வஸ்வபாவத்தாலே தானேஸந்துஷ்டனாகிறானென்று "திருமாலிருஞ்சோலைமலை" என்கிறதஶகத்திலே ஆழ்வாராலே தெளிவிக்கப்பட்டதென்கிறார். ॥௧௧௧॥

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

பத்தாம்பத்தில் எட்டாந்திருவாய்மொழிமுற்றிற்று.



# ஒன்பதாந்திருவாய்மொழி.

ஆ— (சூழ்விசும்பு) இப்படி நிர்ஹேதுகமாக எம்பெருமானோடே ஸம்ஶ்லிஷ்டரானவாழ்வார் தாம் திருநாட்டேற வெழுந்தருளும்படியையுந் தாமெழுந்தருளும்போது ஸகலலோகங்களும் தம்மைக்கொண்டாடும்.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

இ— இப்படி யாத்ருச்சிகமாக வெம்பெருமான் தம்மோடு கலந்தருளினபடிகளைக்கண்டு பிறந்த நிரவதிகப்ரீதியுள்ளடங்காமையாலே யத்தைப்பேசிக்கொண்டு அநுபவித்தவாழ்வார் அநந்தரமித்திருவாய்மொழியிலே ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டு தேவஸேநாபத்யாதிகளும் ஸகலலோகங்களும் தேவர்களும் பஹுமாநபுரஸ்ஸரமாக பூஜித்தார்களென்றிப்புடைகளிலே விசித்ரமாகச் சிலவற்றை யபிதிக்கத்தொடங்குகை யஸங்கதமன்றோவென்ன வ + ர் (இப் × ல்), திருநாடேற விஸ்ருதி தாமினி யநந்தரகாலத்திலே திருநாட்டுக்கெழுந்தருளப் புகிறபடியையு மிப்போது ஸகலலோகங்களும் தம்மைக்கொண்டாடப்புகிறபடியையு மிப்போது தம்முடைய திருவுள்ளத்தாலே ஸாக்ஷாத்கரித்தென்றபடி. இப்படி ஸவிஷ்யத்துக்களான விஷயங்களை 'தூரியமுழக்கின' என்றும் 'தொழுதனருலகர்களென்றும்' இருப்பிடம்வகுத்தனரென்றும் கீதங்கள்பாடினரென்றும் வியந்தனரென்றும் ஏந்தினரென்றும் இப்புடைகளிலே ஸம்பூதாஸங்களாக நிர்தேஶித்தது தமக்கிவைமுற்றிப்பிறந்த ஸத்யஸாக்ஷாத்கார வைஶத்யத்தாலே யிவையித்தனையுமிப்போதே தாம்பெற்றதாகவே தமக்குத்தோற்றுகையாலே சொன்னதென்றுகருத்து. அநந்யவைஶத்தாலேயென்றது- தம்மைவிஶேஷித்து நிர்தேஶியாதே 'நாரணன் தமரை' யித்யாதியாகச்சொன்ன ஸ்ரீவைஷ்ணவஸமூஹ நிர்தேஶத்தாலேயென்றபடி. இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற கல்யாணஸம்பத்ரோகங்களிதற்குக்கீழ் தமக்கு நடந்த நாநாகல்யாணப்ராதுர்பாவவிதிகள்போலே, தமக்கொருவருக்கே நியதங்களாயிருக்கையன்றிக்கே தம்முடைய ஸம்பந்திகளுக்குங்கூட ஸாதிகளாயிருக்கிறபடியை தாமிப்போது ஸாக்ஷாத்கரிக்கையாலே தம்மையொருவரையே நிர்தேஶியாதே 'நாரணன் தமரை' யித்யாதியாலே ஸ்ரீவைஷ்ணவஸமுதாயத்தை நிர்தேஶித்தருளுகிறாரென்றுகருத்து. செஞ்சொற்கவியிலே பேசியல்லது அறிக்கவொண்ணாதபடி தமக்குப்பிறந்த நிரவதிகப்ரீதியாலேயவன் தம்முடைய திருமேனியிலுங்கூட ஸத்ருஶ்யவணுப்பைக்கொண்டு கலந்தருளினபடியையும் திருமாலிருஞ்சோலையென்கிற திருவாய்மொழியில் ஸாதுயோகிகளுக்கு ஸம்பவிக்குமவையான அர்சிராதிகமநகல்யாணபரம்பரைகள் தமக்கவனுடைய ஸஹஜகாருண்யவிஶேஷத்தாலே ஸித்தங்களாயிருக்கிறபடியையும் பேசி யத்தாலேயபிநந்தித்துநின்ற வாழ்வாரருள்பெறுவாரில்படியே தமக்குத்திருநாட்டைத்தந்தருளுகையிலே கூவிக்கொள்ளவும். தம்முடையவாஜ்ஞா ப்ரதீக்ஷனாயிருக்கிறவனுடைய திருவுள்ளத்திற்கநுகுணமாகத் தாமினியிப்போதே திருநாட்டேறப்போகவேணுமென்று ஸங்கல்பிக்க வத்தாலே ஸாதிதஹ்ருதயனான பரமபுருஷன் திருநாட்டிலுள்ள போகாநுபவத்திற்கீடாக, அவர்க்குமிகவும் விடாய்பிறக்கைக்காக ஸாக்ஷாத்ப்ரவேஶத்திற்கு, எழுந்தருளுகிற ஆழ்வார்க்கு ஸூக்ஷ்மமாகவெதாஜங்களிலே ப்ரவேஶமாய் அர்சிராதிமார்க்கமான அதிவாஹிகஸத்காரப்ரகாரங்களையு மங்குள்ள ஸ்வர்காதிஸ்தலங்களாலேபோனாற்கு ப்ராப்யமாய் 'தத்விராஜாம் ஸ்ரவணாபஸ்த்ஸாதாஸாத' மென்னும்படியான பரமபதத்தையும் நித்யஸூரிகள்வந்தாதரிக்கும்படியையும் பிராட்டிமாரும் ஸ்ரீவைகுண்டநாயனான தானுமெதிரேவந்தாதரிக்கும்படியையும் "ஆநந்தமேகாதரணம் ஸ்ரீமஹோதவதியாமவயோரமாஹாராஜூநம்" என்கிற திவ்யாஸ்தாநத்திலே அதிஸ்தாநமான அநந்தபோகபர்யங்கத்திலே ராஜகுமாரியின்மேலே ஊதகமிருந்தாப்போலே, ஏழுலகுந்தனிக்கோல்செல்ல வீற்றிருந்தருளி ஸம்வ்யுபதிவ்யபரிஜந பரிவ்ருதஸ்ஸம்ப்ரேக்ஷணாதிவரிஷ்டனைப் ஸ்ரீமந்நாதஸாதி திவ்யமஹிஷீஸமேதனைக்கொண்டு, தமக்குப்ராப்யனைப் புகிறபடியையும் "அடியார்கள் குழாங்களுடன் கூடுவதென்றுகொலோ" என்று பரமப்ராப்யரான நித்யஸூரிகள்நடுவே தாமாநந்திக்கிறாராயிருக்கப் புகிறபடியையும் தம்முடைய திருவுள்ளத்திலே ப்ரத்யக்ஷமாம்படி. ப்ரகாஶிப்பித்தருளக்கண்டு மிகவும் ப்ரீதராய் அந்த ப்ரீதியுள்ளடங்காமையாலே யந்தவர்சிராதிமார்க்கத்திலுள்ள கல்யாணபரம்பரைகளைப்பேசி யநுபவிக்கிறாரென்றுகருத்து. இத்தால், அர்சிராதிகதிப்ராபகமென்கிற அர்த்தஸமர்ப்பணமித்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமாயிற்று..

மூ— சூழ்விசும்பணிமுகில்தூரியமுழக்கின* வாழ்கடலலைதிரைகையெடுத்தாடின* ஏழ்பொழிலும்வளமேந்தியவென்னப்பன்* வாழ்புகழ்நாரணன்றமரைக்கண்டுகந்தே* ௧

நாரணன்றமரைக்கண்டுகந்துநன்னீர்முகில்* பூரணபொற்குடம்பூரித்ததுயர்விண்ணில்*

ஆ— படியையும் திருவுள்ளத்தாலே ஸாக்ஷாத்கரித்த ஹர்ஷாவேஶத்தாலே பேசுகிறார், திருநாடேறப்போகையிலே உத்யுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டுகந்து அசேதநமான மேகங்களுங்கூட விலர்கள் போகக்கடவிய ஆகாஶத்தையெல்லாம் ஆவரித்துக்கொண்டுநின்று தூர்யகோஷத்தைப்பண்ணின, கடல்களாகிறவை திரைகளாகிற கையையெடுத்தாடின, இப்படி ஸர்வலோகங்களும் மங்களமானசெயல்களைச் செய்தனவென்கிறார். ௧.

முதற்பாட்டு.

இ— நாரணன்தமரைக்கண்டு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாடேறவித்யாதியால்) வழிபோதுவைகுந்தர்க்கு என்று மேலே சொல்லுகையாலே திருநாடேறப்போக உத்யுக்தரென்றவிடமிங்கு விவக்ஷிதமென்றுகருத்து. சூழ்விசும்பணியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவர்களையித்யாதியால்) தூரியமுழக்கின என்னுமதையுரைக்கிறார் (தூர்யகோஷேத்யாதியால்) ஏழ்பொழிலும்வளமேந்திய என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) ௧.

ஶ— என்னப்பன் - எனக்கு உபகாரகனான, வாழ்புகழ் - வாழ்விக்கும்புகழுடையவனான, ஆஶ்ரிதரை உஜ்ஜீவிப்பிக்கும் கல்யாணகுணங்களையுடையவனென்றபடி. நாரணன் தமரைக்கண்டு - நாராயணனுடைய அஸாதாரணஶேஷபூதரைக்கண்டு, தமரென்று - ஸ்வகீயர், பரமபதத்திற்குப் போகவுபக்ரமிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டு என்றபடி. ராஜபுத்ரன்புறப்பட்டால் ராஜகீயரெல்லாருமாதரிக்குமாப்போலே இவர்கள் நாராயணனுக்கு அஸாதாரணஶேஷபூதராகையாலே யிவர்களைக்கண்டால் மஹநீயமான ஸர்வஜகத்திற்குமாதரிக்கப்ராப்தமிறே என்று கருத்து. உகந்து - மிகவும் ஸந்தோஷித்து, இதற்கு முழக்கின என்கிறத்தோடே அந்வயம். ஆதரியாதொழியில் நம்மை ஸர்வேஶ்வரன் கொல்லுமென்றும் பீதியாலே செய்தனவல்ல, இவர்கள் ஸர்வஶேஷிகளென்று மிகவுமுகந்துசெய்தனவென்று கருத்து. சூழ்விசும்பணி - வ்யாப்தமான ஆகாஶத்திற்காபரணங்களான, விசும்பு - ஆகாஶம், அணி - ஆபரணம், இந்த பாகவதரைக்கண்டுகப்பாலே அதிவிஸ்தீர்ணமான ஆகாஶமெங்கும் மேகங்கள் ஆவரித்துக்கொண்டு நிற்கிறதென்று கருத்து. முகில் - மேகங்கள், தூரியம் - வாத்யத்தை, இங்கு வாத்யஸாமாந்யாகாரத்திற்கு ஸம்ஜ்ஞாயாம்ஶாவம். படஹதுந்துபிப்ரப்ருதிவாத்யங்களையென்றபடி. முழக்கின - த்வநீகரித்தன, முழக்குகை - த்வநீகரிக்கை, படஹதுந்துபிப்ரப்ருதிவாத்யகோஷத்தைத் தாங்கள்பண்ணினவென்றபடி. ஆழ் - கம்பீரங்களான, கடல் - ஸமுத்ரங்கள், அலைதிரை - ஹர்ஷப்ரகர்ஷத்தாலேயலையாநிற்கிற தரங்கங்களாகிற, திரை - தரங்கம், கம்பீரங்களான ஸமுத்ரங்களுமிந்த பாகவதரைக்கண்டு ஹர்ஷத்தாலே க்ஷோபித்துக் கையாற்றினவென்று கருத்து. கையெடுத்து - ஹஸ்தங்களை ப்ரஹ்வமாக ப்ரஸரித்துக்கொண்டு, ஆடின - ந்ருத்தம்பண்ணிற்றின. ஏழ்பொழிலும் - ஸப்தத்வீபங்களும், பொழில் - த்வீபம், வளம் - ஸம்பத்தை, உபஹாரரூபங்களான மங்களவஸ்துக்களையென்றபடி. ஏந்திய - ஏந்திற்றன, இந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்காக தரித்துக்கொண்டுநின்றன என்றபடி. "[illegible]" என்கிறகணக்கிலே இந்த ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்ட அசேதநங்களும்கூட ஹர்ஷவிகாரங்களையுடைத்தனவென்று கருத்து. பொழிலென்று த்வீபவாஸிஜநங்களை லக்ஷிக்கிறதாகவுமாம். ௧

நாரணன்தமரைக்கண்டு - நாராயணனுடைய ஸ்வகீயரைக்கண்டு, நிரூபாதிகஶேஷியான ஸர்வேஶ்வரனுக்கு அஸாதாரணஶேஷபூதரானவர்களைக் கண்டென்றபடி, இங்கும் பரமபதத்துக்கெழுந்தருள உபக்ரமித்தவர்களையென்று விவக்ஷிதம், நல் - நல்லவையான, ஔதார்யஸ்வபாவ[illegible] ஶ்லாக்நீயங்களானவென்றபடி. நீர்முகில் - ஸஜலமேகங்கள், [illegible], உகந்து - மிகவும்ஸந்தோஷித்து, இதற்குப் பூரித்ததென்கிறத்தோடே அந்வயம், ஒருக்கால் தூரியமுழக்கினதோடே நின்றில்லை, உத்தரோத்தரம் ஸந்தோஷியாநின்றனவென்றுகருத்து. உயர் - உன்னதமான, தேவலோகத்திற்கு மேல்பட்டதானவென்றபடி. விண்ணில் - ஆகாஶத்திலே, பூரண - பூர்ணகும்பங்களான, [illegible]

மூ — எழுமினென்றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள்* வழியிதுவைகுந்தற்கென்றுவந்தெதிரே* ॥௫॥
எதிரெதிரிமையவரிருப்பிடம்வகுத்தனர்* கதிரவரவரவர்கைநிரைக்காட்டினர்* அதிர்குரல்முரசங்களலைகடல்முழக்கொத்த* மதுவிரிதுழாய்முடிமாதவன்றமர்க்கே* ॥௪॥

ஆ — முனிவர்கள்நின்றிசைத்தனரென்கிறார். ॥௫॥
(எதிரெதிர்) மதுவிரிதுழாய்முடிமாதவன் தமர்க்கிவர்களொருக்காலிங்கே ப்ரத்யவஸிக்கப்பெறுவது காணென்றுமாசையாலே யிமையவரெதிரெதிரிருப்பிடம்வகுத்தனர், ஸவித்ராத்யாதிவாஹிககணங்கள் பார்த்

இ — ஸத்காரங்களை அநுஸந்தித்தவரிப்பாட்டிலே ததூர்த்வ ஆதிவாஹிகலோகங்களிலுள்ளார்செய்யும் ஸத்காரங்களை அநுஸந்திக்கிறாரென்றுமென்று ஸங்கதியும்ஸூசிகை. ॥௫॥

*நாலாம்பாட்டு.*

தமர்க்குஎன்கிறதற்கு வகுத்தனர்என்கிறதோடே அந்வயம். ப்ரதமபாதத்தில ஸம்பந்தமருளிச்செய்கிறார் (இவர்களொருக்காலிக்காதியால்) ப்ரத்யவஸிக்கஎன்றது- விஶ்ரமிக்கஎன்றபடி. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸவித்ராதியால்) இத்தால்கீழ்ப்பாட்டிலே ஆதிவாஹிகலோகத்திலுள்

ஈ — வந்து என்கிறதோடே அந்வயம். ப்ரவாஹத்தைவர்ஷிக்கையாவது வர்ஷம்போலே ஆகாஶாவகாஶமெல்லாம் ஆச்சாதிக்கும்படி நிரந்தரமாக புஷ்பவர்ஷிக்கை. வைகுந்தற்கு- வைகுண்டத்தாற்கு, ஸ்ரீவைகுண்டத்தை பெறப்போகிறவற்கு என்னுதே ஸ்ரீவைகுண்டத்தாற்கு என்றதால் ஸம்ஸாரத்தில் பிறந்துவளர்ந்து வாழ்ந்திருந்த காலமெல்லாம் ப்ரவாஸிகளாய் பெருமாளெழுந்தபின்பு ப்ரவாஸம்தாங்கள் நெடுங்காலமிருந்தவிடமானவாரண்யமும் பரதேஶமாய் திருவயோத்யைதங்களுக்கு ஸ்வதேஶமாயிருக்குமாப்போலே யிவர்களுக்கு மநாதிவஸதியாயிருந்த விஶ்வக்ருதிஸதனம் தாங்கள்வழிதப்பிப்புகுந்துதிரிந்த ஸீக்ஷணாரண்யமாய் ஸ்ரீவைகுண்டமேதங்களுக்கு ஸ்வதேஶமாய்போருகிறார்களென்று கருத்து. வழியிதுஎன்று- ஸமீசீநமிதுவாயிருக்குமென்று, ஸ்ரீவைகுண்டத்தையேறப்போகுகைக்கு ஸமீசீநம் அவிச்சிந்நமானதாயிருக்கிறவிந்த ஸமீசீநமன்றோவென்று ஸநஸ்ஸில அநுஸந்தித்துக்கொண்டு என்றபடி. ஸாமவதவிஷயத்தில் ஸத்கரித்து நாம் க்ருதார்த்தராகவேணுமென்றுமாசையாலே யவர்கள்போம்வழியையிப்படி ஸநஸ்ஸாலே பராமர்ஶித்துக்கொண்டு என்கை. எதிரேவந்து- தந்தாமுடையவெல்லைகளைகடந்து எதிரேவந்து, முனிவர்கள்- ஸநநஶீலர்களான ஸநகாதிகள், இதற்கு இசைத்தனர் என்கிறதோடேயந்வயம். ஸநநஶீலராயிருப்பாருமிந்த ஸாமவதர்திறத்தில் ஸௌரவத்தாலேயந்த ஸநநியமத்தை தவிர்ந்தார்களென்றுகருத்து. எழுமினென்று- இங்ஙனேயெழுந்தருளவேணுமென்று, இருமருங்கு- உபயபார்ஶ்வத்திலும், மருங்கு- பார்ஶ்வம், இசைத்தனர்- பாடினார்கள், பாடினப்போலே ஸப்ரமாகச்சொன்னார்களென்றபடி. ॥௫॥

மதுவிரி- ஸப்ரவானது விஸ்த்ருதமாகாநிற்கிற, ஸகரந்தோத்கரம் ஸஞ்சரியாநிற்கிறவென்றபடி. துழாய்முடி- திருத்துழாயை முடியிலேயுடையவனான, மாதவன்- ஸ்ரீபதியினுடைய, இவர்களையெதிர்கொள்ளுகைக்காக பெரியபிராட்டியாரோடே திருத்துழாய்முதலான அலங்காரங்கள்மேல தன்னையலங்கரித்துக்கொண்டிருக்கிறவனுடையவென்றபடி. தமர்க்கு- ஸ்வகீயர்க்கு, அஸாதாரணஶேஷபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கென்றபடி. இதற்கு வகுத்தனரென்கிறதோடே யந்வயம், இமையவர்- அநிமிஷரானதேவர்கள், இங்கு அநிமிஷரென்றது ஸ்வாபாவிகவிஶேஷணமன்று, இவர்களை ஸத்கரிக்கையிலுள்ள வைகாக்ர்யத்தைப்பற்றச்சொன்னபடி, எதிரெதிர்- இவர்கள்போகிறவழிக்கு முன்னேமுன்னே, இருப்பிடம்- விடுதிகளை, வகுத்தனர்- தனித்தனியே நிர்மித்தார்கள், கதிரவர்- கிரணவான்களான, கதிர்- கிரணம், கதிருடையவர்- கதிரவர், அவரவர்- அந்தந்ததேவர்கள், கிரணஶாலிகளான அஹ்ராதிதேவதாதிதேவர்களென்று பர்யாயம், இதுஆதிவாஹிககணங்களுக்கெல்லாமுபலக்ஷணம், யத்வா- கதிரவர்- ஆதித்யாதிகர்கள், கதிரவனென்று ஆதித்யருக்குப்பேர், அவரவர்- தாங்கள்தாங்கள், தனித்தனியேஎன்றபடி. கை- ஹஸ்தங்களை, நிரைகாட்டினர்- பங்க்தியாகக்காட்டினர், பார்த்தெழுந்தருளவேணும் பார்த்தெழுந்தருளவேணுமென்றடைவடைவே வழியிலே கைகாட்டினார்களென்றபடி. அதிர்குரல்- அதிராநிற்கிற குரலையுடையவையான, அதிகம்பீரமாகத்வநிக்கிற த்வநியையுடைத்தானவென்றபடி. முரசங்கள்- பேரிஜங்கள், ஸக்கைங்களென்றபடி. அலைகடல்முழக்கு- அலையாநிற்கிற ஸமுத்ரத்தினுடைய, கோஷத்திற்கு, முழக்கு- கோஷம், ஒத்த- ஸத்ருஶங்களாயிற்றன, ஸமுத்ரகோஷ

